# ராஜன்பாபு நூற்றாண்டு

பீஹாரில் கடற்கரை கிடையாது. ஆனாலும் எங்கும் உப்புமண் கிடைக்கும். அதைச் சேகரித்து நீரில் கரைத்து வடி கட்டிப் பானையில் ஊற்றிக் காய்ச்சினால் உப்புக் கிடைக்கும். ராஜன்பாபு எங்கேயும் உப்பு காய்ச்சியதில்லை. காய்ச்சப்படுகிற இடங்களில் உப்பை வாங்கிக் கூட்டங்களில் ஏலம் போடுவார். அதனால் அவருக்குக் கைச் செலவுக்கும் பணம் கிடைத்தது. சட்டமும் மீறப்பட்டது. கிராமங்களில் சட்ட விரோதமான உப்புக்காய்ச்சும் வேலை ரகசியமாக நடைபெறுது. முக்கியமான இடத்தில் வாழை மரங்களை நட்டு, கொடிகள், தோரணங்கள் கட்டித்தான் காய்ச்சுவார்கள். போலீஸார் சுலபமாக வந்து பானை, அடுப்பு எல்லாவற்றையும் உடைத்து விட்டு ஆட்களையும் பிடித்துப் போய் விடுவார்கள்.

● ராஜேந்திரப் பிரசாத் கல்லூரியிலும் பள்ளியிலும் படிப்பில் முதல் மாணவனாகவே விளங்கியவர். அந்தக் கால 'எப்–ஏ' வகுப்பில் கல்லூரிப் பரீட்சை ஒன்று நடக்கும். அதில் தேர்ச்சி பெற்றால் தான் பல்கலைக் கழகத் தேர்வு எழுதவேண்டும். ராஜன் பெயர் தேர்ச்சி பெற்றவர்களின் பட்டியலில் அறிவிக்கப்படவில்லை. கல்லூரி முதல்வர்தான் பெயரை அறிவித்தவர். எப்படியோ தம் பெயர் விட்டுப் போயிற்று என்பதை அறிந்த ராஜன் ''என் பெயரைப் படிக்கவில்லையே.'' என்று கேட்டார். ''நீ தேறவில்லை'' என்றார் முதல்வர். ''இருக்க முடியாது. நான் தேறியிருப்பேன்'' என்றார் ராஜன். கோபித்துக் கொண்ட முதல்வர், ''வாயை மூடு. உனக்கு அபராதம் ஐந்து ரூபாய்'' என்று சொல்லிவிட்டார். மறுபடியும் ராஜன் ஏதோ சொல்ல, மறுபடியும் முதல்வர் அபராதத்தை அதிகம் பண்ண, ஏலக்கடை மாதிரி அபராதத் தொகை இருபத்தைந்து ரூபாய் வரை போய் விட்டது. ஆனால் அப்புறமாக முதல்வர் தம்முடைய பிழையை ஒப்புக் கொண்டார்.

● சிறைக் கைதிகளுக்குப் புத்தகங்கள் கொடுப்பதில்



○ சென்னையில் ராஜன்பாபு நூற்றாண்டு விழா. அமைச்சர் டாக்டர் ஹண்டே ராஜன்பாபு படத்தைத் திறந்து வைக்கிறார்.

எப்போதுமே கெடுபிடிகள் உண்டு ஹஜாரிபாக் சிறையில் ராஜன்பாபு இருந்த போது, நடந்த சுவையான சம்பவம் இது. சககைதி ஒருவருக்குப் பொருளாதாரம் சம்பந்தமான புத்தகம் ஒன்று தேவைப்பட்டது. 'டெக்ஸ்ட் புக் ஆன் பொலிடிக்கல் எகானமி' என்ற தலைப்புடைய அந்த நூல் உள்ளே வர அனுமதிக்கப்படவில்லை. தலைப்பில் 'அரசியல்' என்ற சொல் இருந்ததால் ஒரு அதிகாரி அதைத் தடுத்து விட்டார். ஆனால் 'ஏ. பி. ஸி. ஆஃப் கம்யூனிஸம்' என்ற புத்தகம் தடையின்றி உள்ளே நுழைந்து விட்டது. அதைப் பாடப் புத்தகம் என்று அந்தச் சிறை அதிகாரி எண்ணியிருப்பாரோ என்னவோ!

● ராஜேந்திரப் பிரசாத் தமிழ்நாட்டில் சுற்றுப் பயணம் வந்திருந்த நேரம். சுயமரியாதை இயக்கக்காரர்கள் சிலர் 'திரும்பிப் போ' கோஷத்துடன் கறுப்புக் கொடியை ஆட்டிக் கொண்டிருந்தார்கள்.

பிரசாத், சிரித்துக் கொண்டே கேட்டார். ''எத்தனை பேர் நான் திரும்பிப் போகக் கூடாது என்று விரும்புகிறீர்கள்?'' கூட்டமாகச் சூழ்ந்திருந்த மக்கள் பெருவாரியாகக் கையைத் தூக்கிப் ''போக வேண்டாம்'' என்று பதில் சொன்னார்கள். உடனே பேச்சைத் தொடங்கிய ராஜன்பாபு கேட்டார். ''இவ்வளவு பேர் நான் போகக் கூடாது என்று சொல்கிறார்கள். ஏதோ சிலர் திரும்பிப் போ என்கிறார்கள் நான் என்ன செய்யட்டும்?''

இந்தக் கேள்வியால் கூட்டம் முழுவதுமே சிரிப்பில் மூழ்கியது. திரும்பிப் போகச் சொன்னவர்களும் சேர்ந்து சிரித்தார்கள்.

பாபு ராஜேந்திரபிரசாத் சுயசரிதையிலிருந்து.

தொகுப்பு: சுப்ரபாலன்







✕ இந்திய விண்வெளி வீரர்களை பத்திரிகை நிருபர்கள் சந்திக்கின்றனர்

# விண்வெளியில் இந்தியன்

இந்திய விமானிகள் ராகேஷ் சர்மாவும் ரவிஷ் மல்ஹோத்ராவும் மாஸ்கோவுக்கு அருகிலுள்ள ஸிவ்யோத்ஸினி நகரில் யூரிககாரின் விண்வெளிப் பயிற்சி நிலையத்தில் விண்வெளிப் பயணத்திற்கான பயிற்சிகளைப் பெற்று வருகிறார்கள். இவ்வாண்டு ஏப்ரல் மாதத்தில் இவ்விரண்டு பேரில் ஒருவர் விண்வெளியில் பறக்கப் போகிறார். அந்த அதிர்ஷ்டசாலி யார் என்பது அநேகமாகக் கடைசி வரை தெரிய வராது. காரணம் இருவரில் யாரேனும் ஒருவருக்கு தும்மல் போன்ற ஒரு சிறிய தேக அசௌகரியம் ஏற்பட்டாலும் மற்றொருவர்தான் பயணமாவார்.

● பயிற்சியின் முதல் கட்டத்தில் வானியல், எரிபொருளியல், வழி நடத்திச் செல்லுதல் ஆகிய பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. இவற்றோடு பாரச்சூட் குதிப்பு, கடல் பயிற்சி, சிக்கலான சூழ்நிலைகளில் சட்டென்று முடிவெடுப்பது, கவனம்சிதறாமை, சென்ட்ரிஃப்யூஜ்என்னும் சுழலிகளில் அமர்ந்து எடையற்ற தன்மையை உணர்ந்து அனுபவிப்பது போன்ற செயல்முறைப் பயிற்சிகளும் உண்டு.

● ''இவ்விரண்டு எதிர்கால இந்திய விண்வெளி வீரர்களும் விண்வெளிப்போக்குவரத்து, மருத்துவம் ஆகியவை பற்றிய பரீட்சைகளில் சிறப்பாகத் தேர்வு பெற்றுள்ளனர். விண்கலக் கட்டுப்பாட்டுச் சாதனங்களைக் கையாள்வதிலும் அபார தேர்ச்சி பெற்றுள்ளனர்'' என்று பயிற்சி கேந்திரத்தின் துணைத்தலைவரான ஆந்திரியன் நிக்லயேவ் பாராட்டியுள்ளார்.

● பயிற்சிக் காலத்தில் பெரும் பகுதி, விண்கலத்தை ஆராய்வதிலும் அதை செலுத்தக்கற்றுக்கொள்வதிலுமே போய்விடும். இது பயிற்சியின் இரண்டாம் கட்டம். சலூஸ், சல்யூட் போன்ற பயிற்சிக் கலங்களில் இந்தப் பயிற்சிதரப்படுகிறது. கண்ணை மூடிக் கொண்டு விண் கலத்தை இயக்குகிற அளவுக்கு விண்வெளி வீரர் பயிற்சி பெற வேண்டுமாம்!

● முதன் முதலாகப் பறந்த யூரி ககாரின் 108 நிமிடங்களுக்கே விண்ணில் இருந்ததால் ஊண் உறக்கம் பற்றிக் கவலை ஏதும் இருக்கவில்லை. இப்போது அப்படி அல்ல.

● எடையற்ற நிலையில் சிறு விஷயங்கள் கூட சிக்கல்களைத் தோற்றுவிக்கக்கூடும். மேசைமேல் தட்டை வைத்துக் கொண்டு சாப்பிட முடியாது. காப்பியை ஆற்றினால் சிறுசிறு துளிகளாகச் சிதறி மிதக்க ஆரம்பிக்கும்! சாப்பாட்டைக் கூழ்போல் ஆக்கி பற்பசைக் குழாய் மாதிரி ஒரு குழாயில் அடைத்துக் கொடுப்பதே நல்லது என்று தீர்மானித்திருக்கிறார்கள்.

● விண்வெளி வீரர்கள் எடையற்ற நிலைக்குப் பழகிய பின்னர் அவர்களுடைய ஆரோக்கியத்திற்காகத் தினமும் இரண்டரை மணி நேரமாவது 'தேகப்பயிற்சி செய்ய வேண்டும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். தினசரி 3100 கிலோ – கலோரி ஆற்றலைக் கொடுக்கும் சத்துணவு அவர்களுக்குத் தரப்பட்டது. போகப் போக விண்வெளிப் பயணிகளின் உணவில் நீர் நீக்கப்பட்ட பழங்களும் சேர்க்கப்பட்டன. பழரசங்கள் ஒரு தனிவகையான குடுவைகளில் அளிக்கப்பட்டன.

● சல்யூட் விண்வெளி நிலையங்களில் விமானிகள் பல நாட்கள் தங்க வேண்டியிருப்பதால் குளியல் டாய்லெட் வசதிகளும் இன்றியமையாதவை. ஒருபிளாஸ்டிக் பைக்குள் பயணி உட்கார்ந்து கொள்ளத் தன்

ணீர் விசையுடன் உள்ளே பீய்ச்சப்பட்டு அவருடைய உடல் கழுவப்படும். கழிவு நீர் அழுத்தப் பம்பு மூலம் வெளியேற்றப்படும்.

● விண் நிலையத்திற்குள் நடமாட நீந்துவது ஒன்றே வழி: ஏதாவது ஒரு பரப்பில் காலை வைத்து உதைத்துக் கொண்டு தேவையான திசையில் நீந்த வேண்டும். எடையற்ற நிலையில் கால்களிலிருந்து ரத்தம் மற்ற பகுதிகளுக்குச் சென்று விடுவதால்கால்கள் சில்லிட்டுப் போகும். இதைத் தவிர்க்க மென்மையான கம்பளி பூட்ஸுகள் அணிவதுண்டு.

● எடையற்ற நிலையில் உடலுறுப்புக்களின் இயக்கத்தில் பல மாறுதல்கள் உண்டாகும். ரத்தம் தலைக்குப் பாயும்; தசைகள் சுருங்கும்; எலும்புகளின் கூட்டமைப்பு மாறும்; மனிதனின் இயக்க நிலையும் செயல் வேகமும் பாதிக்கப்படும். பயணத்தின் ஆரம்ப நாட்களில் இந்த விளைவுகள் அதிகமாயிருக்கும்.

● விண்வெளிக்கலம் புறப்படுமுன் டாக்டர்கள் அடங்கிய குழு பயணிக்கு விண்வெளி உடையை அணிவித்து, காற்றுப்போகாமல் இருக்கிறதா அதிலுள்ள கருவிகள் சரியாகச் செயல்படுகின்றனவா என்று ஆராய்ந்து விடுவார்கள். விண்வெளியில் போய்விட்டால் தாமேதான் உடையைக் கழற்றவும் அணியவும் வேண்டும். எடையற்ற நிலையில் உடையைக் கழற்றுவது சுலபமில்லை. அதனால் எடையற்ற நிலையைச் செயற்கையாக உருவாக்கி, விண்வெளி உடையைஅணிவதற்கும் கழற்றுவதற்கும் தீவிரப் பயிற்சி அளிக்கிறார்கள்.

● பெரிய நீர்த்தொட்டிகளில் விண்வெளிப் பயணிகள் நடுவில் தொங்கியபடி உடைகளை அணியவும் கழற்றவும் பயிற்சி பெறுவார்கள். நீரில் மூழ்கி விடாமலும் மேலே மிதந்து விடாமலும் நட்ட நடுவில் தொங்குகிறமாதிரி எடைகள் சரி செய்யப்பட்டிருக்கும்!

● எடையற்ற நிலை வெவ்வேறு மனிதர்களை வெவ்வேறு விதமாகப் பாதிக்கின்றது. ஆனாலும் தடுப்பு முறைகள் சில உருவாக்கப்பட்டுள்ளன. உதாரணமாகப் பயணிகள் தலைகீழாகப் படுத்துப் பயிற்சி பெறுகிறார்கள். இதனால் தலைக்கு ரத்தம் பாய்வது பழகிப் போகிறது.

மேலட்டையில் 1. ரவிஷ் மல்ஹோத்ரா குடும்பம்; 2. விண்வெளியிலிருந்துதிரும் புகையில் வீரர்களைச்சுமந்து வரும் விண்கலம் கடலில் விழும். விண்வெளி உடையிலிருந்து கடலில் மிதக்க ஏற்ற உடைக்கு மாறி விண்கலத்திலிருந்து வெளிவந்து கப்பலை அடைய வேண்டும். கருங்கடலில் இதற்கு ஒத்திகை பார்க்கும் போது ருஷ்ய விண்வெளி வீரர்களுடன் ராகேஷ் சர்மா.

செய்திகளின் தொகுப்பு:

**சாருகேசி**

வண்ணப்படங்கள் புகைப் படங்கள் உதவி:

**சோவியத் செய்தித்துறை**

✖ ருஷ்ய விண்வெளி வீரர்களுடன் ரவிஷ் மல்ஹோத்ரா



# காட்டாங்குளத்தூரில் கவாஸ்கர்



✕ பார்வையாளர் புத்தகத்தில் எழுதுகிறார் கவாஸ்கர்

கிழக்குத் தாம்பரத்தில் ஒரு வீடு. காலை ஐந்தரை மணி இருக்கும். வீட்டுக்காரர் ராஜாராம் ஏதோ சத்தம் கேட்டுக் கதவைத் திறந்து கொண்டு வெளியில் வந்து பார்த்தால், தரையிலே ஒரு சின்னஞ்சிறு குழந்தை. அக் குழந்தைக்குப் புகலிடம் அளிக்கிறது. சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்.

• • •

அப்பாவுக்கு வாங்குற சம்பளம், குடிப்பதற்கே போதாது. குடும்பம் நடுத்தெருவில். போதாக் குறைக்கு மனைவியையும், மகனையும் அடிக்கிற கொடுமை வேறு. தாய், தன் பிள்ளைக்கு ஏதாவது ஒரு வழி செய்ய எண்ணினள். சிவானந்த சரஸ்வதி அனாதைகள் இல்லத்தில் சேர்த்து விட்டாள்.

• • •

தாய், தந்தை இரண்டு பேருமே குஷ்டரோகிகள். அவர்களுக்கோ ஒரே பிள்ளை. எங்கே தம் நோய் பிள்ளைக்கும் வந்துவிடுமோ என்ற பயம் அவர்களுக்கு. கடைசியில் யாரோ சொல்லி, அவர்கள் ராஜாராமை அணுக, பிள்ளை சி. ச. சேவாஸ்ரமத்தில் சேர்க்கப்பட்டான்.

• • •

இந்த சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம் என்கிற அனாதைகள் இல்லம், செங்கல்பட்டு மாவட்டம், காட்டாங்குளத்தூரில் (சென்னையிலிருந்து சுமார் 25 மைல்) உள்ளது.

இதை ஆரம்பித்தவர்கள் திரு. எஸ். வி. ஐயரும், அவரது துணைவியார் டாக்டர் மங்களமும். இத்தம்பதிகளுக்கு நிறைய வசதிகள் இருந்தும், மன நிம்மதி இல்லாததால், வட இந்தியாவுக்கு யாத்திரை போனபோது சந்தித்த சுவாமி சிவானந்தாவின் அறிவுரைப்படி, சென்னை திரும்பியதும், ஒரு அரசு மருத்துவமனையிலிருந்து கொண்டு வரப்பட்ட மூன்று குழந்தைகளுடன் ஆரம்பித்தனர். இப்போது, இலங்கையிலிருந்து, இந்தியா திரும்பிய 50 தமிழ்ப் பையன்கள், பெண்கள் உட்பட, மொத்தம் 300 பேர் இந்த அனாதைகள் இல்லத்தில் இருக்கிறார்கள். ஆரம்பித்தகாலத்தில் சிலர், இரவோடு இரவாக, இங்குள்ள மங்கள விநாயகர் ஆலயத்தில் குழந்தைகளைப் போட்டு விட்டுப் போய் விடுவர்.

• • •

இப்போது இதன் கரஸ்பான்டென்ட் திரு. ராஜாராம் (ஸ்டேட் பாங்க் ஆஃப் பாட்டியாலாவில் பணிபுரிகிறார்.) இவருக்கு எல்லாவிதத்திலும் துணை நிற்பது, இவரது மனைவி திருமதி லக்ஷ்மிராஜாராம்.

திருமதி ராஜாராம் சொல்கிறார்: ''இங்கே அனாதைகள் இல்லம் மட்டுமில்லை. துவக்கப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி, பெண்களுக்கான தையல், டைப்



✕ லக்ஷ்மி ராஜாராம்

ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் கற்றுத் தரும் பகுதி, இலவச மருத்துவமனை என்று பலவும் செயல்பட்டு வருகின்றன.''

திரு. ராஜாராம் சொல்கிறார்: ''மத்திய மாநில அரசுகள் இரண்டுமே, அனாதைக் குழந்தைகளைப் பராமரிக்க, பண உதவி செய்கின்றன. ஆனால் அது சொற்பம். பெரும்பகுதி செலவைச் சமாளிக்க நன்கொடைகளையே நம்பி இருக்கவேண்டியுள்ளது விலைவாசிகள் ஏறிக் கொண்டே போகும் இந்நாளில், இதிலுள்ள சிரமங்களை நான் விவரிக்க அவசியமில்லை.''

"இங்கே, படிப்பை முடித்ததும் இவர்களின் எதிர்காலம்?"

ராஜாராமின் பதில்: "பள்ளி இறுதி முடிந்ததும், படிப்பில் ஆர்வமிருந்தால், ப்ளஸ் டூவுக்கு அனுப்புகிறோம். கல்லூரிக்கும் அனுப்புவோம். எங்களால் முடிந்த அளவுக்கு, ஏதாவது ஒரு சிறு வேலையாவது வாங்கித் தந்துவிடுவோம். சமயத்தில் சிலருக்கு இங்கேயே வேலை போட்டுத் தருவதும் உண்டு. இங்கே ஒரு பாலிடெக்னிக் ஆரம்பிக்க வேண்டும் என்பது எங்கள் லட்சியம். நிதிவசதி இல்லை. யாராவது உதவினால் நல்லது."

■ ராஜாராம்



● ● ●

இங்கே வளர்ந்த ஒரு மாணவன் ராணுவத்தில் சேர்ந்து, நல்ல நிலைக்குவந்ததும், மீண்டும் எங்களைச் சந்தித்து, "நான் திருமணம் செய்து கொள்ளப் போகிறேன். அதேசமயம் என்னை ஆளாக்கிய இந்த இல்லத்துக்கும் உதவ நினைக்கிறேன்" என்றார். பயன்? இங்கிருந்த பெண் ஒருத்திக்கு வாழ்வு கிடைத்தது. இன்று இருவரும் மகிழ்ச்சியாய் இருக்கிறார்கள்.

● ● ●

டெஸ்ட் மாட்ச்சுக்காக, சென்னை வந்திருந்த கவாஸ்கரைச் சந்தித்து, ராஜாராம், ஆஸ்ரமத்துக்குவரும்படி அழைக்க, கவாஸ்கரும் மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டு, திலீப்தோஷி, சந்தீப்பாட்டில், வெங்சர்க்கார் ஆகியோருடன் வந்திருந்தாராம். இந்த இல்லத்தின் சிறுவர்களுடன் கிரிக்கெட் ஆடினாராம். அவருக்கும் வித்தியாசமான அனுபவம். இவர்களுக்கும் த்ரில்.

குரு படத்தில் கமல் நடித்தது, இந்த ஆஸ்ரமக் குழந்தைகளுடன். ரஜினி, பாக்யராஜ் என்று பல சினிமா நட்சத்திரங்கள், அரசியல் தலைவர்கள்(வி.வி. கிரி, அண்ணாதுரை.......) மத்திய, மாநில மந்திரிகள், எழுத்தாளர்கள் என்று லிஸ்ட் நீண்டு கொண்டே போகிறது.

● ● ●

✖ பிரார்த்தனை நேரம்



அங்கே சந்தித்த திருமதி லட்சுமி வெங்கட்ராமன் சொன்னார்: "நன்றாக இருந்த என் கணவர், திடீரென ஒரு விபத்தில் உயிரிழந்தார். அவர் நினைவாக, ஒவ்வொரு ஆண்டும், ஜனவரி 26-ம் தேதி, இங்கே, என் செலவில் குழந்தைகளுக்கு விருந்து அளிக்கிறேன்." இதேபோல இன்னும் சிலரும் செய்வதுண்டாம்.

● ● ●

இங்கே குழந்தைகளிடம் சுத்தமும், ஒழுக்கமும் காணப்படுகிறது. யாராவது வந்தால் வணக்கம் சொல்கிறார்கள். எங்கு போனாலும் வரிசையாய்—அமைதியாய்-போகிறார்கள். கடவுள் பக்தி இருக்கிறது.

இவர்களுக்குத்தான் எத்தனை வசதிகள்! தினமும் நல்ல உணவு, அணிந்து கொள்ளத் துணிமணி, தங்க வசதியாய் இடம், அன்பான அரவணைப்பு, பொழுது போக்க விளையாட்டு வசதிகள், டி.வி.யும் வீடியோவும் உண்டு.

● ● ●

இந்த ஆண்டு மத்திய அரசின் சமூகநலத் துறையின் 20,000 ரூபாய் பரிசு பெற்றிருக்கிறார் திரு.ராஜாராம். இதை ஆஸ்ரமத்துக்கே அளித்து விட்டார். "உங்களுக்கு எத்தனை பிள்ளைகள்?" என்றேன் திருமதி லக்ஷ்மி ராஜாராமிடம். என்னை ஆச்சரியப்பட வைத்த அவரது பதில்: "302 பிள்ளைகள்."

"ராஜாராம்! உங்களால் எப்படி இவ்வளவு சின்சியராய் உழைக்க முடிகிறது?"

"'அனாதை' என்பதன் முழு அர்த்தம் எனக்குத் தெரியும். நான் என் பெற்றோர்களைப் பார்த்ததில்லை. எனக்கு எல்லாமே, இதை நிறுவிய எஸ். வி. ஐயரும், டாக்டர் மங்களமும்தான்."

கட்டுரை:
என். சந்திரமௌலி
படங்கள்: ஸ்பைடர்மேன்

# ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்!

சென்னை - எதிர்க்கட்சிகள் மகாநாடு

உடன்பிறப்பே!
வானளாவிய
இந்த எழுச்சியைப்
பார்!

பிரச்சினைக்கு தீர்வு

நீங்களும்
என்னென்னமோ
பாடிப் பாக்குறீங்க!
ஒரு பூட்டுக்கு
ரெண்டு பூட்டு
ஆயிடுச்சே!

பஞ்சாப்

அஸ்ஸாம்

பந்தயத்தில்
நான் தான்
ஜெயிப்பேன்!

சுப்ரமணியம் சுவாமி

ஜனதா
தலைமைப் பதவி

சந்திர சேகர்

கல்கி



1984 மார்ச் 4
ருத்ரோத்காரி மாசி 21
மலர்: 42 இதழ்: 31



# கட்டிப் போடுவதா? விலங்கு மாட்டுவதா?

"பிரச்சினையின் தலையில் கல்லைப் போடு, அல்லது கமிட்டியைப் போடு!'' என்று தலைப்புத் தந்து கல்கி அவர்கள் எழுதி இன்று முப்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டன. இன்றைக்கும் நமது மதிப்புக்குரிய மத்திய, மாநில அரசுகள் பல்வேறு பிரச்சினைகள் தலையில் கல்லைப் போடாமல் காருண்யத்துடன் கமிட்டியையே போட்டு வருகின்றன!

சமீபத்திய அறிவிப்பு கண்ட்ரோல்கள் பற்றி ஆராய திரு. எம். நரசிம்மம் அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு கமிட்டி. அவரும் கமிட்டியில் உள்ள மற்றவர்களும் ஜாம்ஜாம் என்று தங்கள் பணியை நடத்தட்டும். இவர்களுக்குக் காரியாலயம் அதிகாரிகள், காரியதரிசிகள், குமாஸ்தாக்கள், பியூன்கள், கார்கள், டிரைவர்கள், ஏர்கண்டிஷனர்கள் எல்லாம் மக்களின் வரிப்பணத்தைச் செலவழித்துத் தாராளமாகத் தரப்படட்டும். மாதக்கணக்கில் சன்மானம் பெற்றுக் கொண்டு ஆய்வுகள் நடத்தி அறிக்கை தயாரிக்கட்டும். அதன் பிறகு அந்த அறிக்கை மத்திய அரசின் எத்தனையோ பல காரியங்களுள் ஒன்றில் ஒரு மூலையில் தூசுபடிந்து உறங்கட்டும்! சுபம்! சுபம்!

இப்படித்தான் நடக்கும் என்பதில் யாருக்கேனும் ஐயப்பாடு இருக்குமானால், இதே பிரச்சினையை ஆராய முன்னர் ஒரு கமிட்டி போடப்பட்டது என்பதையும், அந்தக் கமிட்டி 1979—ல் சமர்ப்பித்த அறிக்கை மத்திய அரசின் கடலனைய காரியாலயங்களுள் ஒன்றில் எங்கோ ஒரு மூலையில் ஆனந்தமாய்த் தூங்கிக் கொண்டிருக்கிறது என்பதையும் நினைவூட்ட விரும்புகிறோம். அந்த அறிக்கையை யாரும் தொட்டுப் பார்த்ததாகக் கூடத் தெரியவில்லை. ஒருவேளை அந்தக் கமிட்டி ஜனதா ஆட்சியில் இருந்த போது அறிக்கை சமர்ப்பித்தது என்பதால் இன்றைய அரசுக்கு அலர்ஜியாக இருக்கலாம். என்றாலும் சில நல்ல கருத்துக்களை அந்தக் கமிட்டி கூறியுள்ளது என்பதை மறுப்பதற்கில்லை:

''எந்தப் பொது மக்களுக்கு நன்மை செய்வதாகக் கருதி கண்ட்ரோல்கள் கொண்டுவரப் பட்டனவோ, அவர்களுக்குக் கண்ட்ரோல்கள் உதவவில்லை. தொழில் வர்த்தகத் துறைக் கட்டுப்பாடுகளால் அரசுக்குப் பல விதங்களில் வருவாய் நஷ்டமாகியே வருகிறது. கண்ட்ரோல்கள் லஞ்ச ஊழலையும் கருப்புப் பணத்தையும் உருவாக்கி போஷிக்கின்றன'' என்றெல்லாம் அந்தக் கமிட்டி கூறியுள்ளது. இதே நேரத்தில் கண்ட்ரோல்கள் அறவே கூடாது என்றும் அக்கமிட்டி சொல்லவில்லை. சமதர்ம சமுதாயத்தை உத்தேசித்துச் சில இனங்களில் கண்ட்ரோல் தேவை தான் என்று அந்தத் துறைகளை இனம் காட்டவும் செய்கிறது.

இந்த அறிக்கையை அப்படியே ஒதுக்கிவிட்டு மத்திய நிதி அமைச்சகத்தில் முன்னாள் காரியதரிசியாக விளங்கிய எம். நரசிம்மம் அவர்களைத் தலைவராகக் கொண்டு புதிய கமிட்டி அமைத்துள்ள மத்திய அரசு, இந்தக் கமிட்டிக்கு விடுத்துள்ள கோரிக்கை விசித்திரமானது! 'நேரடியான பௌதிகக் கட்டுப்பாட்டுக்குப் பதில் பொருளாதார ரீதியான கட்டுப்பாடுகளை எப்படி அமுல் படுத்தலாம்' என்று யோசித்துச் சிபாரிசுகளைச் சமர்ப்பிக்குமாறு கேட்டுள்ளது! அதாவது, 'தொழில் வர்த்தகத் துறையினரின் கைகால்களை மணிக்கயிற்றால் கட்டிப் போடுவதை விட விலங்கு மாட்டியே கொடுமைப்படுத்தினால் என்ன?' என்று திரு. நரசிம்மம் யோசித்து விடைபகர வேண்டும்! ஐயோ, பாவம்!

கண்ட்ரோல்களை ஆராய கமிட்டி போடுவதைவிட கமிட்டிகளுக்கு ஒரு கண்ட்ரோல் கொண்டு வருவதுதான் இன்று முக்கியம்.

# அத்தியாயம் 18
## பல்லவேந்திரர்

**வ**ண்ண மயிலின் அழகையொத்தது காஞ்சி நகரின் அமைப்பு.

''ஏரி இரண்டும் சிறகா, எயில் வயிறாகக்
காருடைய பீலி கடிகாவா, — நீர்வண்ணன்
அத்தியூர் வாயா, அணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு.''

என்பதாகக் கி. பி. 11—ம் நூற்றாண்டில் தண்டியலங்காரத்தில் சித்திரிக்கப்படும்காஞ்சி மாநகர் இந்தக் கதை நடந்த காலத்தில் இதை விடவும் எழிலும் வளமும் மிக்க தாய்த்தான் விளங்கியது என்பதை வட மொழிப் புலவர் பாரவி உறுதிப்படுத்துகிறார். ''புஷ்பங்களில் ஜாதி, புருஷர்களில் விஷ்ணு, நங்கையரில் ரம்பை எனில் நகரங்களில் காஞ்சி'' என்று வானளாவப்புகழ்கிறார்.

இத்தகைய காஞ்சி மாநகர் நோக்கி ஒரு வீரன் வாயுவேக மனோவேகமாகக் குதிரையைத் தட்டிவிட்டுப் பயணப்பட்டுக் கொண்டிருந்தான். அவன் உடலெல்லாம் புழுதி அப்பியிருந்ததானது நெடுந்தூரத்திலிருந்து வருகிறவன் என்பதை உறுதிப்படுத்தியது. குதிரை களைத்து நுரை தள்ளும் சமயம், அடுத்தாற்போல் எதிர்ப்படுகிற பயணியர் விடுதியில் நின்று விடேல் விடுகு இலச்சினை காட்டி குதிரை மாற்றிக் கொண்டான். அந்த விடை வெல் விடுகினைப் பார்த்ததுமே மிக முக்கியமான அரசாங்கக் காரியமாகச் செல்பவன் என்பதைப் புரிந்து கொண்டு பலமான உபசாரம் செய்தார் விடுதிக் காவலர்.

''ஐயா! பல்லவ தேசத்திலேயே மொத்தம் நூறு பேர்களிடம் தான் இத்தகைய ரிஷப இலச்சினை இருக்குமாமே மெய்தானா?''

''ஆமாமாம்; அந்த நூறு பேரும் மிகுந்த செல்வாக்குடைய மிகப் பெரிய மனிதர்கள். எப்போதும் தங்கள் கைவசம் இந்த இலச்சினையை வைத்துக் கொண்டிருக்கும் தகுதி பெற்றவர்கள். ஆனால் என் போன்றவர்கள் பணி முடித்ததும் இதை உயர் அதிகாரிகளிடம் ஒப்படைத்து விட வேண்டும்.''

''அப்படியா அது!'' என்று வியந்தான் விடுதிக் காவலன். ''ஐயா! என்னதான் அவசரமென்றாலும் குளித்து உடைமாற்றி, இளைப்பாறி உணவருந்திச் செல்லக் கூடாதா?'' என்ற அவன் கோரிக்கையை நிராகரித்த அந்தப் பயணி, பரக்கப்பரக்கச் சில பலகாரங்களை வாயில் திணித்துக் கொண்டு கையில் ஒரு பழத்தையும் எடுத்துக் கொண்டு மறுபடி குதிரை மீதேறிப் பறந்தான்.

''நல்ல வேடிக்கை'' என்று சிரித்தான், அதே விடுதியில் தங்கியிருந்த ஒரு வியாபாரி. ''சதா சிற்பம் சித்திரம், நடனம், இசை, கோயில் திருப்பணி என்று பொழுதைக் கழித்துக் கொண்டிருக்கும் பல்லவேந்திரர் ஆட்சியில் தூதன் ஒருவன் துரிதமாகப் பயணப்பட வேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது?''

''இதோ பாருங்கள்! நீர் ஊர் ஊராகப் போய் வாணிபம் செய்யும் சுதந்திர மனிதர். என்ன வேண்டுமானாலும் பேசலாம். ஆனால் நான் இங்கேயே இருந்து அரசு ஊழியம் செய்பவன். என் வாயைக் கிளறாதீர், பிழைப்புக் கெட்டுப்போகும்.''

**ப**யம் காரணமாக விடுதிக் காப்பாளர் இவ்விதம் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்த போதிலும் அந்த வியாபாரி கூறியதில் தவறு ஏதும் இல்லை. திருப்புறம்பயம் போருக்குப் பிறகு அபராஜித வர்மனிடம் ஒரு பெரிய மனமாற்றம் ஏற்பட்டிருந்தது. மாவீரனை அவன் அந்தப் போரில் ஆதித்தன் உதவியுடன் வரகுணபாண்டியனை முறியடித்துச் சோனாட்டை விட்டுத் தோற்றோடச் செய்தான். ஆனால் போரின் பின் விளைவுகள் அவனுக்கு மகிழ்ச்சியை விடத் துயரத்தையே அதிகம் தந்தன. அவனுக்கு உதவத் தம் படையுடன் வந்திருந்த தாய் வழிப்பாட்டனும் கங்கமன்னனுமாகிய முதலாம் பிருதிவிபதி அஞ்சா நெஞ்சத்துடன் பயங்கர உக்கிரமாகப் போரிட்டு வீர சொர்க்கம் புகுந்தான். அவன் மட்டுமா? ஆயிரக்கணக்கான வீரர்கள் இருதரப்பிலும் உயிர்த் தியாகம் செய்தனர். யுத்த களம் ரணகளமாயிற்று. மண்ணியாறு குருதி ஆறாக ஓடிற்று. அதன் வடகரையில் தான் நடந்தது யுத்தம். அக்கம்பக்கத்தில் உள்ள குக்கிராமங்கள் உதிரப்பட்டி என்றும் உதிரம் படிந்த தோப்பு எனவும் பெயர் பெறும் அளவில் ரத்தம் பெருக்கெடுத்தது. அபராஜிதன் இதையெல்லாம் கண்டு கனத்த இதயத்துடன் அங்கேயே பாட்டன் பிருதிவிபதிக்கு நடுகற்கோயில் ஒன்று எடுப்பித்தான். கலங்கித் தொழுது, வணங்கி எழுந்தவன், சாம்ராஜ்ய ஆசைதானே போருக்குக் காரணமாகிறது என்று எண்ணினான். உடனே ஆதித்தனின் மாவீரத்தை மெச்சி பாண்டியனிடமிருந்து மீட்கப்பட்ட சோனாட்டுப் பகுதியை மட்டுமின்றி அந்நாள் வரை தன் வசமிருந்த சோனாட்டுப் பகுதியையும் சேர்த்து அவனுக்கே அளித்து ஆண்டுவரச் செய்து காஞ்சி திரும்பினான். தொண்டை மண்டலத்தையும் திருமுனைப்பாடி நாட்டையும் மட்டும் ஆண்டு வந்தால் போதும், ராஜ்ஜியம் சிறிதுபட்டாலும் அமைதியும் வளமும் நிறைந்து விளங்கட்டும் என்று கருதியவனாய்த் தன் மூதாதையர் பலரையும் போல் இவனும் கலைகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து வரலானான். திருத்தணியிலும், திருவொற்றியூரிலும் மாங்காட்டு ஈசனார்க்கும் இன்னும் பலப்பல தலங்களிலும் கோயில் திருப்பணிகளை முன்னின்று நடத்தினான். வடமொழியையும் தமிழையும் இரு கண்களெனப் போற்றினான். புலவர்களை ஆதரித்தான். தானுமே பாக்கள் எழுதி, 'வெண்பா வேந்தன்' எனப் புகழ் பெற்றான். இசையிலும் நடனத்திலும் நாட்டமுடையவனாய் விளங்கினான். சிற்ப சித்திரக் கலைகளில் கை தேர்ந்தவனாய் இருந்தான்.

இப்போதும் கூட அரண்மனையின் ஓவியக் கூடத்தில் அவன் முன்பாக ஒரு திரைச்

சிலையில் ஓர் அழகிய இளம் பெண்ணின் உருவம் பாதி எழுதி முற்றுப் பெறாமல் இருந்தது. அவன் தீட்டி வந்த ஓவியத்தின் நாயகி எதிரே மாறாத புன்னகையுடன் அமைதியாய் அமர்ந்திருக்க முயன்று கொண்டிருந்தாள். ஆயினும் அவளுடைய அகன்று நீண்ட கயல் விழிகள் மட்டும் குறுகுறுப்புடன் இங்குமங்கும் மீனின் லாகவத்துடன் பாய்ந்து கொண்டிருந்தன. வயது பதினெட்டு கூட நிரம்பப் பெறாததால், குழந்தைத்தனம் மாறாத முகத்துடனும் உள்ளத்துடனும் காணப்பட்ட அவள் சற்று நேரம் சிலையாக இருப்பாள். திடீரென்று நினைத்துக் கொண்டு ஏதாவது கேட்பாள். பல்லவேந்திரனும், ''ஆரம்பித்து விட்டாயா? சற்றுநேரம் அமைதியாய் இரு என்றால் கேட்க மாட்டாயே'' என்று செல்லமாகக் கடிந்து கொள்வான்.

''அப்பா நானும் கேட்க வேண்டும், கேட்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டே இருக்கிறேன்; இன்றுதான் வாய்ப்புக் கிடைத்தது. இதோ வரிசையாக அடுக்கி வைத்திருக்கிறதே இந்த ஓவியங்களெல்லாம் யார் தீட்டியவை? பார்த்தால் உங்கள் கைவண்ணம் போல் தெரியவில்லையே!''

''இல்லை, திரிபுவனி! இவை நான் தீட்டியவை அல்ல...'' என்று பல்லவேந்திரர் ஆரம்பிப்பதற்குள் அடுத்த கேள்விக்குப் பாய்ந்தாள் அவள்! ''அப்பா! இந்தச் சித்திரங்கள் பலவற்றில் காணப்படும் இந்த ஆணழகன்..... அதாவது ஆண்மகன் யார்?''

பல்லவேந்திரர் சிரித்தார். ''அந்த ஆண்மகன்... அதாவது ஆணழகன்.....'' என்று அவர் ஆரம்பிப்பதற்குள் குப்பென்று முகம் சிவந்தாள் திரிபுவனி. ''போங்களப்பா, இப்படி என்னைக் கேலி செய்வதாயிருந்தால் நான் என் ஓவியத்தைத் தீட்ட உங்களை அனுமதிக்க முடியாது'' என்று கூறி இருக்கையிலிருந்து எழுந்து விட்டாள்.

''அடேடே! என்ன இது! அரைநாழிகை அமைதியாய் உட்கார்ந்திருக்கக் கூடாதா?'' என்று அலுத்துக் கொண்ட சக்கரவர்த்தி, தூரிகைகளையும், வண்ணக் கலவை அடங்கிய தட்டையும் ஒரு பக்கமாக வைத்துவிட்டு அங்கிருந்த சிம்மாசனத்தில் ஒரு பெருமூச்சுடன் அமர்ந்தார்.

அப்போது, ''குழந்தை என்ன சொல்கிறாள்? ஓவியம் முடிந்து விட்டதா?'' என்று கேட்டுக் கொண்டே அங்கே வந்தாள் மகாராணி மாதேவி அடிகள். அவள் கரத்தில் தாக சாந்திக்குப் பழரசம் நிரம்பிய இரு கோப்பைகள் இருந்தன.

''ஓவியமாவது முடிவதாவது? இவள் முடிக்க விட்டால்தானே? என்னைப் பேசவாவது அனுமதித்தால்தானே?'' என்றார் பல்லவேந்திரர். ''ஒரு கேள்விக்குப் பதில் கூறி முடிப்பதற்குள் ஆயிரம் வினாக்களைத் தொடுத்து விடுகிறாள் உன் மகள். நான் திணறிப் போகிறேன். எதற்குமே முழுமையாகப் பதிலைக் கேட்டுத் தெரிந்து கொள்ள இவளுக்குப் பொறுமையும் இல்லை!''

அபராஜிதன் பேசி முடிப்பதற்குள் பழரசத்தைக் குடித்து முடித்து விட்டாள் திரிபுவனி.

''அம்மா! திருவொற்றியூர் ஆதிபுரேசுவரர் கோயிலுக்கு விளக்குகள் வைக்க முப்பத்தொரு கழஞ்சு பொன் தருவதாக நேர்ந்து கொண்டாயே அதுபற்றி அப்பாவிடம் பேசி விட்டாயா? சம்மதம் பெற்றாகி விட்டதா?'' என்று நினைவூட்டினாள்.

''பார்த்தாயா தேவி! இதைத்தான் முடிவற்ற கேள்விக்கணைகள் என்றேன்'' எனச் சக்கரவர்த்தி கூறவும், ''போங்களப்பா நான் இப்படித்தான் இருப்பேன். என் போக்குப் பிடிக்கவில்லை என்றால் என்னை எதற்காகப் பெற்றுக் கொண்டீர்களாம்?'' என்று கேட்டாள் இளவரசி.

குபீரென்று சிரித்து விட்டார் மாமன்னர்.

''பிரபோ! குழந்தைகள் கேள்வி கேட்பதில் தவறேதுமில்லையே? அதன் மூலம்தானே அவர்கள் புதிய புதிய கருத்துக்களைத் தெரிந்து கொள்கிறார்கள்; அறிவும் விசாலப்படுகிறது!''

''அது உண்மைதான்; யார் இல்லை என்றார்கள்? ஆனால் இவள் கேள்விகளைத்தான் தொடுக்கிறாளே தவிர பதிலைப் பெறும்வரை காத்திருப்பதில்லையே...? அதுசரி, நீ எதற்கு ஆதிபுரேசுவரர் கோயிலுக்குப் பிரார்த்தித்துக் கொண்டாய்?''

''வேறு எதற்கு சுவாமி? இவளுக்கு நல்லவிதமாகத் திருமணம் நடக்க வேண்

டும். குணவானான கணவன் அமையவேண்டும். உயர்வான குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டு அமோகமாக வாழ வேண்டும் என்பதற்காகத்தான்.''

''ஈசனை வேண்டிக் கொள்ளலாம்தான். ஆனால் அது மட்டும் போதாது. முயற்சியும் வேண்டும். அதன் பொருட்டுத்தான் இவள் ஓவியத்தை நானே தீட்ட ஆரம்பித்தேன்..'' என்பதற்குள் திரிபுவனி ''அப்பா!'' என்றழைத்து மறுபடியும் வினாக்களைத் தொடுத்தாள்: ''இந்தப் படங்கள் சிலவற்றில் ராஜ கம்பீரம் மிக்க ஆணழகனைத் தவிர வேறு ஒரு வீரனும் காணப்படுகிறானே அவன் யார்?... இந்த ஓவியங்கள் எல்லாம் பல்வேறு நிகழ்ச்சிகளைக் குறிப்பன போல் தோன்றுகிறதே?''

''மகளே உன் அறிவு கூர்மையானது; பொறுமை இன்மைதான் அதை மழுங்கச் செய்கிறது. இப்படி வா. உன் வாயை என் மேலுத்தரீயத்தால் மூடித் தலையைச் சுற்றி இழுத்து இறுகக் கட்டிவிடுகிறேன். பிறகு இதுவரை நீ கேட்டுள்ள கேள்விகளுக்கு வரிசையாகப் பதில் சொல்லி வருகிறேன்!''

''அப்படி என்னைச் சிறைப்படுத்திவைத்துத் தான் சொல்ல வேண்டும் என்றால் வேண்டவே வேண்டாம் அப்பா! எனக்கு இதெல்லாம் தெரிந்து என்ன ஆகப்போகிறது?''

''அப்படியா! ஆகப்போவது ஒன்றுமேயில்லையா? அந்த ஆணழகனைப் பற்றிக்கூடத் தெரிந்து கொள்ளத் தேவையில்லையா?''

திரிபுவனியின் பளிங்கு முகம் மறுபடி செந்தாமரையாக மாறியது.

''சரி அப்பா, உங்கள் ஆசையைக்கெடுப்பானேன். என்றோ ஒருநாள் அவகாசம் கிடைத்து மகளுக்குக் கதை சொல்கிறேன் என்று ஆரம்பிக்கிறீர்கள்; சொல்லிவிட்டுப் போங்கள்'' என்று அவர் எதிரே ரத்தினக் கம்பளத்தில் அமர்ந்தாள். விளையாட்டாக வாயைக் கைகளால் பொத்திக் கொள்ளவும் செய்தாள்.

பழரசத்தை. ருசி பார்த்துப் பக்கத்திலிருந்த முக்காலி மீது வைத்த பல்லவேந்திரர். ''கேள் குழந்தாய்!'' என்று ஆரம்பித்தார். ''மாதேவி! நீயும் கேள்!'' என்று சொல்லி மனைவியையும் அமரும்படி பணித்தார்.

''திருப்புறம்பயம் போரில் நடந்ததையெல்லாம் உங்களுக்கு ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன்...'' என்றதுமே, ''அதுதான் அவைப் புலவர்கள் உங்கள் வீரதீரப் பிரதாபங்களை விடாமல் இன்று வரை பாடிக் கொண்டிருக்கிறார்களே'' என்ற திரிபுவனி, தந்தையின் முகத்தில் சினத்தின் ரேகைகளைக் காணவும் விளையாட்டுத்தனம் மாறாமலே கன்னத்தில் போட்டுக் கொண்டு மீண்டும் இறுக வாயைப் பொத்திக் கொண்டாள். பல்லவேந்திரரின் கோபம் வந்த வேகத்திலேயே மறையப் புன்னகையுடன் தொடர்ந்தார்:

''அப்போது திரிபுவனிக்கு எட்டு வயதுதான். இவளை விட்டுப் பிரிவதே எனக்கு மிகுந்த மனத்துயரை அளித்தது. ஆனால் கடமை என்று ஒன்றிருக்கிறதல்லவா? பல்லவப் பேரரசை எதிர்க்கத் துணிந்த பாண்டியனுக்குப் பாடம் கற்பிக்க வேண்டியிருந்தது. போரின் முடிவில் வரகுண பாண்டியன் தோற்றோடினான். ஆதித்தனுடைய வீரத்தை மெச்சி அவனுக்குச் சோணாடு முழுவதையும் அளிப்பதாகப் பெருந்தன்மையுடன் காட்டிக் கொண்டேன். ஆனால் உண்மையில் என் மனம் போரை வெறுத்து அமைதியை நாடியதுதான் அப்படி நான் நடந்து கொண்டதற்கு முழு முதற்காரணம். எனது இந்தச் செய்கையால் ஆதித்தன் என்னிடம் நன்றி வசப்படுவான் என்றும் எங்களிடையே நட்புறவும் சமாதானமும் வலுப்பெறும் எனவும் பல்லவ நாட்டின் தென் திசையில் எப்போதும் அமைதி நிலவும் என்றும் எண்ணினேன். ஆனால் என் கணக்குத் தவறிவிட்டது. போர் முடிந்த கையோடு ஆதித்தனுடைய தந்தை. விஜயாலயன் அவனிடமிருந்து ஒரு வீர சபதத்தைப் பெற்றுக் கொண்டான். மரணப் படுக்கையில் இருந்த தந்தைக்கு இந்த வரத்தை மகனால் மறுக்க


*The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.*

FORM IV

1. *Place of Publication*: Madras
2. *Periodicity of publication*: Weekly
3. *Name of Printer*: V. Murali
   *Nationality*: Indian
   *Address*: AA-117, Shanthi Colony
   Anna Nagar
   Madras-600 040
4. *Name of Publisher*: V. Vaidyanathan
   *Nationality*: Indian
   *Address*: 6-A, Warren Road,
   Madras-600 004
5. *Name of Editor*: K. Rajendran
   *Nationality*: Indian
   *Address*: 1, Fifth Street,
   Lake Area
   Nungambakkam
   Madras-600 034
6. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital*
   Bharathan Publications Private Limited
   84/1-C, Race Course Road, Guindy,
   Madras-600032

V. Vaidyanathan
*Publisher*

1-3-1984

முடியவில்லை. என்றாவது தொண்டைமண்டலத்தைக் கைப்பற்றிக் காஞ்சியை சோழநாட்டின் வடதிசைத் தலைநகராக்கிக் கொள்ள வேண்டும் என்பதுதான் அந்த வாக்குறுதி!''

''அட! எத்தனை தைரியம்! பொல்லாத் தனம்! பல்லவேந்திரரை என்ன இளிச்சவாயரை என்று நினைத்தானா விஜயாலயன்?''

''அதில்லை, குழந்தாய்! சோழர்களுக்கும் பல்லவர்களுக்கும் இடையே அறுநூறு ஆண்டுகளாகவே பகை இருந்து வருகிறது. வெகுகாலம் முன்பு நமது மூதாதையர் சோழரை வென்று துரத்தி, தொண்டை நாட்டையும் பிறகு சோணாட்டையும் கைப்பற்றி ஆண்டு வந்தனர். அப்போது மூண்ட கனல் இன்னும் அவர்கள் உள்ளத்தில் சுட்டுக் கொண்டே இருக்கிறது. அது மட்டுமல்ல, என் தந்தை நிருபதுங்கவர்மனும் அரிசிலாற்றங்கரைப் போரில் விஜயாலயனுக்குக் கொடுத்த வாக்குறுதியை மீறி ஓர் ஏமாற்றத்தை அளித்திருக்கிறார்.... எல்லாமாகச் சேர்ந்து கொண்டு ஆதித்தனை இன்று வாட்டி வதைக்கிறது....''

''அப்பா! ஆதித்தனின் அந்தரங்க மன நிலை பற்றி எவ்வாறு இவ்வளவு உறுதியாகப் பேசுகிறீர்கள்? உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''குறுக்கே பேசாதே'' என்று அடக்கினாள் மகாராணி மாதேவி அடிகள்.

''இதோபார்! சக்கரவர்த்தியாக இருந்து நாடாள்பவர்கள் தங்கள் நாட்டில் நடப்பன மட்டுமின்றி அண்டை அயல் நாடுகளின் நிலவரங்களையும் அவ்வப்போது தெரிந்து கொள்ள வேண்டும். இல்லையென்றால் ஒரு படையெடுப்பு, ஆபத்து என்றால் எப்படிச் சமாளிப்பது? முன்னெச்சரிக்கையுடன் செயல்பட வேண்டாமா? இதற்காகத் தான் ஒற்றர்கள் உளவாளிகள் எல்லோரும் இருக்கிறார்கள்.''

''சரி, மேலே சொல்லுங்கள்.''

''விஜயாலயன் கேட்ட வரத்தை ஆதித்தன் தந்தானேயொழிய கடந்த பத்து ஆண்டுகளாக அவன் பல்லவ நாட்டின் மீது படையெடுக்கத் துணியவில்லை. என் பால் பெருகும் நன்றியுணர்ச்சிதான் அவனைத் தடுத்து நிறுத்தியிருக்க வேண்டும். இந்த நன்றி உணர்ச்சிக்கும் தந்தைக்குக் கொடுத்த வாக்குறுதிக்கும் இடையே அவன் உள்ளத்தில் பெரும் போராட்டம் நடப்பதாக எனக்குச் செய்திகள் கிடைத்துள்ளன.....

''எனக்கொரு ஆசை. திரிபுவனி வளர்ந்து மணப்பருவத்தை அடைந்து விட்டாள். இந்த ஓவியங்களில் மாவீரனும் பேரழகனுமான ஆதித்தனைக் காணும்போதெல்லாம் இவள் மனம் படபடப்பதை நான் உணர்கிறேன். இன்று 'இந்த ஆணழகன் யார்?' என்று வெட்கத்தை விட்டு என்னைக் கேட்கவும் செய்தாள். இவளை ஆதித்தனுக்கு மணம் முடித்து வைத்துவிட்டால்...? பிறகு அவன் படையெடுக்கும் எண்ணத்தை அடியோடு விட்டொழிக்கத்தானே வேண்டும்!''

''பிரபோ! ஆதித்தனுடைய இரண்டாந் தாரமாக விளங்கத் திரிபுவனி சம்மதிக்கலாம். ஆனால் உங்கள் செல்ல மகள் பட்டமகிஷியான எனக்குப் பிறந்தவள் அல்லவே. காடுபட்டிகளுக்கல்லவா அந்த பாக்கியம் கிட்டியது. இதனால் ஆதித்தன் தயங்கலாம் அல்லவா?''

''அப்படி அவனுக்குத் தோன்றக்கூடாது என்பதற்காகத் தான் இந்த ஓவியத்தை வரைந்து கொண்டிருக்கிறேன். இந்தச் சித்திரப் பாவையைப் பார்த்த பின் உயிர்ப் பாவையை மறுக்க எப்படி அவனுக்கு மனம் வரும்?''

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருந்த நேரத்தில் காஞ்சிக்குள் விரைவாக நுழைந்த தூதன், அதன் நெடிதுயர்ந்த கோட்டை மதில்களையோ, அகழி கொத்தளங்களையோ, நகரமைப்பு நேர்த்தியையோ, சோலைகள் அகன்ற சாலைகளையோ, கோயில்கள் புத்த விஹாரங்களையோ, சைவ, வைணவ மடாலயங்களையோ வடமொழி தமிழ் மொழிப் பாடசாலைகளையோ கண்டு மலைப்புறவும் நேரமின்றி நேரே அரண்மனையை அடைந்தான்.

அழுக்கும் புழுதியும் படிந்த தோற்றம் காரணமாய் விடேல் விடுகு இருந்தும் அனுமதி மறுக்கப்பட்டபோது சிம்ம இலச்சினை ஒன்றை எடுத்துக் காட்டினான். உடனே எல்லாக் கதவுகளும் ஒன்றன்பின் ஒன்றாகத் திறந்து கொள்ளச் சில கணங்களில் ஓவியக் கூடத்தில் நுழைந்து, ''பிரபோ! இடையூறுக்கு மன்னிக்கவேண்டும்; அவசரச் செய்தி!'' என்றான்.

(தொடரும்)

---

ஒருநாள். கிழமை. தேதியெல்லாம் ஞாபகம் இல்லை. நான் காலையில் வெறுமனே நின்று கொண்டிருந்தேன். அது எனக்குப் பிடிக்கும். தெருப்பக்கம் சாய்ந்திருக்கும் ஒரு மரத்தின் உதிர்ந்த செம்பூக்கள் காற்றில் தரையை மெழுகியபடி தெருவைத் தடவி நகர்ந்து கொண்டிருந்தன. இப்படியே தரையில் எதுவரைக்கும் இந்தப் பூவெல்லாம் நடக்கும்?

பெருங்காற்று. புழுதியைப் பூசிக் கொண்டு தென்னை மட்டைகளை முறித்துக் கொண்டு, குப்பைகளைக் கோபுரங்களுக்குத் தூக்கிக் கொண்டு, அறையில் காலண்டரைச் சுழல விட்டுக்கொண்டு பலமாக வீசியது. இன்னும் சிறிது நேரத்தில் பெருமழை வரலாம்... விழ ஆரம்பித்து விட்டது.

இப்படி மழை பொழியும் பொழுதெல்லாம் ''கப்ரியேல்'' நினைவு கண்டிப்பாக வருகிறது. வாராந்தரியில் இருந்த என்னை வண்ணதாசன் படிக்கும் அளவுக்கு, உயர்த்தி இப்படியெல்லாம் நினைக்க வைத்தவன் அவன் தான்.

அவன் என்று சொல்லக் கூடாது. குரு என்று கூடச் சொல்லலாம். ஆம். குருவே தான். போன வருடம் அவன் கல்லூரியில் சேர்ந்து ஒரு வாரம் கழிந்த ஒரு ஞாயிறின் மாலையில் விடுதியில் இருக்க ஒரு பெருமழை வந்தது. ஜன்னலை மூட வேண்டாமெனத் தடுத்து, ''எவ்வளவு இரம்மியமாய் இருக்கு. அதை இரசிக்காம மூடுறியே'' என்றான்.

''கைகையாய்க் கதவைத் தட்டிக்கொண்டு நுழைந்து உள்ளே நதியாய் வழிந்து விடப் போகிற மழை. தொப்பலாய்ச் சட்டையும் தலையும் நனைந்து போய்ச் சொட்டுச் சொட்டாய் நீர்ப்பூவைத் தரையில் விரிக்கும் சந்தோஷத்திற்குப் பறக்கிறது மனசு' என்று தான் படித்த கவிதையைச் சொன்னான். 'இந்த மண் வாசனையை நுகர்ந்தாயா மழைத் துளி பட்டதின் மகரந்தக் கிளர்ச்சியில் மணக்கும் மண்ணினம்.

'வா, இந்த மழையில் கொஞ்சம் நனையலாம். தரையில் நீர்ப் பூவை உதிர்க்கலாம், வா' என்று கையை இழுத்து......

மழையில் நனைந்தோம். அந்த மழைக்குப் பின்தான் இருவரும் நெருக்கமானோம்.

இன்னும் எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. ''தவறாமல் சனிக்கிழமைதோறும் சினிமாவுக்குப் போறியே, இன்னிக்குக் காலேரிக்குப் போவோம் வா,'' என்று அழைத்துச் சென்றான். நீரில் காலை அலைக்கழித்தபடி இயற்கையை இரசிக்கக் கற்றுக் கொடுத்தான். இலக்கியம் சொல்லிக் கொடுத்தான்.

மழை வலுத்து விட்டது. அன்று நனைந்த சரம் இன்னும் உலரவில்லை. அவனோடு இருந்து இந்த மழையைப் பார்க்க வெகு உன்னதமாய் இருக்கும். நான் 'அதிக சந்தோஷத்தில் இருக்கும் போதெல்லாம் அனேகமாக மழை வருகிறது என்பான். எனக்கு அவன்பேரில் வெகு ஆச்சரியம்தான். இந்த வயதில் எல்லாம் அறிந்து. மென்மையாய்த் துளி கூடக் கோபம் வராமல் எந்த வேலையையும் கவிதை மிளிர அவனால் எப்படிச் செய்ய முடிகிறது? அன்று எனக்கும் கணேஷுக்கும் நடந்த சண்டையைச் சமாதானப்படுத்தினான். அறைக்குக் கூட்டிவந்து ''உன் துண்டைக் கேட்பவனிடம் அங்கியைக் கொடு'' என்று பைபிள் சொன்னான்.

''உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்.'' என்று திருஅருட்பா சொன்னான்.

அவன் பாதங்களைச் சுத்தமாய் வைத்திருப்பான். அழுக்கில்லாத பாதங்களை உடையவர்கள் அவனுக்குப் பிடிக்கும்.



நான் செருப்பை அறையில் குறிப்பிட்ட இடத்தில் விடுவது, நோட்டுப் புத்தகங்களின் முதல் பக்கத்தில் பாரதிக் கவிதைகளை எழுதுவது, விளக்கணைத்தாலும் குறிப்பிட்ட புத்தகத்தைச் சரியாக அலமாரியில் இருந்து எடுப்பது, படுக்கும் போது, முகம் கழுவி, கால் கழுவி, பாரதியும், அருட்பாவும் படிப்பது எல்லாம் அவனைக் கண்டு கற்றதுதான்,

இராமன் 16 வயதில் வில்லை ஒடித்தான். அவனுக்குச் சொல்லித்தர முனிவன் இருந்தான். இவனுக்கு அதுபோல் இவங்க அப்பா இருந்திருப்பாரோ.

ஒருநாள் கேட்டுவிட்டேன். 'இதெல்லாம் உனக்கு எப்படிச் சாத்தியமாயிற்று?' என்று. 'நான் படித்த நல்ல புத்தகங்கள் தான்' என்றான்.

மழைச் சன்னல் வழியே உள் நுழைந்து நதியாய்ப் பெருக ஆரம்பித்து விட்டது. எழுந்து சன்னலை மூடினேன். அதன் பின்புறம் ஒரு நோட்டீஸ். 'பாரதியார் பிறந்த தினத்தன்று பாரதி வரிகள் நினைக்கப்படும்' என்ற தலைப்பில் நோட்டீஸ். எல்லோருக்கும் கொடுத்து, இந்த சன்னலிலும் அவன் ஒட்டியிருந்தான். இந்த நேரம் அவன் இருந்தால் மழையில் நனைந்திருக்கலாம். அந்த நாட்கள் தூறலாய் மனத்தில் நுழைந்து...... கண்கள் பனித்தன.

மழைக்கும் அவனுக்கும் ரொம்பத் தொடர்பு போல... இப்படியொரு மழைக் காலத்தில்தான் அவன் மரித்துப்போனான்.

நதி. சம்பந்தம்,
(இரண்டாமாண்டு பார்மஸி)
ஜே. எஸ். எஸ். பார்மஸி கல்லூரி,
ஊட்டி–643 001.

••❀••



''ஜோசியரே! என் கன்னத்திலே என் மனைவியுடைய கைரேகை பார்த்து, அவளது எதிர்காலத்தைப் பற்றிச் சொல்லுங்க!''

சு. நீலகண்டன் (கண்ணன்),
பௌதிகம், பி.எஸ்ஸி. மூன்றுமாண்டு,
தெ. தி. இந்து கல்லூரி,
நாகர்கோவில்.





# அதிர்ஷ்டம் நம்பக்கம்

பெண்கள் கிரிக்கெட் அணிகளின் காப்டன்கள் உரையாடினுல் கிரிக்கெட் பற்றி மட்டுமின்றி வேறு பல விஷயங்கள் பற்றியும் ரசமானதகவல்கள் தெரிய வருகின்றன....

ஆஸ்திரேலியப் பெண்கள் கிரிக்கெட் அணி இந்தியாவுக்கு வந்து நாலு. ஒருநாள் சர்வதேச மேட்சுகளை ஆடியது. கடைசி மேட்ச் சென்னையில். வெற்றி ஆஸ்திரேலிய அணிக்கே. இரு அணிகளின் காப்டன்கள் சந்தித்து உரையாடுகிருர்கள்.

சாந்தா ரங்கசாமி: ஹாய் ஜில்! சென்னையில் மீண்டும் உங்களைச் சந்திப்பதில் மகிழ்ச்சி. பல ஊர்களில் நாம் விளையாடியிருந்தாலும் இங்கே தான் சாவகாசமாக அமர்ந்து பேசச் சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. அதற்காகக் கல்கிக்கு நன்றி... உங்கள் ஆட்டத்தைப் பற்றி நிறையவே தெரிந்துகொண்டு விட்டேன். குடும்பத்தைப் பற்றிச் சொல்லுங்களேன்.

ஜில் கெனுரே: எனக்கு மூன்று சகோதரர்கள் ஒரு சகோதரி. என்னைத் தவிர யாருமே எந்த விளையாட்டிலும் கலந்துக்க மாட்டாங்க!

சாந்தா: அப்படியா! எங்க குடும்பம் இதற்கு நேர் விரோதம். எல்லாருமே ஏதாவது ஒரு விளையாட்டில் சிறந்தவங்க. அப்பா அந்த நாளிலேயே கூடைப்பந்தாட்ட வீரர்... நீங்க எப்ப கிரிக்கெட் ஆட ஆரம்பிச்சீங்க?

ஜில்: பள்ளி இறுதி வகுப்பில் படிக்கும் போது எனக்கு நிறைய விளையாட ஆசை ஏற்பட்டது. அப்போது பள்ளியில் கிரிக்கெட் குழு ஆரம்பிக்கப்பட்டது. சேர்ந்தேன்... உங்கள் உடன் பிறந்தவர்கள் எத்தனை பேர். சொல்லலியே....?

சாந்தா: எனக்கு ஆறு சகோதரிகள். ஐந்து பேருக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. என் பன்னிரண்டாவது வயதிலேயே அப்பா இறந்துட்டார். அன்று முதல் அம்மாதான் எல்லாம். எத்தனையோ சிரமப்பட்டு எங்களை வளர்த்தாங்க. என் எட்டாவது வயசிலே அப்பா ஒரு சின்ன பாட் வாங்கித் தந்தார். அதை இன்னும் பத்திரமா வைச்சிருக்கேன்... நீங்க எத்தனை வருஷமா கிரிக்கெட் ஆடறீங்க?

ஜில்: பள்ளியில் விளையாட ஆரம்பிச்சாலும் கல்லூரியில் தான் ஒரு பிடிப்பு ஏற்பட்டது. ஒன்பது வருஷங்களா விளையாடிட்டு வரேன்... இந்தியாவில் பெண்கள் கிரிக்கெட் எத்தனை காலமா இருக்கு...?

சாந்தா: 1973-ல் தான் உருவாச்சு.....

ஜில்: ஆஸ்திரேலியாவில் ஐம்பது வருஷங்களாப் பெண்கள் கிரிக்கெட் இருக்கு. முதல் டெஸ்ட் இங்கிலாந்துக்கு எதிரா நடந்தது. இப்ப பொன் விழாக் கொண்டாட இங்கிலாந்துடன் சில டெஸ்ட்கள் ஆடப்போகிறோம். ஆஸ்திரேலியாவில் வருஷம் எல்லா மாசமும் கிரிக்கெட் ஆட முடியாது. அதனுல் விண்டர் ஸ்போர்ட்ஸில் கலந்துக்குவேன். உடற்பயிற்சி ஆசிரியையா வேலைசெய்யறேன்... நீங்க?

சாந்தா: கிரிக்கெட் தவிர ஸாஃப்ட் பால், பாட்மிண்டன் ஆடுவேன்... மற்றபடி பொழுது போக்கப் புத்தகங்கள் படிப்பேன். சினிமா பார்க்கப்பிடிக்கும். உங்களுக்கு ஹாபி என்ன...?

ஜில்: ஒயின் டேஸ்ட்டிங்! தப்பா புரிஞ்சுக்காதீங்க. ருசி பார்க்கறதோடசரி, குடிக்கறதில்லே!

சாந்தா: தெரியும், தெரியும்! மது முதிர்ச்சி அடைஞ்சுதா இல்லையான்னு பார்க்கறது! எந்த வருஷத்து ஒயின், எங்கே விளைஞ்ச திராட்சை, அப்ப மழை பெய்ஞ்சுதா, இல்லே, நிலம் காய்ஞ்சுதானெல்லாம் ஒயினை ருசி பார்த்தே கண்டுபிடிச்சுடுவாங்க, நிபுணர்கள். அதுதானே....?



ஜில்: ஆமா. அதிலே எனக்கும் தேர்ச்சி உண்டு. வருவாய்க்கும் இடமுண்டு.

சாந்தா: இந்திய சுற்றுப்பயணத்தில் உங்கள் மனத்தை ரொம்பவும் கவர்ந்தது எது?

ஜில்: ஜெய்ப்பூரும் ஹைதராபாத்தும் தான். சென்னையை இன்னும் சுற்றிப் பார்க்கவில்லே. ஹைதராபாத்தில் ரிக்‌ஷாவில் பயணம் செய்ததை மறக்கவே முடியாது.... இந்தப் பயணத்துக்காக நாங்க ஒவ்வொருவரும் தனிப்பட்ட முறையில் இரண்டாயிரம் டாலர் செலவு செய்யறோம். இது திரும்பக் கிடைக்கப் போறதில்லே. ஆனா இது போன்ற பசுமையான நினைவுகளும் வேறு கிட்டப் போறதில்லே... உங்க அயல் நாட்டு அனுபவம் எப்படி?

சாந்தா: மேற்கிந்தியத்தீவுகளில் நாங்க ஆடும் போது ரசிகர்கள் தங்கள் நாட்டு அணியை விட அதிகமாக எங்களைத் தான் ஊக்குவிப்பாங்க. ஒரு பவுண்டரி அடித்தால் ஓடி வந்து ஒரு டாலர் பரிசு கொடுத்து விட்டுப் போவாங்க. லாயிட்டின் தாயார் எங்களை உற்சாகப்படுத்தி வாழ்த்தினார். பாக்கஸ் எங்களுக்குப் பேருதவியாய் இருந்தார். இந்தியக் கிரிக்கெட் வீரர்கள் கவாஸ்கர், அமர்நாத், கிர்மானி போன்ற பலரும் எங்களுடன் சகஜமாகப் பேசி எங்கள் ஆட்டத்தை அபிவிருத்தி செய்ய உதவுவார்கள்..... இந்த விஷயத்தில் உங்க அனுபவம் எப்படி?

ஜில்: உண்மையைச் சொல்லணும்னால் நான் இது வரை எந்த ஆஸ்திரேலிய கிரிக்கெட் வீரரையும் சந்தித்ததே இல்லே! இந்திய வீரர்களையும் எனக்குத் தெரியாது... அதிருக்கட்டும் பம்பாயில் உங்களுக்குத் தலையில் அடிப்பட்டதே தேவலாமா?

சாந்தா: இரண்டு நாள் முன்பு தான் தையல் பிரிந்தார்கள். ஆமதாபாத்தில் நன்றாக ஆடிக் கொண்டிருக்கும் போது கட்டை விரலில் ஃப்ராக்சர்! இந்த சீரிஸைப் பொறுத்தமட்டில் அதிர்ஷ்டம் எனக்குத் துணை நிற்கவில்லை.

ஜில்: ஏன் அப்படிச் சொல்றீர்கள்? சர்வதேசகிரிக்கெட் விளையாட வாய்ப்புக் கிடைத்ததே நம் அதிர்ஷ்டம் என்று கருதுவோமே!

சாந்தா: அதென்னவோ உண்மைதான். பெண்கள் கிரிக்கெட்டைப் பெரிய அளவில் வளர்க்க வேண்டும். பள்ளிகளிலேயே பெண்கள் கிரிக்கெட் ஆடப்படவேண்டும் என்பது என் ஆசை. இந்த லட்சியத்துக்காக உழைக்கத் தீர்மானித்திருக்கிறேன்.

ஜில்: உங்கள் முயற்சி வெற்றி பெற என் வாழ்த்துக்கள்.

சாந்தா: தாங்க்யூ: பெஸ்ட் ஆஃப் லக்!

படம், பேட்டி: **சலன்**

---

# செய்தி வெடிகள்



● ஆயுள் தண்டனை அனுபவித்து வரும் ஒரு கைதி பரோலில் வந்து திருமணம் செய்து கொண்டார். —கடலூர் செய்தி.

★ ஓர் ஆயுள் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருக்கும் போதே, இப்படி யாராவது மற்றொரு ஆயுள் தண்டனைக்கு ஆசைப்படுவார்களா?

● 'ஆனந்தம் இன்று ஆனந்தம்' என்ற படத்தின் பெயர் 'மீண்டும் சந்திப்போம்' என்று மாற்றப்பட்டது. —ஒரு செய்தி.

★ மூன்றும் முறையாக, 'ஆனந்தமாக மீண்டும் சந்திப்போம்' என்று மாற்றப் பட்டாலும் ஆனந்தமே!

● சென்னையில் ஒரே நாளில் 12 அங்குல மழை பெய்தது. —செய்தி.

★ ஒரு 'அடி' அடித்துவிட்டது என்றும் சொல்லலாம்!

● பெரியார் போக்குவரத்துக் கழகம் ரூ.47 லட்சத்துக்கு மேல் லாபம் சம்பாதித்துள்ளது. —விழுப்புரம் செய்தி.

★ பெரியார் பெயரை வைத்திருப்பதால், சிக்கனத்தைத் தாராளமாகவே கடைப் பிடித்திருப்பார்களோ?

—மகரம்

# My Lamp is Lit So That Others Can See



At eventide on a lonely road, returning after a hard day's work, a blind man bearing a lamp met a stranger who laughingly asked: "Does a blind man need light?" "Yes," replied the blind man, "my lamp is lit so that others can see."

On the palm fringed shores of Phansa, near Daman, Tatas have donated a 240 acre farm. Here, the blind are trained as farmers and tradesmen, resettled on their own farms or in co-operative endeavours

**TATA ENTERPRISES**

TS-6153

பெரிய ஹாலில், கூண்டில் அடைக்கப்பட்ட புலி போல உறுமியபடி, குறுக்கும் நெடுக்குமாய் நடை போடுகிறார் பரந்தாமன். ஏற்கெனவே, கடுமையையும், கம்பீரத்தையும், பிரதிபலிக்கும் முகம், கோபத்தில் 'தளதள'வெனக் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையைப் போல....

இயல்பில் அவர் இரட்டை நாடி சரீரத்துடன் சேர்த்திதான். ஆனாலும் ஊளைச் சதையில்லை. அளவான ஆகாரமும், தினசரி தேகப் பயிற்சியும் சேர்ந்து — அந்த உடம்பை அதன் கம்பீரம் குலையாமல் பாதுகாத்து வந்தன... கன்னத்து அதிகபட்ச சதையை முறுக்கி விடப்பட்ட மீசை, தனக்காகவே குத்தகைக்கு விட்ட இடம் போல ஆக்கிரமித்திருந்தது...

மொத்தத்தில் கம்பீரமான ராஜ ராஜ சோழன் — இருபதாம் நூற்றாண்டில் போலீஸ் காக்கி உடை தரித்து வந்தது போல...

அப்பேர்ப்பட்ட மனிதர் — இந்தச் சில நாட்களில் என்னமாய் மாறிவிட்டார்? முகத்தில் இத்தனை நாளும் இல்லாத கிழட்டுக் களை. நிமிர்ந்த மீசையில் கூட அவரின் உள்ளத் தளர்ச்சி தெரிவதுபோல.

''உன் மகனால, நான் இத்தனை வருஷம் வாங்கின நல்ல பேரெல்லாம் போச்சுடி... என்னைப் பார்த்தா — எழுந்து நின்னு ஸல்யூட் அடிக்கற பசங்க எல்லாம், இப்ப— பார்க்காத மாதிரி போறாங்க... டூட்டியில இத்தனை வருஷமா இருக்கேன்... ஒரு பிளாக் மார்க் கிடையாது... ஆச்சு, இன்னும் நாலஞ்சு வருஷம்... அதுக்குள்ள — என்னை மண்ணைக் கவ்வ வச்சுட்டானேடி இவன்...''

மீனாட்சி, முகத்தை மூடிக் கொண்டு அழுகிறாள். என்னதான் மகன் செய்த காரியத்தில் அவளுக்கு வருத்தம் உண்டு என்றாலும், பிள்ளைப் பாசம் அவன் செய்த தவற்றையும் சில சமயங்களில் மிஞ்சத்தான் செய்கிறது.

''சும்மா ஏன் அவனைக் கரிச்சுக் கொட்டறீங்க... எல்லோருமா சேர்ந்து அவன்தான் செஞ்சான், அவன்தான் செஞ்சான்னு குத்தம் சாட்டறீங்களே தவிர — ஏன் செஞ்சான், சண்டைக்குக் காரணமென்ன... எதையாவது பத்தி யோசிக்கறீங்களா.... இந்தப் போலீஸ்காரங்க புத்தியே இது தானே... எவனாவது ஒரு நிரபராதி கையிலக் கிடைச்சா — வசமா அவன் தலையிலேயே அத்தனைப் பழியையும் போடவேண்டியது... குத்தவாளி எதிரிலேயே நிப்பான்... அவனைக் கண்டுக்காமே விட்டுட வேண்டியது...''

''இந்தா, பேசாதே. பேசாதேயின்னு பேசாதே. வாயைத் திறந்தே — கட்டுடுவேன் கட்டு... நீதான்டி அவனுக்குச் செல்லம் கொடுத்துக் குட்டிச் சுவராக்கினே... படவா ராஸ்கல்... அப்பன் கிட்டயே இவன் வித்தையைக் காமிக்கறான்... நான் யாரு தெரியுமில்லே... டேய், உங்க அப்பன்டா. உன்னை மாதிரி எத்தனை அயோக்கியன்களைப் பார்த்திருப்பேன்... அடேய், தமிழ்நாட்டையே கலக்கின நாகலிங்கம் கூட்டத்தை, மைசூர் காட்டுல விரட்டி, விரட்டிப் பிடிச்சவன்டா நான்... ரெண்டு நாள்லே பத்து கொலை செஞ்ச கீர்த்தி வாஸன்கற ரங்கசாமியை — மாஸ்கோ போற பிளேன்லே — ஆகாயத்துலப் பிடிச்சவன்டா நான்...''

பரந்தாமன் நெஞ்சில் ஓங்கிக் குத்திக் கொள்கிறார். உமாவும், விஜியும் படுக்கையறையின் ஓர் ஓரமாய் நின்றபடி இவரையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

'பயப்படாதே' — என்பது போல, விஜி— உமாவின் தோளை இறுக்கமாய்ப் பற்றிக் கொண்டிருக்கிறாள்.

பரந்தாமன், மீனாட்சியின் எதிரில், மிக நெருக்கமாய் வந்து நிற்கிறார். தமது காக்கி சட்டையின் நெஞ்சுப் பகுதியில் செருகியிருந்த பதக்கங்களை 'கலகல'வெனச் சுண்டி விட்டபடி, பெரிசாய்ச் சிரிக்கிறார்.

''இதெல்லாம், எங்க மாமனார் — மாப்பிள்ளைச் சீராகக் கொடுத்த இல்லேடி... என்னோட சேவையை மெச்சி, அரசாங்கம் கொடுத்த பரிசுங்க... இத்தனை பதக்கங்க



# சொல் ஒன்று வேண்டும்

## அனுராதா ரமணன்

ளோட பெருமைக்கு நடுவுல, நெஞ்சுல முள்ளா என் பிள்ளையே எனக்கு உறுத்தலா இருப்பான்னு நான் நினைக்கவே இல்லையே... ஒண்ணு அந்த முள்ளை எடுத்து வீசியெறிய ணும்... இல்லே, இந்தப் பதக்கங்களையெல் லாம், 'எனக்கு அருகதையில்லே'ன்னு தூக்கிக் கொடுத்துடணும். பார்க்கலாம். அவனுக்காச்சு; எனக்காச்சு...''

''அவன் குழந்தைங்க... நீங்க நினைக்கிற மாதிரி திட்டம் போட்டுக் கொலை செய்யற அளவுக்கு...''

''திட்டம் போடலையின்னு எதுக்காக ஓடி ஒளியணும்... மூணு கழுதை வயசாறது. பெத்தவங்க கவலைப்படுவாங்களேன்கற நினைப்பு இருக்க வேண்டாம். பெண்டாட் டியைப் பத்திக் கொஞ்சமாவது நினைச்சுப் பார்த்தானா... ஆச்சு, அவ வயித்துல இவன் பிள்ளை வளர்றதே... அதைப் பத்தி நினைச்சுப் பார்த்தானா... அந்தக் குழந்தை என்னடீ பாவம் செஞ்சுது? பொறக்கறப்பவே கொலை காரன் பிள்ளைங்கற பட்டப் பெயரோட பொறக்கறதுக்கு...''

இந்த வார்த்தைகள் உமாவை நிலைகுலையச் செய்து விட்டன. அவள் பெரிசாய் விம்முகிறாள்.

அந்த விம்மலைக் கேட்டதும், திடுக் கிட்டுத் தம் தவறை உணர் கிறார் பரந்தாமன்.

''உமா...''

இவரது குரலின் குழைவே – அவளது துக்கத்தை அதிகரிக்கச் செய்ய – விஜியின் கைப்பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டவள், ஓடிப் போய் படுக்கையில் விழுந்து 'ஓ' வெனக் கதற... சமாதானப் படுத்த அவர் வேகமாய் உமாவின் படுக்கை யறைக்குள் நுழைகிறார்.

பரந்தாமனிடம் ஒரு குணம்: எத்தனை தான் நெருங்கிய சொந்தமென்றாலும் – அநாவசியமாய் அவர்களின் அந்தரங்கங் களில் தலையிட மாட்டார்...

மகனுக்குத் திருமணமானதிலிருந்து – இன்று வரையில், அவர் மகன், மருமகளின் படுக்கையறைக்குள் நுழைந்ததேயில்லை.



கொலை நடந்த அன்று கூட, இன்ஸ்பெக்டர்தான் ராஜாவின் அறையைத் தலைகீழாகப் புரட்டினார். பரந்தாமன் ஹாலிலேயே தான் உட்கார்ந்திருந்தார்.

இன்று, அந்த அறைக்குள் நுழையவே தயக்கமாக... லஜ்ஜையாக...

பெரிய இரட்டைக் கட்டில், கட்டிலின் தலைமாட்டுச் சுவரில், ராஜாவும், உமாவும் மாலையும் கழுத்துமாய் எடுத்துக் கொண்ட புகைப்படம். எதிர் சுவரில் – இந்தப்புகைப் படத்தை அப்படியே பிரதிபலிக்கும் பெரிய நிலைக்கண்ணாடி. படுக்கையிலிருந்தபடி பார்த்தால் – கண்ணாடி வழியே உமா வும் ராஜாவும் சிரிப்பார்கள்... பக்கச் சுவரில் கண்ணாடி அலமாரிக்குள் சில புத்தகங்கள்... அதன் பக்கத்தில் சின்னதாய் ஒரு ஸைலூலாயிட் பொம்மை. காலண்டர் – ராஜா அந்த வீட்டிலிருந்து மறைந்த கடைசி நாளைக் காட்டுவதாய்... கட்டிலை ஒட்டிய மேஜை விளக்கினடியில் தூசு படிந்த நிலையில் ஒரு புத்தகம்...

'ம னை வி யை த் திருப்தி செய்வது எப்படி...?'

ஆங்கிலப் புத்தகம். அட்டையில் ஒருவன், தன் மனைவிக்கு மேல்நாட்டு முறையில் முத்தமிட்டுக் கொண்டிருந்தான்.

பரந்தாமன், 'சட்'டென்று புத்தகத்தின் அட்டையிலிருந்து தம் பார்வையை நகர்த்திக் கொள்கிறார்...

இளைஞர்களின் அறையில் இதெல்லாம் சகஜம். இதே புத்தகத்தை – சாதாரணமான நாளில் பார்த்திருந்தால் தமக்குள் நமட்டுச் சிரிப்புடன் நகர்ந்திருப்பார். மீனாட்சியிடம் இதுபற்றி, தனிமையில் சொல்லி, சீண்டியிருப்பார்.

---

அவன்: தெரியுமா, ராஜூ எழுபது நாடுகளோட கரன்ஸிகளைச் சேர்த்திருக்கானாம்.

இவன்: கெடக்கு விடு. என்னால நம்ம நாட்டு கரென்ஸிகளையே சேர்க்க முடியல. வயிற்றெரிச்சலைக் கௌப்பாதே.

—செலட்சுமி.



''ஏய்... இதுக்குப் போய் நம்ம பையன் புஸ்தகம் படிக்கறான். புஸ்தகம் படிச்சுத் தெரிஞ்சுக்க வேண்டிய விஷயமாடி இது... நான் எந்தப் புஸ்தகத்தைப் படித்தேன்...''

''போதும்... சும்மாயிருங்க...''

''இப்ப நான் என்ன சொல்லிட்டேன்னு புருபுருங்கறே... என் பிள்ளையா இருந்துட்டு இதுக்கெல்லாம் போய்ப் புஸ்தகத்தைப் புரட்டிட்டிருக்கானேன்னு சொன்னேன். ஒண்ணு செய். உன் மருமகளைக் கேட்டு, பிள்ளை அந்தப் புஸ்தகத்தைப் படிச்சு முடிச் சுட்டான்னு வாங்கிட்டு வா...''

''எதுக்கு?''

''எதுக்கா? அட, நம்ம நாட்டுக்காரனை விட இந்த இங்கிலீஷ்காரனுக்கு இதைப் பத்தி என்னத்தைப் பெரிசாத் தெரிஞ்சிருக்கப் போறதுன்னு பார்க்கத்தான்.. பொண்டாட்டியத் திருப்திப் பண்ண நம்ம வங்க மாதிரி இன்னொருத்தனால முடியுமா? ஒருத்தி கூடவே நாப்பது அம்பது வருஷத்துக்கு மேல குப்பைக் கொட்டற ஒரே மனுஷன் இந்தியன்தான்டி...''

பரந்தாமன், கன்னத்துச் சதை குலுங்கச் சிரித்திருப்பார், இப்படியெல்லாம் பேசிச் சிரிக்கக் கூடியவர்தான் அவர்.

ஆனால், இப்பொழுதோ...

அந்தப் புத்தகமே அவருள் துயரத்தை அதிகரிக்கச் செய்கிறது...

'ஓ... என் மகன், இன்னும் வாழ்க்கையில் எத்தனையோ சுகங்களை அனுபவிக்க வேண்டியவன். அவைகளை எல்லாம் அனுபவிக்க வேண்டும் என்கிற ஆசையில் – இந்த விஷயத்துக்கு முதல் நாளிரவு கூடப் புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தவன்.. இதில் வரும் வாக்கியங்களைத் தன் மனைவியிடம் சிரித்தபடி சொல்லி, தன் சுகத்தைப் பகிர்ந்து கொண்டவன்... அடுத்த பக்கத்தை நாளைக்குப் படிக்கவா – இல்லை, இப்பொழுதே படிக்கவா என்று குறும்பாய் அவளிடம் கேட்டு விளையாடியவன்... இதையெல்லாம் விட்டுவிட்டு எங்கே போனான்... என்ன ஆனான்...

''உமா... அம்மா உமா...''

அவர், கட்டிலின் விளிம்பில் அமர்கிறார்.

மாமனாரின் குரல் கேட்டதுமே, வாரிச் சுருட்டிக் கொண்டு எழ முயற்சிசெய்கிறாள் அந்த அப்பாவிப் பெண்.

பரந்தாமன் தான் தடுக்கிறார்.

''இந்தா, இந்த மரியாதையெல்லாம் இப்ப வேண்டாம். உன் கிட்ட மன்னிப்புக் கேட்கத்தான் வந்தேன்...''

''ஐயோ... என்ன மாமா பெரிய வார்த்தையெல்லாம் சொல்றீங்க...''

உமா, பரபரப்புடன் கண்களைத் துடைத்துக் கொள்கிறாள்.

பரந்தாமன், அவளையே கூர்ந்து பார்க்கிறார்.

திருமணத்துக்கு – இப்பொழுது எத்தனை வாடி விட்டாள் இவள்... ஏற்கெனவே மெலிந்த, கொடி போன்ற தேகம், சிவந்த மேனி சற்றே வெளுத்திருந்தது... கழுத்தில் பச்சை நரம்பு ஓடியது...நீண்ட

கூந்தலை அள்ளி முடிந்தபடி, அசோகவனத்து சீதை மாதிரி அவள் அமர்ந்திருந்த கோலம்...

கடின சித்தரான பரந்தாமனே, கண் கலங்கி விட்டார்.

''அம்மா, நீ சாதாரண ஏழைக் குடும்பத்து மருமகளாப் போயிருந்தாக்கூட நிம்மதியா இருந்திருப்பே... உன் தலைவிதி...''

''ஐயய்யோ, அப்படிச் சொல்லாதீங்க மாமா. இந்த மாதிரி குடும்பத்துல மருமகளா வர நான் ரொம்பவுமே கொடுத்து வச்சிருக்கேன்... உங்க பிள்ளையுமே... வெளியில யார் எப்படிச் சொன்னாலும்... என்னைப் பொறுத்த வரையில உத்தமர்... மாமா, அவர் திட்டமிட்டு இந்தக்கொலைய செஞ்சிருப்பார்னு நினைக்கறீங்க... இருக்காது மாமா... அவருக்கு முதல்லே பிளான் போடவே தெரியாது மாமா... நாளைக்கு ஆபீசுக்கு என்ன டிரஸ் போட்டுக்கணும்கறதைப் பத்திக் கூட நான்தான் அவருக்குச் சொல்லணும்...''

அவள் குலுங்கிக் குலுங்கி அழுகிறாள். பரந்தாமன், அவளையே பார்த்தபடி அமர்ந்திருக்கிறார்.

'இவளை என்ன சொல்லித் தேற்றுவது...?'

''உமா...''

''என்ன மாமா...''

''இங்கே இருந்தா உன் மனசு ரொம்பவுமே பாதிக்கப்படறது. கொஞ்ச நாள் உன் பிறந்த வீட்டுல... இதப்பாரு, அப்படிப் பார்க்காதே. நான் உன்னைத் துரத்தலை தாயே... ஒரு மாறுதலுக்கு இருந்துட்டு வரியான்னு கேட்டேன்.''

''அவரில்லாம நான் என் பிறந்த வீட்டுப் பக்கமே போக மாட்டேன் மாமா. கல்யாணத்துக்கு அப்புறம் ஒரு பொண்ணு பிறந்த வீட்டை நினைக்கறதே தப்பு. அதுவும் என்னை மாதிரி நிலைமையில இருக்கறவ — பிறந்த வீட்டுல மதிப்பா, நிம்மதியா அரை நிமிஷம் கூட இருக்க முடியாது... இதோ பாருங்க...''

அவள், தனது முதுகுப் புறத்தில் மடித்துப் போடப் பட்டிருந்த, ராஜாவின் கட்டம் போட்ட லுங்கியை எடுத்துக் காண்பிக்கிறாள்...

''இது — அன்னிக்குக் காலையில அவர் கட்டியிருந்தது. ஆபீசுக்குக் கிளம்பறதுக்காக, பேண்ட், ஷர்ட்டை மாத்திட்டு, விளையாட்டா இதை என் மூஞ்சியிலத்தூக்கி யெறிஞ்சுட்டுப் போனார்... ராத்திரியும் பகலும் இதுதான் எனக்குத் துணை... எனக்குப் பிள்ளை பிறந்தாக் கூட —இந்த லுங்கியிலத்தான் அதுக்குத் தூளி கட்டிப் போடுவேன்... 'இதையே உங்க அப்பாவோட மடியா நினைக்கத் தூங்குடா கண்ணு'—ன்னு.''

அவள், இதைச் சொல்லி முடிக்கையில், பரந்தாமன், தம் வயது, உத்தியோகம், எல்லாவற்றையும் மறந்து பெரிசாய், வாய் விட்டு அழுது விட்டார்... மீனாட்சியோ, எதற்குமே கலங்காத தன் கணவனே அழுவதைக் கண்டு, பதறிப் போய் ஓடி



''உங்க உடம்பு மெலியணும்னு தினசரி கொஞ்ச தூரம் ஓடணும்!''

''நடக்கக் கூடிய காரியமா சொல்லுங்க டாக்டர்!''

—பாதுஷா.

வந்து, அவரது தலையைத் தன் நெஞ்சோடு சேர்த்தணைத்துப் புலம்புகிறாள்.

''அழாதீங்க... நம்ம குடும்பத்துக்கு எந்த ஒரு தீம்பும் வராது... நாம யாருக்கு என்ன துரோகம் செஞ்சோம். வருஷம் தவறாம குலதெய்வத்துக்குப் பூஜை போடலையா? படையல் போடலையா? கடவுள் உங்களுக்கு எந்தக் குறையும் வைக்க மாட்டார்...''

பரந்தாமன், முகத்தை அழுந்தத்துடைத்தபடி — மீனாட்சியைப் பார்க்கிறார்.

''மீனாட்சி...''

''என்னங்க...''

''நம்ம குடும்பத்துலேயே வம்சா வம்சமா ஒரு தாய்க்கு ஒரு பிள்ளைதான், இல்லையா..''

''ஆமாங்க... அதான் எனக்குப்பொறந்த ஒரே மகனையும் என் கிட்டேயிருந்து பிரிச்சு, வேடிக்கை பார்க்குதே இந்தவிதி...''

''நான் அதைச் சொல்லலை மீனாட்சி... உனக்கு ராஜா வயித்துல இருந்தப்ப — ஏழாம் மாசத்துல வளையல் காப்பு — இதே வீட்டுல அமர்க்களமா நடந்துதே... ஞாபகம் இருக்கா... இப்ப உமாவுக்கும் அந்தச் சடங்கை எதையும் விடாம செய்...''

''அதெல்லாம் வேண்டாம் மாமா...''

உமா தடுத்து ஏதோ சொல்ல முயல —பரந்தாமன் அவளை ஒரு கையால் அடக்கியபடி சொல்கிறார்:

''என் பேரனுக்கு எந்த ஒரு குறையும் இருக்கக் கூடாது. மீனாட்சி... உமாவுக்கு வளைகாப்புக்கு ஏற்பாடு செய்... மாமியார் சீரா... உனக்கு எங்கம்மா போட்ட வைர வளையலை அவ கையில மாட்டு. ஊரை அழைச்சு விருந்து வை... என் மகன் எப்படியும் திரும்பி வருவான். ஆனா ஒரு பொண்ணுக்குத் தலைச்சன் பேறு அனுபவம், வாழ்க்கையில மறுபடியும் கிடைக்காது..''

இதைச் சொல்லிவிட்டு, அங்கே நிற்காமல் நகருகிறார் பரந்தாமன். மீனாட்சி, மருமகளை அணைத்து, தன் அறைக்கு அழைத்துப் போகிறாள்...

விதி—

அது நேரம் வரையில் உமாவின் பின்புறம் மடித்து வைக்கப்பட்டிருந்த ராஜாவின் லுங்கியை, கண்ணீர் மல்க, எடுத்து, முகத்தில் ஒற்றிக்கொள்கிறாள். (தொடரும்)

# ம்ம்ம்மாாாஞ்ற......

இன்றைக்கும் தெருவை. அடைத்துக் கொண்டு தான் அந்த மாடு நின்றிருந்தது.

அதைப் பார்த்தவுடன் அவன், அடிவயிற்றில் நெருப்புச் சட்டியைத் தூக்கி வைத்தாற் போல ஒரு சின்ன சூடு பரவுவதை உணர்ந்தான். அவனுக்கு அந்தச் சந்தின் மீதே ஒரு வெறுப்பு.

தெருவே இரண்டு பேர் அகல வாக்கில் படுத்தால், அதில் ஒருவன் கால் மடக்கிப் படுக்க வேண்டிய விஸ்தாரம். அதில் அடுத்த வீட்டு ஜன்னல் அருகே மாடு வந்த முதல் நாளே இருந்தது. ஒருநாள் சமாசாரம் போலும் என்று நினைத்திருந்தான். அப்புறம் பார்த்தால் அடுத்த நாள், அதற்கடுத்த நாள் என்று அவன் தெரு



விற்குக் குடி பெயர்ந்து ஆகிற ஏழு நாட்களிலும் வளர்பிறைக்கதை.

நூற்றிருபது ரூபாய் வாடகைக்கு, அந்தச் சந்தில் தான் வீட்டை வாடகைக்கு விடுபவர்கள் மிச்சம் வைத்திருந்தார்கள். அப்புறம் தெருவைப் பற்றி அநாவசியமாய்ச் சொல்லக் கூடாதுதான் என்றாலும், அந்த உள் புழுக்கத்தை அவனால் தவிர்க்க முடியவில்லை.

தெரு திரும்பினவுடன் எச்சரிக்கை எழுத்துக்கள் தான் முதலில் கண்ணில் விழுந்து தெறிக்கும்.

'இங்கே சிறுநீர், மலஜலம் கழிப்பவர்கள் மடையர்கள். சிறுநீர் கழிக்காதேடா முட்டாளே...'

அந்த எழுத்துக்களுக்கு அப்படி ஒரு ராசி. அத்தனை பேரும் மடையர்களாகவும், முட்டாள்களாகவும் இருக்கத் தயாராயிருந்தார்கள்.

நாசி இந்த ஏழு நாட்களுக்குள் சமனப்பட்டுப் போயிற்று. ஓர் ஒற்றையடிப்பாதையளவிற்கு மட்டுமே மனிதர்கள் நடமாடுகிற அகலம். அதிலும் பெரும் பகுதியை அடைத்துக் கொண்டு அந்த மாடு. உண்மையில் அந்த மாட்டால் அவனுக்கு எந்தத் தொந்தரவும் இல்லைதான்.

அந்த மாடு கிட்டத்தட்ட அவன் உயரம். முகத்திலும், பின் முதுகிலும் இருந்த பழுப்பு போக மிச்சமெல்லாம் வெள்ளை. வால் ஒரு தாம்புக் கயிறு மாதிரி நீண்டு முடிவில் ஒரு கறுப்பு மயிர்க்குஞ்சலம். கண்களில் பரிசல் ஏறிப் பவனி வரலாம் போல எப்போதும் தெரிகிற நீர்ப்பரப்பின் மினுமினுப்பு. முதுகில் திமில், தனியாய்




ஒரு வட்டக் கல்லை ஏற்றின மாதிரி. வெள்ளை ரோமம் அங்கங்கே சுழி கண்டிருக்கும். சில சிலிர்த்த சமயங்களில் ரோமம் முழுக்க எழும்பி அடங்கும். கொஞ்சம் அகலமான மேடு தட்டிய நெற்றியில் மறுபடி அந்த ரோமச் சுழிவு. கறுப்பாய்த் தெரியும் மேல் உதடு. அதில் எப்போதும் எண்ணெய் தடவின பளபளப்பு. அகன்ற நாசித் துவாரம். மூச்சு பெருமூச்சாய்ப் பிரிகையில் அது இன்னும் விரிந்து சுருங்கும். அப்புறம் கீழ் வாயும், அதைத் தொடர்ந்து தளர்ந்த சதையும். ஒரு பட்டுப் புடவையின் மடிந்த தலைப்பு போல அது தொய்ந்து தொங்கும். சற்றே கறுத்த முட்டிகளுடன் முன்னங் கால்கள். ஏர்க் கலப்பை மாதிரி மடிகிற பின்னங்கால்கள். விரற்கிடை இடைவெளி விட்டுப் பிரிந்த குளம்புகள். இன்றைக்கும் அவன் தெருவில் நுழைந்து சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வருகையில் கழுத்துக் கயிறைக் கொஞ்சம் தளர்த்திக் கொண்டு சுவரோடு சுவராய் ஒதுங்கிக் கொண்டு வழி விட்டது. உரித்த வாழைப்பூ மட்டை மாதிரி இருந்த காதை ஒருதரம் அசைத்தது. அதன் பிரம்மாண்ட உடம்பைப் பார்க்கிற போதெல்லாம் தனக்குள் எழுகிற இனி நியாயமில்லாததோ என்று எண்ணம் வந்தது. சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி விட்டுக் காய்கறிப் பையை உள்ளே கொடுத்து விட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்தான்.

இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமையாகிப் போனதால் வெட்டி முறிக்க வேலையில்லை. இலக்கில்லாமல் தெருவை வெறித்துக் கொண்டிருந்தாலும் காட்சிகள் தப்பிப்போய் விடவில்லை. மாட்டுக்காரன் ஒரு தொட்டியைக் கொண்டு வந்து அதனருகில் வைத்து விட்டு அதன் பின் முதுகில் ஒரு தட்டு தட்டினான். உடல் சிலிர்த்துக்கொண்டது. பின் மெதுவாய் வாயை அதில் நுழைத்தது. ஒரு சின்ன செய்தி படிக்கிற நேரத்தில் தலையை நிமிர்த்திக் கம்பீரமாய் ஒரு பார்வை. பின் ஆசுவாசம். பின் தலை நுழைப்பு. ஒரு 'ஜர்' என்ற உறிஞ்சல் இல்லை. ஒரு சத்தம் இல்லை. ஐந்து நிமிடங்களில் தொட்டி காலியாகி இருக்க வேண்டும். தடித்த நாவை நீட்டி நாசித் துவாரங்களைச் சுத்தம் செய்து கொண்டது. அவன் எழுந்து வெற்றிலைச் சாறைத் துப்புகிற மாதிரி வாசலுக்கு வந்தான். ஓர் ஓரக் கண்ணில் தொட்டியைப் பார்த்தான். தொட்டி சுத்தமாய்க் காலியாகி இருந்தது.

கொஞ்சம் வியப்புடன் வெற்றிலை எச்சிலைத் துப்பாமல் விழுங்கி விட்டு உள்ளே வந்தான்.

மாடு மறுபடியும் அமர்ந்து கொண்டது. நிமிர்ந்த தலையும், திமிலுமாய், வாய் லேசாய் அசை போட்டுக் கொண்டிருந்தது. திடீரென்று பக்கத்தில் வந்து நின்ற எச்சில் இலை நாயை வளைந்த கொம்பை ஆட்டி மிரட்டி விரட்டியது. அந்தக் கொம்பைப் பார்த்தால் அவனுக்கு உள்ளூர பயமாக இருந்தது. குத்தினால் குடல் மாலையாய்த் தான் வெளியில் வரும்.

அந்தப் பய நேரத்தில் எதிர் வீட்டுக் குழந்தைகள் ஒன்றை ஒன்று துரத்திக் கொண்டு வெளியில் ஓடி வந்தன. துரத்தல் வேகத்தில் திசை புரியாமல் சின்னக் குழந்தை மாட்டுக்குப் பக்கத்தில் ஓடி விட்டது.

அவன் கைகால் பதற, கையிலிருந்த பேப்பர் பக்கம் பக்கமாய்க் கீழே சிதற எழுந்து வாசலுக்கு ஓடினான். குழந்தை அதற்குள் மாட்டுக்கால் இடறி அதன் மேலேயே விழுந்து விட்டது. மாட்டின் ஒரு ஆக்ரோஷத் தலையாட்டலில் வளைந்த கொம்பு அந்தக் குழந்தையின் விலாவைக் குத்திக் கிழிக்கும் என்ற பயம் தாக்க அவன் குழந்தையை வாரி எடுக்க ஓடினான். ஒரு சின்ன 'ஐயோ' வாயிலிருந்து தானாய்ப் பிரிந்திருந்தது.

''மாடு... மாடும்மா.. பாப்பா... இப்படி வந்துடு... வந்துடு...'' என்று கூவினான்.

குழந்தை அவனைக் கண்டுதான் மிரண்டு போனது. துரத்தி வந்த குழந்தையும் அவனை லட்சியம் செய்யாமல் மாட்டுக்குப் பக்கத்தில் போய் அதன் முதுகில் விழுந்தது.

சின்னக் குழந்தை சிரிக்க ஆரம்பித்தது. சின்ன விரல்களையும், உள்ளங்கைகளையும் சேர்த்து மாட்டைத் தட்டிக் கொடுத்தது.

''இது நம்ப மாடு மாமா... ஒண்ணுஞ் செய்யாது...'' என்று சொல்லி விட்டு அதன் அகன்ற வயிற்றை வாயிதழ்களால் முத்தமிட்டது.

ஒவ்வொரு அடியாய் எடுத்து வைத்து மாட்டுக்கருகில் போனான். உள்ளூர ஒரு நடுக்கம் உடல் முழுமைக்கும் வியாபிப்பதை உணர்ந்தான். இருந்தும் அந்த நடுக்கத்தோடு பக்கத்தில் போய் அதன் கழுத்தில் கையை வைத்தான். மாடு மறுபடியும் சிலிர்த்துக் கொண்டது. ஓடுகிற ஆற்றுத் தண்ணீரில் புதிதாய்க் காலை வைப்பவன் மாதிரி அவன் தடுமாறிப் போனான். அந்தக் கழுத்துச் சதையின் மென்மையை அனுபவித்து அயர்ந்து போனான். மெல்ல வருடினான். மாடு அவனுக்கும் வாகாய்க் கழுத்தை நீட்டிற்று.

மதியம் மூன்று மணிக்கு மாட்டுக்காரன் வந்தான். அவன் கையில் திமிறிக் கொண்டு கன்றுக் குட்டி. குழந்தைகள் மனமில்லாமல் எழுந்து ஓடினர்.

மாடு எழுந்து நின்று கொண்டது. கால்களை லேசாய் அகட்டிக் கொண்டு நின்றது. அவன் வீட்டுச் சின்னச் செப்புத் தவலை மாதிரி மடி. விரிந்த தாமரை மாதிரி. அதில் ரோஜா நிறத்தில் நீண்ட காம்புகள். கன்று ஓடி வந்து குனிந்தது. காம்பு மாற்றிக் காம்பு மாற்றி அதன் மடியில் வாய் வைத்து முட்டிற்று.

மாட்டுக்காரன் கன்றை இழுத்து ஜன்னலோடு கட்டினான். மாடு கன்றை முகத்தோடு முகம் சேர்த்துக் கொண்டது. சொர சொர நாக்கினால் சர் சர் என்று கன்றின் உடம்பை வருடிவிட்டது. மாட்டுக்காரன் நிதானமாய்ப் பால் கறந்தான். நுங்கும் நுரையுமாய் அவன் கொண்டு வந்திருந்த 'ஜோடு தவலை' நிறையப் பால். நுரை லேசாய்க் கீழே சரிந்த சமயத்தில் அவன் காம்பை அழுத்தி ஒரு இழு இழுத்து விட்டு எழுந்து கன்றை அவிழ்த்து விட்டான். மாடு இப்போது பின்புறம் திரும்பிக் கன்றின் உடம்பைத் தேடிக் கண்டுபிடித்து மறுபடி வருட ஆரம்பித்தது.

---

''மாயங்கள்'னு நீங்க எடுத்த படத்தோட பெயரை 'காயங்கள்'னு மாத்திட்டீங்களாமே.''

''ஆமாம். சென்சாரில் நிறைய வெட்டிட்டாங்க.''

—சேலம். அ. கதிர்வேல்.



அன்றைக்கு முழுக்க அவனுக்குப் பிரமிப்பாய் இருந்தது. ராத்திரி வனஜா தொட்ட போது கூட அந்த மாடு அவன் முகத்தருகே வந்து சொர சொர நாவால் வருடுகிற மாதிரி உணர்ந்து உடம்பு சிலிர்த்தது.

திடீரென்று அந்தத் துக்கம் நிகழ்ந்தது.

—ஒரு புதன்கிழமை சாயந்திரம் அலுவலகம் மூடிய பின் அவன் வீடு திரும்புகிற போதே கவனித்தான்.

தெருவை அடைத்து நின்ற மாடு வழக்கம் போல் ஒதுங்காமல் மறித்து நின்றது.

''ப்பா... ப்பா...'' என்று சொல்லிப் பார்த்தான். அது அசையாமல் போகவே ஓரமாய் ஒதுங்கி சைக்கிள் பெடல் அதன் காலில் பட்டுவிடாமல் ஜாக்கிரதையாய்ச் சாய்த்துத் தள்ளிக் கொண்டு கடந்தான்.

வீட்டிற்குள் நுழைந்ததுமே தாங்காமல் போய் வனஜாவிடம் கேட்டான்.

''இன்னிக்கு என்ன வந்துது மாட்டுக்கு? விளையாடறகொழந்தைங்களையும்காணும்?''

''அதுங்கன்னுக்குட்டி காலையில செத்துப் போயிடிச்சிங்க...'' என்றாள் வனஜா பாத்திரத்தைத் தேய்த்துக் கொண்டே.

''அப்படியா...?'' என்று திடுக்கிட்டான் அவன்.

அந்த உயரமான கன்று, தாயை அப்படியே சின்ன அளவில் செய்த மாதிரி இருந்ததே அந்தக் கன்று? முட்டிமுட்டி ஆனந்தமாய்ப் பால் குடிக்குமே அதற்கு என்ன ஆயிற்று?

''என்ன ஆச்சி வனஜா...?'' என்றான்.

''அதென்னவோ தெரியலே... காலை அது கவர்ன்மெண்ட் எஸ்டேட் பக்கம் மேயப் போயிருக்குது... எப்பவும் அப்படித்தான் மேயப் போகுமாம். பால் கறக்கற நேரத்துக்கு வந்துடுமாம்... இன்னிக்குப் பதினொரு மணிக்கே ஓடியாந்திடிச்சி... என்ன ஓட்டம்... தெருவில இந்த ஓரம் ஒரு கால், துள்ளி அந்த ஓரம் ஒரு கால்,... வந்து நின்னவுடனே கீழே சாய்ஞ்சிடிச்சி... நுரை நுரையாத் தள்ளிச்சு... ஒடம்பு கொஞ்சம் கொஞ்சமா நீலமாயிடிச்சி... பாம்பு கடிச்சிருக்கும்னுங்க... மாட்டுக்காரன் வந்து பாக்கறதுக்குள்ள கருத்துப் போய்த் தலையைச் சாய்ச்சிடிச்சி... மாடு என்னமாக் கத்திச்சன்றீங்க... மத்தியானம் பால் கறக்கலே... அப்ப நின்னது தான்... இன்னும் உக்காரவே இல்லே...''

''பாவம்...''

அப்புறம் ஐந்து நாட்களுக்கு அந்த மாட்டைத் தொந்தரவு செய்யாமல் வேறு வழியாய் சைக்கிளை எடுத்துக்கொண்டு போனான். ஒவ்வொரு மாலையிலும் ''மாடு இன்னிக்கும் பால் கறக்கலேங்க...'' என்றாள் வனஜா. மாட்டுக்கு மடி இப்போது இன்னும் பெரிதாய்த் தெரிந்தது.

''கிட்டப் போனா நம்மாள்வாரையே எட்டி உதைக்குதுங்க...''

''யாரு மாட்டுக்காரனையா...?''

''ஆமாங்க... அவனுக்கு அப்படியே



# வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்...
# பற்சிதைவை எதிர்த்திடுவீர்






கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா, சிறப்புடன் செயல்பட்டு நீங்கள் பல்துலக்கும் ஒவ்வொரு முறையும் உங்களுக்கு புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம் அளிக்கின்றது. பற்களுக்கு ஆரோக்கியமும் உறுதியும் தருகிறது.

எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர் நாற்றத்தையும் பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச்சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கு எதிரான பாதுகாப்பு, உறுதிமிக்க ஆரோக்கியமான பற்கள்.

ஆகவே, சாப்பிட்டு முடிந்தவுடனேயே மறக்காமல் கோல்கேட் டெண்டல் க்ரீம் உபயோகித்து பிரஷ் செய்யுங்கள்.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்**
**பெப்பர்மென்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது!**

OCH.682.86 TM

கண்ணு கலங்கிப் போவுது. மாட்டும்பேர்ல உசிரையே வச்சிருக்கான்...''

அந்தாம் நாள் சாயங்காலம் மாட்டுக் கருகில் நான்கைந்து பேர் கூடியிருந்தார்கள். பக்கத்தில் ஒரு ஆளெபடி அண்டா நிறைய ஆவி படர்ந்த வெந்நீர்.

மாடு கால் மாற்றி கால் மாற்றி நின்றிருக்க, ஒருவன் திடீரென்று அந்தக் கொதி நீரை மொண்டு அதன் மடியில் ஜிர் ரென்று ஊற்றினான். மாடு ஒரு குதி குதித்தது. மொத்தத் தெருவையும் சுற்றி ஒரு அரை வட்டம் போட்டது.

நம்மாள்வார் மாட்டருகே சென்று காம்பில் கையை வைத்தான். உடனே அது பின்னங்காலே உதைத்தது.

மறுபடியும் கொதி நீரை மொண்டு ஊற்றினார்கள்.

'விட்டுடுங்கப்பா... போனப்போவுது பாவம்...' என்று சொல்ல நினைத்து ஒரு துளிக் கண்ணீரோடு வார்த்தைகளை அடக்கிக் கொண்டான் அவன். அரை மணி நேரத்திற்கப்புறம் அதன் காம்பைப்பிடித்து, இழுத்து அத்தனை பாலேயும் சாக்கடைக்குப் பீய்ச்சி அடித்தார்கள். பால் திரிதிரியாகக் கீழேயிறங்கியது.

மறுபடியும் இன்னொரு ஞாயிறு விடிந்தாயிற்று. அவனுக்கு ஞாயிறுகள் எல்லாம் அந்தத் திண்ணையில் தான் கழிந்துபோகின்றன.

அவன் பார்த்துக் கொண்டிருக்கிறபோதே எதிர் வீட்டுக் குழந்தைகள் தடதடவென்று இறங்கி ஓடி வந்தார்கள். வந்த வேகத்தில் நேரே மாட்டுக்கு அருகில் போனார்கள்.

அவன் பதறினான். இது பழைய மாடு இல்லே. குட்டி இழந்த துன்பத்தில் இருக்கிற மாடு. அந்த வெறுப்பில் கொம்பை நீட்டி விடுமோ என்று படபடப்பாய் இருந்தது.

அதற்குள் குழந்தைகள் மாட்டின் மீது விழுந்தன.

அவன் பயந்தபடி ஒன்றும் ஆகவில்லே.

மாடு பழையபடி கழுத்தை வளைத்து நீட்டிற்று. நாக்கை நீட்டித் துழாவிச் சின்னப் பையனின் புறங்கையைச் சரசரவென ஓசைபட நக்கிக் கொடுத்தது.

''பார்ரா... மாடு இன்னிக்குக் கையை நக்குது...''

திடீரென்று எதிர் வீட்டு அன்னம் வெளியே வந்தாள். குழந்தைகளை மாட்டிற்கு அவ்வளவு அருகே பார்த்ததும் அரண்டு போனாள். அவளுக்கு அடிவயிறு பிசைந்து கொடுத்ததோ என்னவோ, உள்ளங்கையால் மேல் புடவையோடு அதைப் பொத்திக் கொண்டாள்.

''டேய் சீனு... ரகு... அங்க ஏண்டாப் போனீங்க... வந்துடுங்க... மாடு முட்டிடும்...'' என்று கீச்சுக் குரலில் கத்தினாள்.

''கொஞ்ச நேரம் வெளேயாடிட்டு வரோம்... நீ போ... இது எப்படிக்கையை நக்குது பாரும்மா...''



அப்பா: இவ்வளவு நேரம் ''குரங்கும் அப்பமும் கதை'' படிச்சியே என்னடா தெரிஞ்சுக்கிட்டே?

பையன்: பூனைங்ககிட்ட இருந்த அப்பம் ரொம்ப ருசியா இருக்கும்னு தெரிஞ்சுக்கிட்டேன்.

—எஸ். உமா.

---

''ஐயோ வாடான்னு... கண்ணு இல்லாத மாடு... கொம்பால குத்திடும்... ஓடிவந்துடுங்கடா...''

அவள் மெல்லத் தெருவில் இறங்கினாள். முகம் பயத்தில் தோய்ந்திருந்தது. ஒரே எட்டில் மாட்டை அணுகினாள்.

''வாடா...'' என்று சிறுவனின் கையைப் பற்றி இழுத்தாள். அவள் இன்னொருகையை மாட்டின் கழுத்து மணிக்கயிறுடன் கோத்துக் கொண்டு திமிறினாள்.

மாடு திடீரென தலையை அசைத்துக் கொம்பைத் துருத்தி அவளின் விலாவைத் தொட்டு மீண்டது. அன்னம் பதறிப்போய்ப் பின்னால் நகர்ந்து மல்லாக்க விழுந்தாள்.

அவன் திண்ணையிலிருந்து பதறிக்கொண்டு எழுந்தான்.

''குத்திடிச்சா?...'' என்றான்.

''இல்லே குத்தலே...'' அவள் அவசரமாய் ஒரு வெட்கத்தோடு சுதாரித்து எழுந்தாள். ''வாடா...'' என்றாள் தூர நின்றபடியே.

மாடு மறுபடியும் அவளேப் பார்த்துத் தலையை ஆட்டியது. 'எங்களைத் தொந்தரவு செய்யாதே' என்று அது சொன்ன மாதிரி அவனுக்குப் பட்டது. மறுபடியும் சிறுவனின் கையைத் தேடி வர்ரக் வர்ரக் என்று நக்க ஆரம்பித்தது.

அவன் அதன் அருகில் போனான். மெல்ல அதன் கழுத்துத் தசையை வருடிக் கொடுத்தான். அதன் பரிசல் கண்ணில் கண்ணீர்க் கோடு இறங்கிக் கொண்டிருந்தது.

''பயப்படாதிங்க. பசங்களே மாடு ஒண்ணும் செய்யாது...'' என்கையில் குரல் உணர்ச்சி வசப்பட்டிருந்தது.

மாடா அது?
இல்லே, பசு.
பசுவா அது?
இல்லே, அம்மா.

''அம்மா'' என்று கூப்பிட்டான் அவன்.

''ம்ம்மாாாஆ...'' என்றாள் அம்மா உரக்க.

# மால்டோவா சீரணி—
# அவர்களது குறும்புகள் வெகு நளினம்
# அதை நீங்கள் எண்ணுதல் வெகு கடினம்!

குழந்தைகளுக்கு அவசியத் தேவை ஆரோக்கியம், பலம் மற்றும் சக்தி. மால்டோவா அவர்களுக்கு அளிப்பதுவும் அவையே! பொன் வண்ண கோதுமை, பார்லி, தூய பால், செழுமையான கோக்கோ சர்க்கரை இவற்றின் சங்கமமான மால்டோவா, பாலுக்குச் சுவை கூட்டி பன் மடங்கு பலனையும் அளிப்பது.

**சூரிய வெப்பத்தால் முதிர்ந்த கோதுமை, பார்லி மால்ட்**

பஞ்சாபிலிருந்து வரும் கோதுமையும் பார்லியும் மால்டோவா தொழிற்சாலையில் போஷாக்குத் தரும் மால்ட்டாக மாறுகின்றன. அவசியமான தாது உப்புக்களும் வைட்டமின் Bயும் நிறைந்த, நவீன தயாரிப்பு முறையில் உருவான, மால்டோவா அதன் சத்துக்கள் உடலில் எளிதில் கலந்துவிடும் பானமாகிறது.

**தூய, முழுமையான பால்**

எங்கள் பால் சேகரிக்கும் நிலையங்களில் மால்டோவா தயாரிக்கப் பயன்படும் பால் 100% தூய்மையானது. 100% போஷாக்கு நிறைந்தது.

**சுவை கூட்டும் கோக்கோ**

மால்டோவாவில் தரத்திலுயர்ந்த வெளிநாட்டுக் கோக்கோ சேர்கிறது. அதன் சிரிய சுவையும், போஷாக்கும் உங்களுக்குப் புத்துணர்ச்சியளித்து இனிப் பாறச் செய்கிறது.

**சக்தி தரும் சர்க்கரை**

உயர்தரமான வெண்மையான சர்க்கரை சேர்ந்தது. மால்டோவா... தேர்ந்தெடுத்த இன்னமுதம்... சின்னக் குழந்தைகளுக்கு அதிகச் சக்தி தரத் தேவையான ஆமுதம்.

**வைட்டமின்களின் விசேஷச் சேர்க்கை**

புரதம், கார்போஹைடிரேட்டுகள், வைட்டமின்கள், தாது உப்புக்கள் அனைத்தும் இணைந்த ஈடிணையற்ற படைப்பு மால்டோவா. வைட்டமின் A, நயாசின், வைட்டமின் $B_1$, வைட்டமின் $D_2$ இவற்றின் விசேஷச் சேர்க்கை கூடியது. செயற்கைச் சுவையெதுவும் கிடையாது.

JIL ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்
Monde உலகத் தரத்தேர்வில் தங்கமெடல் பெற்றது.
1981, 1982.




**வைட்டமின்கள் கூடிய மால்டோவா: ஆரோக்கியம், பலம் மற்றும் சக்திக்கு**

SIMOES/JIL/2/83 TAM

# ஜன்னலிலே ஒரு மேம்பாலம்

19

பீட்டர் மேலும் தம் பேச்சைத் தொடர்ந்தார். ''இந்த வித்தியாசத்தை யெல்லாம் அப்படியே ஒதுக்கிவச்சிடறேன். ஏன்னு... ஒன் வயசுலே நானும் லவ் பண்ணியிருக்கேன். ரொம்பப் பணக்காரப் பொண்ணைப் பார்த்து... அது என்னவோ ஆச்சு. மனுஷனைத்தான் தெரியுமே... அவனுலே அந்தஸ்தை விட முடியாது... எல்லாம் கனாக் கண்ட மாதிரிப் போச்சு.''

காசி அவரை இப்படி எதிர்பார்க்கவில்லை.

அவர் விஸ்கி புட்டியைத் திறந்து இன்னும் கொஞ்சம் ஊற்றிச் சோடா கலந்து கொண்டார்.

''பிலிப்ஸ்... அதான் ஒனக்கு பாக்ஸிங் கத்துக் குடுத்தவன்...அவனை எப்படி எனக்குத் தெரியும்னு பார்க்கறியா... அவங்க அப்பனும், நானும் ஒண்ணு வேலே செஞ்சிருக்கோம். அவன் கம்ப்ளீட்டா ஒன்னைப்பத்திச் சொல்லியிருக்கான். ஒன்னை எனக்கு ரொம்பப் புடிக்குது. ஆனு...''

அவர் கையிலிருந்த விஸ்கியை வாயில் கவிழ்த்துக் கொண்டார். மீண்டும் தொண்டையைச் செருமிக் கொண்டார். இப்போது அவர் முகம் ஜிவுஜிவுவென்று சிவந்தது. நன்கு பழுத்த மாதிரிக் கனிந்து விட்டது.

''ஆனு... உங்கிட்டே வயலன்ஸ் (வன்முறை) இருக்கு... அது ஒண்ணுதான் எங்க பொண்ணும் நீயும் வாழ்க்கைப்பட முடியாதுன்னு எனக்குத் தோண்ற வீக்னஸ்...''

''நீ ஒரு ரௌடி'' என்று அவர் மறைமுகமாகச்சொல்கிறார்என்று உணர்ந்தான் காசி.

''மாத்யூ சார் வருவாரு. லெட்டர் போட்டிருக்கேன். அவரைத் தெரியுமில்லே ஒனக்கு'', என்று கேட்டுவிட்டு மதுப்புட்டியைத் தொட்டுக் காட்டி ''இதெல்லாம் அவர்கிட்டே கெடையாது. உத்தமமான கிறிஸ்தவர். எந்தத் தப்பு வழியிலும் போனவர் இல்லே'' என்று போதையில் தம் மைத்துனரைப் பற்றிச் சான்றிதழ் வழங்க ஆரம்பித்தார் பீட்டர்.

''தெரியும் சார்'' அவன் குறுக்கிட்டான்.

''ம்ம்... ஒனக்கும் டீச்சர் இல்லே! மறந்துட்டேன். அவ்வளவு உத்தமமான வீட்டிலேருந்து ஒரு பெண்ணை எப்படி ஒனக்குக் குடுப்பாங்க?''

''நான் நிரூபிச்சுக் காட்டறேன்.''

''ஆல்ரைட்... மொதல்லே நிரூபிச்சுக் காட்டு.''

அவர் சொல்லி வாய் மூடு முன் தடதடவென்று படிக்கட்டில் புயல் வேகத்தில் ஏறி வந்தாள் எஸ்தர்.

''காசி... வில்வத்தை ஜெயா ஒலக்கையாலே மண்டை மேலே அடிச்சுட்டாளாம். அரஸ்ட் பண்ணி ஸ்டேஷனுக்குக் கூட்டிட்டுப் போயிட்டாங்களாம்'' என்று மேல் மூச்சு வாங்கக் கூறினாள். காசி பிரம்பு நாற்காலியிலிருந்து பதறி எழுந்தான்.

போலீஸ் ஸ்டேஷனுக்குள் அதுவரை ஜெயா நுழைந்ததில்லை. அதற்கு ஒருவாய்ப்பும் அவளுக்கு நேர்ந்ததில்லை. இப்படி ஒரு நாள் ஸ்டேஷன் லாக்கப்பில் வந்து இருக்க நேரிடும் என்று கனவு கூடக் கண்டதில்லை.

தலையில் ரத்தம் பீறிட்டுக் கொண்டு ''அம்மா'' என்று கத்தியவாறே வில்வம் ஒரு துணி மூட்டை போல் விழுந்தவுடனே அவளுக்கு ஏதோ வயிற்றிலிருந்து பந்து மாதிரி ஒன்று ஏறி இதயத்தைத் தாக்கிற்று. பிறகு ஜிவ்வென்று தலையில் ரத்த ஓட்டம் பாய்வது மாதிரி தோன்றிற்று. உச்சந்தலையில் போய் அது தாக்கிய மாதிரி ஒரு நினைப்பு.

பிறகு பட்டென்று ஏதோ அறுபட்டது. பளிச்சென்று தான் பழைய ஜெயா இல்லை என்று ஓர் எண்ணம் பிறந்தது.

தான் வேறு யார்?

லாக் – அப்பில் இருக்கும் போது மீண்டும் மீண்டும் அந்த நினைவு ஒரு சினிமாப்படச் சுருள் போல வந்து வந்து போயிற்று. அவள் உலக்கையைத் தூக்கிக் கொண்டு ஓசையில்லாமல் வருகிறாள். ஹரியின் கோபம் அவளைத் திடுக்கிட வைக்கிறது. அவன் கத்துவதும் வில்வத்தைத் தூக்கு



வதும், படாலென்று இவன் உலக்கையில் அடிப்பதும் வேகவேகமாக ஓடுகிறது.

வில்வம் கீழே விழுந்திருக்கிறான்.

''ஜெயா'' என்று கத்தி விட்டு அவள் என்ன காரியம் செய்து விட்டாள் என்று பிரமித்துப் போய்க் கண்கள் விரிய வாயைத் திறந்துகொண்டு ஹரி அவளையே பார்க்கிறான்.

செய்த காரியம் கூட அவளுக்கு உறைக்கவில்லை. ஹரியின் பார்வை... விழித்துக் கொண்டு நிற்கும் அந்த முகம்... அதில் வெளிப்பட்ட வேதனை... திகைப்பு... பயம்... வெறுப்பு... மாறி மாறி இந்தக் காட்சிகள் அவளுக்குள் ஓடிக் கொண்டிருந்தன.

போலீஸ் ஸ்டேஷனில் இப்படி கொலை செய்துவிட்டு வந்தவர்களை மோசமாகத் திட்டுவார்கள், அடிப்பார்கள் என்று அவள் நினைத்தாள்.

அவளிடம் எல்லோரும் மரியாதையாக நடந்து கொண்டார்கள். அது அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. என்னென்னவோ விசாரித்தார்கள்.

வில்வம் அவளை மானபங்கம் செய்ய வந்தானா? கையில் ஆயுதம் வைத்திருந்தானா? ஆட்களை அழைத்து வந்தானா?

அவளுக்கு எல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது. இதையெல்லாம் ஏன் கேட்கிறார்கள்? அவன் காசியைப் பழி வாங்குவதற்காக நேருக்கு நேர் வா என்று நான் சவால் விட்டு விட்டு வந்ததனால்தான் வந்தான் என்று சொன்னாள்.

இன்ஸ்பெக்டர் முதலியார் அவளைப் பார்த்துக் கனிவோடு ''நீ சொல்றதை நான் அப்படியே எழுதிக்குவேன். நீ கையெழுத்துப் போட்டுட்டா கேஸ் ஸ்ட்ராங் காயிடும். யோசிச்சுச் சொல்லு'' என்றார்.

''இல்லீங்க சார்... அவனை ஒலக்கையிலே அடிச்சேன். வாஸ்தவம். ஒத்துக்கறேன். அதான் மெய். இல்லே தண்டனை உண்டோ குடுங்க. நான் எதுக்கும் தயாரா இறேன்'' என்றாள்.

இன்ஸ்பெக்டர் சிரித்துவிட்டார்.

''தண்டனையெல்லாம் நாங்க குடுத்துடப் போறதில்லே. கோர்ட்டிலே ஜட்ஜ் குடுப்பாரு... இப்ப நீ குடுக்கறது ஸ்டேட்மெண்ட். வாக்குமூலம். நீ ஒன்னைக் காப்பாத்திக்கற மாதிரி குடுத்தியானாலும் எழுதிக்குவோம். ஒன்னைத் தப்பிச்சுக்கிற மாதிரி குடுத்தியானாலும் எழுதிக்குவோம்.''

இன்ஸ்பெக்டர் முதலியாருக்குத் தனக்கு அதிக தண்டனை வாங்கிக் கொடுக்கக் கூடாது என்று பரிவு இருப்பதாக ஜெயா நினைத்தாள்.

''அதான் நான் செஞ்சிருக்கேனே... நான் இன்னைக்குத் தப்பிச்சுக்கணும்...''

''நீ ஏன் வில்வத்தை ஒலக்கையாலே அடிச்சே?''

அதற்கு அவளுக்கு உடனே பதிலளிக்கத் தோன்றவில்லை. அதற்கு ஒரு காரணமுண்டு. அந்தக் காரணம் போலீஸுக்குத் தெரிய வேண்டியதில்லை. கோர்ட்டில் ஜட்ஜ் கேட்டால் கூட அவருக்குத் தெரிய வேண்டாம். காசிக்கோ... ஹரிக்கோ... இந்த உலகில் எவருக்குமோ அந்தக் காரணம் தெரிய வேண்டாம்..







# சுய சரிதத்துடன் நாட்டு வரலாறு

நாவல்களைப் படிப்பதை விட, வாழ்க்கை சரிதங்களைப் படியுங்கள் என்று காஸா சுப்பாராவ், இளைஞர்களுக்கு, அறிவுரை கூறுவார். நாவல்களில் கற்பனையைத்தான் காண்கிறோம். கற்பனையை விஞ்சிய அதிசய நிகழ்ச்சிகள் உண்மை வாழ்க்கையில் ஏற்பட்டிருப்பதையும் அவற்றை உண்மை சரித்திர நாயகர்கள் எப்படி எதிர்கொண்டார்கள் என்பதையும் படித்தறிவது பயன்தரும் என்பது காஸாவின் கருத்து. அவ்வகையில் அமைந்துள்ள புத்தகம் நெ.து.சு.வின் சுயசரிதம்.

''என்னைப் பற்றி எழுதுவதாயின் இருநூறு பக்கங்களில் முடித்திருக்கலாம். என்னுடைய காலத்து அரசியல், சமூகவியல், பொருளியல் ஆகியவற்றைக் காட்ட எழுதப்படுவதால் நினைவு அலைகள் விரிந்து வளர்ந்து விட்டது'' என்று எழுதுகிறார் ஆசிரியர் தம் முன்னுரையில். அப்படியொன்றும் வீரதீர சாகசச் செயல்கள் மிக்க வாழ்க்கையல்ல அவரது எனினும் அவர் வாழ்ந்த காலகட்டம் மிகமிகச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது. இதை காங்கிரஸ்காரர் ஒரு வகையாக எழுத, காங்கிரஸ் கொள்கைக்கு முற்றும் மாறுபட்டவர் வேறு விதமாக எழுத, திரு. நெ. து. சு. ஓரளவு நடுநிலையில் அக்கால வரலாற்றினைத் தந்திருப்பது பயனுள்ள பணி.

திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் அன்றைய சுயமரியாதை இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்தும் அவருக்கு உற்ற பிராமண நண்பர்கள் இல்லாமற் போகவில்லை. அவர்கள் தமக்கு எப்படியெல்லாம் உதவினார்கள் என்பதனை நன்றியோடு பல இடங்களில் குறிப்பிடுகிறார். சுமார் 890 பக்கங்களுக்கு விரியும் நெ.து.சு.வின் ''நினைவுஅலைகள்'' கோடைக் காலச் சென்னைக் கடற்கரை இன்பத்தை அளிக்கிறது.

ஆயினும் ஓரிடத்தில், நெ. து. சு. தவறு செய்கிறார். 1938—ல் ராஜாஜி கொண்டு வந்த ஹிந்தி பாடத்திட்டத்தைப் பற்றிப் பின்வருமாறு எழுதுகிறார்:

''ஆறு, ஏழு, எட்டு வகுப்புக்களில் படிக்கும் மாணவ மாணவியர் அனைவரும் இந்தி மொழியைக் கட்டாயமாகப் படித்தாக வேண்டும். அத்தேர்வில் போதிய மதிப்பெண் பெற்றால்தான் ஆறிலிருந்து ஏழாம் வகுப்புக்கும், ஏழிலிருந்து எட்டாம் வகுப்புக்கும், எட்டிலிருந்து ஒன்பதாவது வகுப்புக்கும் போகலாம்.''

இது உண்மைக்குப் புறம்பானது. ராஜாஜி மேல் வகுப்புக்குப் போக ஹிந்தி மதிப்பெண்கள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட மாட்டாது. அதனால், சிறுவர், சிறுமியர் அவ்வகுப்புக்களுக்குப் போகாமல் இருக்கக் கூடாது. வகுப்புக்குப் போவது அவசியம்



என்றார். சிறு வயதில் ஹிந்தி எழுத்துக்களும், ஒரு சில சொற்களும் கேட்டுப் பழகி வைத்துக் கொண்டால், பிற்காலத்தில் மாணவர்கள் வட நாட்டுக்குத் தொழில் நிமித்தமோ, உத்தியோகநிமித்தமோ செல்ல நேர்ந்தால் கைகொடுக்கும் என்றுகருதி அத்திட்டத்தைக் கொண்டு வந்தார். **-எஸ்.வி.எஸ்.**

பிரசுரம்: வானதி பதிப்பகம், சென்னை—17. விலை: ரூ. 70.

---

''அதான் சொன்னேனே சார். அந்த ஆறு நாலு நாளைக்கு முன்னலே காசி அண்ணன் மேலே வாரியை ஏத்திக் கொன்னுடப்பார்த்தான். இந்தப் பொட்டை வேலெல்லாம் வாணும். ஆம்பளையா இருந்தா நேரில வந்து மோதுன்னு சொல்லிட்டு வந்தேன். காசி அண்ணன் ஊட்ல இல்லாதப்ப வந்தான். அவுரு வர்ற வரிக்கும் குந்திக்கினு இருக்கேன்னு கட்டில்லே ஒக்காந்தான். நான் ஒலக்கையிலியே போட்டேன்.''

இன்ஸ்பெக்டர் முதலியாருக்கு ஸ்டேட்மெண்ட்டைத் தெளிவாக எழுத வேண்டியிருந்தது.

''வில்வம் ஒங்கப்பாவைத் தலேலே அடிச்சுக் காயம் பண்ணிட்டு ஜெயிலுக்குப் போனவன். ஒனக்கு அந்தக் கோவமா?''

''அவன் பண்ணதுக்குத்தான் கம்பி எண்ணிட்டு வந்துட்டானே... அப்புறம் இன்னாத்துக்கு எனக்குக் கோவம்?''

''சரி... ஹரி என்ன பண்ணிக்கினு இருந்தான்... நீ ஒலக்கையிலே வில்வம் தலேலே அடிச்சியே அப்போ?''

''அவரு நின்னுக்கினு இருந்தாரு.''

பக்கத்தில் ஹரி நின்று கொண்டிருந்தான். என்ன இவன் இடீரென்று இப்படித் துணிந்து பொய் சொல்லுகிறான் என்று அதிர்ச்சியாக அவனுக்கு இருந்தது.

(தொடரும்)

தற்செயலோ, சம்பிரதாயமோ — எமரால்டு
சூட்டிங்ஸ் மற்றும் ஷர்ட்டிங்ஸ் எழிலான தோற்றம்
வழங்குது கச்சிதமாய்.
வேறுபாடான விருப்பங்களுக்கேற்ப அழகிய சாயல்களின்
திறனுடன் பிளெண்ட் செய்யப்பட்டது.



# தாவண்கெரே

எடுப்பான கலப்பழகுடன் மிடுக்கான பாணி அமைக்கிறது.

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்.
ஹனுமந்தப்பா கட்டிடம்,
சித்ரதுர்கா ரோடு,
தாவண்கெரே-577 002.

ஷோ ரூம்கள்:
காவேரி பவன், பெங்களூர்-560 009.
தாஜிபன்பேட், ஹுப்ளி-580 020.
சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே-577 002.

THOMAS/8302-B/TAM



சிக்கனமா படம் புடிக்கணும்னு சொல்றீங்க... அவ்வளவு தானே! மொதல்லே கால்ஷீட்டுலே சிக்கனம் பண்ணுவோம்! ஜெயமாலினி, சில்க், அனுராதா இவங்களை 'புக்' பண்ணுவோம்! டிரஸ். செலவே கிடையாது



• வேலை நிறுத்தம் வெற்றி மலர் தயாராயிடுச்சா?
• இல்லீங்க!.. எங்க பிரஸ்லே வேலைநிறுத்தமுங்க!








• எந்தப் பாவி உன் மீது அம்பெய்தது?
• வில்லுப் பாட்டு கேட்டேன், பிரபு. அதிலிருந்து வந்த அம்புகள் தான் இவை!



" வானிலை அறிவிப்பு.. இன்று இரவு இடியுடன் கூடிய மழையோ, அல்லது மழையுடன் கூடிய இடியோ பெய்யும்!



• உன் அடுத்த வீட்டுலே முகமூடிக் கொள்ளையாமே? நீ என்ன செஞ்சே?
• நான் சும்மா இருப்பேனா?.. ஓடிப் போய் முகமூடிக் கொள்ளையை வீடியோ ஃபிலிம் எடுத்தேன்!



- என்னது?. கத்தரிக்கா கிலோ நேத்தினே கால் ரூபாக்கு தரேன்னுட்டு, இப்ப ரெண்டு ரூபாங்கறே!
- இல்லே சாமி ரெண்டு ரூபா தான் சொன்னேன்!
- பொய் சொல்லாதே! நீ சொன்னதை டேப் பண்ணியிருக்கேன், பாரு!



- உன் மாமியாருக்கு ஹியரிங் எய்ட் வாங்கிக் கொடுத்தியாமே?
- என்ன பண்றது? நான் திட்டறது காதுலே விழுறாம சிரிச்சுக்கிட்டே பேசறாங்களே!



முகமூடிக் கொள்ளைக்காரங்க இப்ப போலீஸ் டிரஸ்லே வர்றாங்களாம்! நீங்க எல்லாரும் முகமூடி போட்டுக்கிட்டு கொள்ளைக்காரங்க டிரஸ்லே போங்க!



- சாயந்தரமானா காதலரோட பீச்சுக்கு போயிடுவேங்கறே. அப்புறம்?...
- அப்புறம்... சொல்ல வெக்கமா இருக்குதடி!.. அப்புறம் அவர் தேங்கா, மாங்கா, சுண்டல் வாங்கப் போயிடுவார்!

சிரிப்ஸ்



எம்.ஜி.ஆர். தன் வாரிசு பாக்யராஜ் என்கிறார்!.. எனக்கு வாரிசு 'நகுக்கள்'!



# காதலைத் தமிழில் சொல்!

**கே. நாகராசன்**

"**வா**ங்க... என்ன கையிலே குடம்? தண்ணிக்கா?"
என் மனைவி தேவியின் குரல், இது.

"ஆமா... நிங்கள் வீட்ல தண்ணி வருதா?"

படுத்திருந்த நான் சட்டென்று எழுந்து உட்கார்ந்தேன். இந்த இனிமையான வசீகரமான குரல் அனுராதாவின் குரல். எலுமிச்சை நிற கன்னடத்து அழகி. தலையை நீட்டிப் பின்புற வாசலைப் பார்த்தேன். பச்சைப் பசேலென்ற புல்வெளிமேட்டில் குடத்துடன் அனுராதா நின்றிருந்தாள். இளங்காலை நேர சூரியனின் ஒளிக்கதிர்கள் பட்டுத் தங்கமென மின்னும் அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்தேன்.

வாசற் படியில் நின்றிருந்த என் மனைவி "இல்லேங்க... காலையிலேருந்து ஒரு சொட்டு கூட வரலங்க... அதுதான் என்ன பண்றதுன்னு தெரியலே..." என்றாள்.

"நிங்கள் ஹவுஸ் ஓனர் சொன்னிச்சு கீழே ரிவர் ஓடுதாமே...? ரிவர் எங்கே ஓடுது?... நிங்களுக்குத் தெரியுமா..." அனுராதா பேசுகிற அழகை நான் மிக ரசித்தேன்.

"தெரியுமே?" என்றாள் தேவி.

"வாட்டர் எடுக்க நிங்கள் இப்ப வர்தா?"

"நானும் ஒரு குடம் எடுக்கணும்..." என்ற தேவி உள்ளே வந்து குடத்துடன் வெளியேறினாள். இருவரும் வெளிப்புறமாகச் சுற்றிக் கொண்டு செல்வது நான் படுத்திருந்த ஹாலின் கண்ணாடி ஜன்னல்கள் வழியே பளிச்செனத் தெரிந்தது. அனுராதாவின் பார்வை என் மீது இமைப் பொழுது படிந்து சென்றதா? நான் துவண்டே போனேன்.

அனுராதாவின் வீட்டோடு எனக்கோ, என் மனைவிக்கோ இன்னும் அதிகம் பழக்கமில்லை. குளிர் இன்பம் தருகிற இந்தக் குன்னூருக்கு நாங்கள் குடிவந்து ஒரு மாதமே ஆகிறது.

பதவி உயர்வில் நான் இங்கு மாற்றப்பட்டேன்.

குன்னூர் பேருந்து நிலயத்திலிருந்து செல்லும் பேருந்தில் ஏறி, சிம்ஸ் பார்க் எதிரில் இறங்கி, தொலைபேசி இணைப்பகத்தைக் கடந்து வலது புறம் சரிகிற சாலையில் ஓடி, (நடக்க முடியாது; அப்படிச் சரிவு) பாஸ்டியர் இன்ஸ்டிடியூட், சில்க் ஃபார்ம் கட்டிடங்களைக் கடந்து இன்னும் சரிந்தால் சாலை முடிவில் எதிரில் படுவது சகல சாமான்களும் கிடைக்கிற ஒரு பெட்டிக் கடை. அதன் ஓரமாகப் படியிறங்கினால் ஒரு மேட்டில் அனுராதா வசிக்கிற மேரிவில்லா; மேட்டுக்குக் கீழே தெரஸா காட்டேஜ்; அதில் எங்களுடையது முதல் வீடு.

அனுராதாவின் கணவர் கணபதிபட் சில்க் ஃபார்மில் ரிசர்ச் அஸிஸ்டண்ட். அவரும் கன்னடம். ஆள் அனுராதா நிறத்தில் (மறந்து விட்டீர்களா? எலுமிச்சை நிறம்) வாட்டசாட்டமாக, எம்.எஸ்ஸி. படித்து, ஆயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்கிக் கொண்டு... சுற்றிலும் பொறுமையைத் தூண்டுகிற ஜோடி.

அனுராதாவை அனுப்பிவிட்டு உள்ளே வந்தாள் தேவி. ''ரொம்ப நல்ல டைப்பா இருக்காங்க; நல்லாப் பேசறாங்க.''

''யாரு...?'' என்றேன் தெரியாத மாதிரி.

''மேட்ல மேரி வில்லான்னு ஒரு வீடு இருக்குல்ல...? அதிலே குடியிருக்காங்க. கன்னடத்துக்காரங்க...''

''நல்ல டைப்பா இருந்தா எனக்கும் அறிமுகப்படுத்தி வையேன்...''

தேவி என்னை ஒரு முறை முறைத்தாள்: ''அறிமுகப்படுத்தி வைக்கலாம். ஆனா நீங்க நல்ல டைப் இல்லையே...''

என் முகத்தில் அசடு வழிந்தது.

ஒரு வாரம் சென்றது. பெட்ஃபோர்டில் நிக்கல்சன் கூட்டுறவு அங்காடியில் மளிகை, காய்கறி என்று பைகளை நிரப்பிக்கொண்டு வீட்டுக்கு வந்து கொண்டிருந்த போது எதிரில் —

கணபதி பட், அனுராதா, கூட வசந்தகுமார்...

இந்த வசந்தகுமார் என் அலுவலகத்தில் ஒரு எழுத்தர். வீடு அனுராதாவின் வீட்டுக்கு அடுத்த வேலியில் கிரீன் ஹவுஸ்! மனைவியுடன் வாசம். வந்த முதல்நாளே வீடு பார்த்து, மறுவாரமே மனைவியை அழைத்து வந்து விட்டவர்; குளிர் இந்த வேலை செய்கிறது.

என்னைக் கண்டதும் மூவரும் நின்றனர்...

''சார் ஷாப்பிங் முடிச்சிட்டு வர்றீங்க... இப்பத்தான் நாங்க போறோம்...'' என்று புன்னகை செய்தான், வசந்தகுமார். நானும் புன்னகை செய்தேன். பார்வை கணபதிபட் மீது இருந்தது; ஓரக் கண்கள் அனுராதா மீது இருந்தது; மனம் கலர்ப் பூக்கள் பின்னிய பச்சை நிறச் சால்வை போர்த்திய உடம்பில் கழுத்துக்குக் கீழே தெரிந்த கவர்ச்சியான சில வடிவங்களில் இருந்தது.

''சார் கணபதிபட் சில்க் ஃபார்ம்ல சயன்டிஸ்ட்! சார் வந்து எங்க ஆபீஸ்ல டெக்னீஷியன்...''

வசந்தகுமார் அறிமுகம் செய்து வைத்ததும் இருவரும் கைகுலுக்கிக் கொண்டோம். கிராமத்தில் விறகு வெட்டி, மண்வெட்டி பிடித்துத் தோல் உரிந்து காய்ச்சிப் போன என் கைக்கு கணபதி பட் கை மிக மென்மையாக இருந்தது. அனுராதா கைகள் இன்னும் மென்மையாகப் பஞ்சுப் பொட்டலம்மாதிரி, ரோஜாப் பூ மாதிரி இருக்குமா?

மேட்டில் நின்ற நான், அந்த மூவரும் எதிர் மேட்டில் ஏறி மறையும் வரை சிலையாக நின்றிருந்தேன். இவ்வளவு அழகாக நடக்க அனுராதாவின் கால்களுக்கு யார் சொல்லிக் கொடுத்தது?

கணபதிபட்டைப் பல இடங்களில் கண்டு சிரித்து, சேர்ந்து தேனீர் பருகி, நல்ல பழக்



மதுரை ஜே. தியாகராஜன் என்ற வழக்கறிஞர், 'ஒரு தற்கொலை தடுப்பு அமைப்பை' ஏற்படுத்தியுள்ளார். தற்கொலை செய்து கொள்ளும் எண்ணம் கொண்டவர்கள்; ஒரு நிமிடம் போன் அருகே சென்று; மதுரையில் 23133 என்ற எண்ணையோ அல்லது 41089 என்ற எண்ணையோ சுற்றினால்போதும்; தற்கொலை எண்ணத்தையே மாற்றும் அளவுக்கு ஆறுதலான தைரியமூட்டும், தெம்பூட்டும் பதில் கிடைக்கும். உயிர் மீட்கும் பணியாற்றும் ஜே. தியாகராஜன் அவர்களுக்கே ஒரு காலத்தில் தற்கொலை செய்து கொள்ளும் எண்ணம் இருந்ததுண்டாம். அன்று என் மனைவியும் என்னுடைய குடும்பத்தாரும் ஆறுதலான வகையில் அன்பு வார்த்தைகள் கூறினார்கள். அதுதான் இன்று; இந்த அமைப்பை நான் உருவாக்கத் தூண்டுகோல் என்கிறார் தியாகராஜன்.

—ராஜேஸ்வரி.

கும். அடிக்கடி அவர்கள் வீடு சென்றேன். டீ பாயைச் சுற்றி நெருங்கி உட்கார்ந்து, முகத்துக்கு முகம் பார்த்து, மூவரும் பல விஷயங்களைப் பேசினோம். கணபதிபட் இல்லாத நேரங்களில் கூட என்னை உள்ளே வாங்க என்று கூப்பிட்டு, தேநீர் கொடுத்து உபசரித்து, உட்கார்ந்து பேசி, தன் அழகை என் கண்கள் அள்ளிப் பருகுவதை உணராது, நான் கள்ளம் கபடமறியாதவன் என்பதை எனக்குச் சொல்லாமல் சொல்லி... ஆனால் நான் இருந்தவில்லை.

நாங்கள் குடும்ப நண்பர்களான பிறகு ஏழு கிலோ மீட்டர் நடந்தே லேம்ப்லாக் போனோம்; இட்லி, எலுமிச்சைச் சாதத்தைச் சேர்ந்தே சாப்பிட்டோம். எங்கள் வீட்டு மீன் வறுவல் கணபதிபட்டுக்குப் பிடித்திருந்தது. அனுராதா வீட்டு மைசூர் சாம்பார், ஜெர்மன் பீன்ஸ் நான் சாப்பிட்டேன். ஆக தமிழும் கன்னடமும் நட்பில் கலந்தது. ஆனால் என்னிடம் முளைவிட்ட விஷவிதை மட்டும் மடியவில்லை.

முளைவிட்டதைப் பயிராக்கி, செடிசெய்து, முடிந்தால் பழம் பறித்தால் என்ன? ஒன்று சொர்க்கம் கிடைக்கலாம். அல்லது நட்பு நரகமாகலாம். அடி, உதை? முந்நூறு மைல் தள்ளி நிச்சயமாகத் துணிவிருக்காது. முதலில் கடிதம் மூலம்தான் கவர வேண்டும் என்று நினைத்துக்கொண்டேன்.

மூளையைக் கசக்கிக் கொண்டு மூன்றுமணி நேரம் செலவழித்தேன்; முடிவாக மூன்று பக்கத்தில் தமிழில் ஒரு கடிதம் எழுதி முடித்தேன். பிறகே ஆங்கிலத்திற்கு மொழி பெயர்த்தேன். (அனுராதா பி. ஏ. ஆங்கிலம்) அந்த மூன்று பக்கங்களிலும் அனுராதா அழகை வார்த்தைகளைத் தேடிக் கண்டு பிடித்து வர்ணித்திருந்தேன். முடிவில் 'உங்கள் அழகை ஆராதிக்கிற அடிமை நான்! என் நிம்மதியும் மகிழ்ச்சியும் இனி உங்கள் கைகளில்தான்!' என்று முடித்திருந்தேன்.

கணபதிபட் இல்லாத நேரம் பார்த்து மேரி வில்லாவிற்கு நடையைக் கட்டினேன். ஈஸிசேரில் சாய்ந்து ஒரு கன்னட வார இதழில் மூழ்கியிருந்த அனுராதா ''ரொம்ப போரடிச்சது; நீங்களும் வந்துட்டீங்க'' என்றாள்.

முழுக்கை ஸ்வெட்டரில் கழுத்துக்குக் கீழே மேடாக இருந்த இடங்கள் மனத்தில் ஏக்கத்தை விதைக்க ''இனி எனக்கு நீங்க தான்;'' என்றேன். அனுராதா அதிர்ச்சியோடு நிமிர்ந்து உட்கார்ந்தாள்; ''போரடிச்சா இனி எனக்கு நீங்கதான்...'' என்று சிரித்தேன்.

---

ஒருத்தி: உன் கணவர் உன்னை அடிக்கடி 'பீச்சுக்கு'க் கூட்டிப்போகிறாரே... உன் மீது அவ்வளவு ஆசையா?

மற்றவள்: ஹும்; அவர் அப்பா அங்கே சுண்டல் விற்கிறார். அவரைப் பார்க்கத்தான் போகிறோம்...!

நல்லாலம், காசிதாசன்.



''ஆமாமா... நீங்களும் நல்ல கம்பெனி. ஆமா அது என்ன கையிலே...'' என்றாள்.

இது ஒரு நல்ல சந்தர்ப்பமாக எனக்குப் பட்டது. ''உங்களை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. நீங்க தமிழ் பேசற அழகை கேட்டுக்கிட்டேயிருக்கணும் போல என்னைப் பைத்தியமாவே ஆக்கிடிச்சி. இதிலே எல்லாம் எழுதியிருக்கேன்; படிச்சுப் பாருங்க; உங்களுக்குச் சம்மதம்னு நான் உங்களுக்கு இன்னும் நல்ல கம்பெனியா இருப்பேன்...'' எனக்கு குளிரிலும் வியர்வை பூத்தது. கடிதத்தை டீபாயில் வைத்துவிட்டுப் புறப்பட எழுந்து நின்றேன்.

முகத்தில் எந்த உணர்ச்சியையும் வெளிக்காட்டவில்லை அனுராதா. எனக்கு எதிரிலேயே கடிதத்தைப் பிரித்து ஒரு விநாடி அதில் மூழ்கியவள் ''என்ன இங்கிலீஷ்ல எழுதியிருக்கு...? தமிழில் எழுதிக் கொடுங்க. நீங்கள் தமிழ்லதானே நல்லா எழுதும்...?'' என்றாள்.

தமிழ்ப் பிரதி சட்டைப் பையில்தான் இருந்தது. பட்டென்று எடுத்து நீட்டினேன். வாங்கும் போது அவள் விரல்களைத் தொட்டே கொடுத்தேன். இரண்டு கடிதங்களையும் தன் எதிரிலே உயர்த்திப் பிடித்து வைத்துக் கொண்டாள் அனுராதா. ''இதே டயம்லே இதே டைப் இங்கிலீஷ், கன்னட லெட்டர்களை தேவியிடம் என் ஹஸ்பண்ட் கொடுத்தார்னு நினைச்சுப் பாரு?'' என்றாள்.

அந்தக் குளிரிலும் குபீரென்று வியர்த்துக் கொட்டியது எனக்கு. அசடு வழிய நெளிந்தேன். தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு கிளம்பினேன்.

''லெட்டர் வேணும்?'' என்று கேட்டாள். திரும்பினேன்.

களங்கமற்ற புன்னகையுடன் அவற்றைத் திருப்பித் தந்தாள். பெற்றுக் கொண்ட போது என் கண்களில் பனி படர்ந்தது.

உ

ஸ்ரீ ராமஜெயம்

## வேண்டுகோள்

# ஸ்ரீ காயத்ரீ ஞானவாபி

குரோம்பேட்டை

* காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் அருளாசிப்படி, குரோம்பேட்டையில் அபரகாரியங்கள் செய்வதற்காக **"ஸ்ரீ காயத்ரீ ஞானவாபி"** ரூ. 4 லட்சம் செலவில் கட்டத் தீர்மானிக்கப்பட்டுள்ளது.
* இதற்காக குரோம்பேட்டையில் லக்ஷ்மிபுரத்தில் சர்வே எண் 346 (Part) & 347ல் இரண்டு கிரவுண்டு மனை வாங்கப்பட்டு பல்லவபுரம் சப்-ரிஜிஸ்ட்ரார் ஆபீஸில், பத்திரம் எண் 6797/1983 பதிவு செய்யப்பட்டுள்ளது.
* மேற்படி ஸ்ரீ காயத்ரி ஞானவாபியின் **'பூமி பூஜா'** வருகிற மார்ச் மாதம் 5ம் தேதி திங்கள்கிழமை காலை 9-15 மணிக்கு நடைபெறும்.
* மேற்படி ஸ்ரீ காயத்ரீ ஞானவாபி கட்டுவதற்கு நன்கொடைகள், கிராஸ் செய்யப்பட்ட செக்குகள், **SHREE GAYETHRI TRUST**, Chromepet என்ற பெயருக்கு வரவேற்கப்படுகின்றன. நன்கொடைகளுக்கு, வருமான வரிச்சட்டம் 1961-பிரிவு-80Gபடி வருமானவரி விலக்கு உண்டு என்பதையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.
* ஆஸ்திகர்கள் மேற்படி சத்காரியத்துக்கு உதவி செய்தும், ஒத்துழைத்தும், நன்கு நடத்தி வைத்து, பகவத் அனுக்ரஹத்தினால் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

**SHREE GAYETHRI TRUST**

Plot No: 45, Lakshmi Nagar. Chromepet, Madras-600 044



REGD. No. 130727

சுவை, மணம் நிறைந்த
செண்பகம் பிராண்ட்
D.L.C பிராண்ட் நெய் -
உபயோகியுங்கள்.

- அக்மார்க் முத்திரையுள்ளது -




MFRS:-

# தனலட்சுமி & கோ

நெய்மண்டி... திருப்பூர்-4.

போன்: 21557



# சிகாகோவில் சங்க இலக்கியம்

வாஸந்தி



மிச்சிகன் பல்கலைக்கழக மாணவர்கள்

## 17

**ப்**ரொஃபஸர் பீட்டர் ஹூக் துடிப்புள்ள இளைஞராகத் தெரிந்தார். அங்கு ஹிந்தியும் காஷ்மீரியும் சொல்லித் தருவதாகச் சொன்னார். ஹிந்தியில் நவீன இலக்கியத்தையும் நிறைய படிக்கிறோம். நவீன எழுத்தாளர்களில் 'மோஹன் ராக்கேஷ்' தனக்குப் பிடித்த எழுத்தாளர் என்றார்.

மோ. ராக்கேஷின் 'ஆஷாட்கா ஏக் தின்' என்ற நாடகம் டில்லியில் சக்கைப்போடு போடுவதாகச் சொன்னேன்.

''அதைவிட அவரது 'ஆதே அதூரே' தான் சிறந்த நாடகம்!'' என்றார் பீட்டர்!

எங்கள் பேச்சில் கலந்து கொண்ட திரு. சர்மா தமிழிலக்கியத்தைப் பற்றித் தம் சந்தேகத்தைக் கேட்டார். சங்க இலக்கியம் எந்தக் காலத்தைச் சேர்ந்தது என்று அவர் ஆரம்பிக்கையிலேயே பீட்டர் 'கிருஸ்துவுக்கு முந்தைய காலத்தைச் சேர்ந்தது. அதற்குப் பிறகு தான் தொல்காப்பியம் பிறந்தது. தமிழர் கலாச்சாரமும், இலக்கியமும் மிகத் தொன்மையானது. செழிப்பானது'' என்றதும் நான் திகைத்துப் போனேன். ஹிந்தியைக் கற்கும்போது, மற்ற இந்திய மொழிகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் (Comparative studies) பாடமும் தான் கற்றதாகப் பீட்டர் விளக்கினார். இருந்தும் அவரது ஞாபக சக்தியும் ஆழமான அறிவும் என்னை வியப்பிலாழ்த்தின. இந்தியாவுக்கு வந்து தங்கி நிறைய விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று ஆசைப்படுவதாகத் தெரிவித்தார். காஷ்மீரிலும் வாரணாசியிலும் சில வருஷங்கள் இருந்ததாகச் சொன்னார்.

மிச்சிகன் பல்கலைக் கழகம் மிகப் பெரியது. அதன் பிரதானக் கட்டிடங்களும், கல்லூரியும், வாசக சாலையும் கலையரங்குமுமாக ஒரு சின்ன காலனி போல் இருக்கிறது. மிக நல்ல புத்தகக் கடைகள் இருக்கின்றன. பழைய புத்தகங்களைக் கொள்ளை மலிவாக விற்கும் கடைகள் என்னை மிகவும் கவர்ந்தன. அத்தனை பிரம்மாண்டமான வாசக சாலையை நான் பார்த்ததே கிடையாது. மிகத் துப்புரவாக வேறு இருக்கிறது. பாரிஸ் புத்தகக் கடையில் பார்த்தது போல் இங்கேயும் யாருக்கும் தெரியாமல் லைப்ரரி புத்தகத்தைத் தூக்கிச் சென்று விட முடியாது. அலாரம் மணி அடித்துவிடும்.

புத்தகப் பிரியர்களுக்கு இந்த இடம் ஒரு சொர்க்க லோகம் என்று நான் நினைத்துக் கொண்டேன். மாணவர்கள் மிக எளிய உடையில் (மேக்கப்பே இல்லாத மாணவிகள்) அங்கும் இங்கும் சுறுசுறுப்பாக ஓடிக் கொண்டிருந்தார்கள். எந்தத் தீவிர சர்ச்சையிலும் அவர்கள் சாவதானமாக ஆழ்ந்து போகவில்லை.

இரெண்டாா அமர்க்களமும், வெளிநாடுகளின் கண்டனக் குரல்களும் இங்கே இவர்களுக்கு கேட்டதாகத் தெரியவில்லை. எதிர்ப்புக் குரல் தெரிவிக்கும் பானரோ, சுவர்களில் அனல் கக்கும் வார்த்தைகளோ இல்லை. 'மாணவ சமுதாயத்தை நேரிடையாக பாதிக்காத எந்த விஷயமும், அமெரிக்க மாணவர்களைப் பாதிப்பதில்லை'' என்றார் சர்மா. 'அரசியலில் அவர்களுக்கு சுவாரஸ்யமில்லை, தங்கள் பாடங்களில் அதி தீவிர கவனம் செலுத்துகிறார்கள். அப்படிச் செலுத்தவில்லையானால் தொடர்ந்து இங்கு கல்லூரியில் அவர்கள் படிக்க முடியாது. இங்கு மிகக் கடினமான பாடத்திட்டம். வியட்நாம் யுத்தத்தை அமெரிக்க மாணவ சமுதாயம் கண்டித்ததற்குக் காரணம் அது அவர்களை நேரிடையாகப் பாதித்தது. நிறைய மாணவர்கள்போர் முனைக்குக் கட்டாயமாக

அனுப்பப்பட்டார்கள். நிறைய பேர் இறந்து போனார்கள். அநேகம் பேருக்குப் படிப்பு தடைப் பட்டது.''

இந்தச் சர்வகலாசாலைகள் உருவாக்குவது கர்ம யோகிகளையா, மனித கம்ப்யூட்டர்களையா என்று என்னுள் மெல்லிய குழப்பம் ஏற்பட்டது. இரண்டும் கலந்த ஒன்றாக இருக்கவேண்டும் என்று தோன்றிற்று. இந்த முனைப்புத்தான் இவர்களது சுபிட்சத்துக்குக்



✖ வெய்யிலில் வகுப்பு: மிக்சிகன் பல்கலைக்கழகம்

காரணம். பல துறைகளில் இவர்களது மேன்மைக்குக் காரணம் என்று நினைத்துக் கொண்டேன்.....

சிகாகோவிற்குத் தனியாகப் போவது என்று முடிவு செய்தேன். 'தனியாகவா?' என்று புருவத்தைத் தூக்கினார்கள் வீட்டவர்கள்.

கருப்பர்கள் அதிகமாக இருக்கும் சிகாகோவுக்குச் சாதாரணமாகப் பெண்கள் தனியாகப் போக மாட்டார்களாம். நான் துணிந்து புறப்பட்டேன். சிகாகோவிலிருந்து நாற்பது மைல் தள்ளி லிபர்டிவில் என்ற ஊரில் என் ஒன்று விட்ட தங்கை ஷோபா இருந்தாள். சிகாகோவுக்கு ஆன்ட்வெர்ப்—(பெரிய நகரங்களைஇணைக்கும்இரயில் பாதை) டிரெயினில் சென்று அங்கிருந்து எல்லைப் புறப் பகுதிக்குச் செல்லும் ரயில் ஏறி லிபர்டிவில்லுக்குச் சென்றேன். ரயில்கள் மிக சுத்தம். கழிவறைகள் விமானத்தில் இருப்பது போல் ஸோப்புக் கட்டிகளும் கைத்துடைக்கும் நாப்கின்களுமாக இருக்கின்றன. குப்பையைக்கொட்டத் தனியாக இடம். சின்னத் துரும்பைக் கூட யாரும் கீழே போடுவதில்லை.

ஒவ்வொரு ஸ்டேஷன் வரும்போதும் அதற்கு ஐந்து நிமிஷம் முன்னால் ஒலிபெருக்கியில் பெட்டியில் இருக்கும் கண்டக்டர் ஊரின் பெயரைச் சொல்வார். அவரது உச்சரிப்பு எனக்கு அநேகமாய்ப் புரியவே புரியாது! 'லிபர்டிவில்' என்று சொன்னதை நிச்சயம் கிரகித்துக் கொள்ள முடியவில்லை. அமெரிக்காவில் இருந்த ஒவ்வொரு நிமிஷமும் காதையும் கண்ணையும் அதிகக் கூர்மையாக்கிக் கொள்ள வேண்டியிருந்தது எனக்கு — அந்த உச்சரிப்பு வித்தியாசத்தால்.

லிபர்டிவில்லில் இறங்கியதும் ஷோபாவுக்கு டெலிஃபோன் செய்தேன். அடுத்த பதினைந்து நிமிடங்களில் அவன் வந்து என்னை அழைத்துப் போனான்.

அமெரிக்காவில் குடியேறிய நிறைய குஜராத்தி வியாபாரிகள் இருக்கிறார்கள். இந்தியர்களுக்குப் பிரத்தியேகமாகத் தேவைப்படும் சாமான்களை விற்கிறார்கள். இந்தியாவிலிருந்து வரும் டூரிஸ்டுகள் விரும்பி வாங்கும் பாதாம் பருப்பும், குங்குமப்பூவும் இவர்களிடம் பார்க்கலாம். இந்திய மின்சார நிலைக்குத் தகுந்த 220 வோல்ட்ஸ் மின் கருவிகள் (அமெரிக்காவில் 110 வோல்ட்ஸ்) இவர்களிடம் தான் கிடைக்கும். பொதுவாக இந்தக் கடைகளை இந்தியன் ஸ்டோர்ஸ் என்கிறார்கள். அமெரிக்காவில் சாமான்கள் எல்லாமே பொதுவாக ஐரோப்பாவை விட மிக மலிவு. சிகாகோவிலும் நியூயார்க்கிலும் இருக்கும் இந்தியன் ஸ்டோர்ஸ்கள் பிரபலமானவை என்றார்கள். இந்தியர்கள் வெளியிடும்செய்தித் தாள்களில் சாமான் பட்டியலும், விலைப்பட்டியலும் விளம்பரப்படுத்துகிறார்கள். அமெரிக்காவில் எப்பொழுதும் எல்லாச் சாமான்களுக்கும் SALE என்று விளம்பரப்படுத்துவது வேடிக்கையாக இருக்கிறது. எந்த சாமானையும் யாரும் அதன் சுயவிலையில் வாங்க மாட்டார்களாம். தினமும் புத்தகக் கட்டு போல் வரும் செய்தித்தாளில் முக்காலுக்குமேல் SALE—லைப் பற்றிய விவரங்கள்தான். இல்லத்தரசிகளும் கணவன்மார்களும் செய்தியைப் படிக்கிறார்களோ இல்லையோ எந்தெந்த SALE எங்கெங்கு இருக்கிறது என்று தெரிந்து கொள்கிறார்கள். அதில் வரும் Coupon களைக் கத்தரித்துக் கடையில் காண்பித்

✖ வாசக சாலையில் கவனம் பிசகாமல் படிக்கும் மாணவர்கள்



தால் சலுகை கிடைக்கும். ஒருவருக்கொருவர் சந்திக்கும் போது இதே பேச்சு. 'Microwave' அடுப்பைப் பற்றி. கார் மாடலைப் பற்றி. காரில் பொருத்தியிருக்கும் ஸ்டீரியோ டேப் ரெக்கார்டர் - பிளேயரைப் பற்றி... இந்த ஸேலில் விற்கப்படும் சாமான்கள் எல்லாம் இரண்டாம் பட்ச சாமான்கள் இல்லை. முதல் தரமான சாமான்கள். அங்கிருக்கும் டிபார்ட்மெண்டல் ஸ்டோர்களின் அழகையும், பிரும்மாண்டத்தையும் ஒழுங்கையும் நான் வெறும் வார்த்தைகளில் விவரித்தால் புரிந்துகொள்வது சிரமம். அது வேறு உலகம். குபேரனின் உலகம். ஒரு ஸ்டோரைச் சுற்றி வருவதற்குள் பல மைல்கள் நடந்தாற்போல் கால்வலி எடுத்து விடுகிறது.

ஒரு நாள் போது கடைக்குப் போனதில் கரைந்து போயிற்று. மறு நாள் நான் சிகாகோ நகரத்தைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினேன். சிகாகோ பல்கலைக் கழகத்தில் பணிபுரியும் திரு. ஏ. கே. ராமானுஜத்தை முன்னேற்பாட்டின்படி சந்தித்துவிட்டுப்பிறகு ஊரைச் சுற்றிப் பார்க்கத் திட்டமிட்டேன்.

காலை 9.30 மணிக்கு பப்ளிக் லைப்ரரியின் படிகளில் தாம் காத்திருப்பதாகவும் தம்மை அங்கு வந்து சந்திக்கும்படியும், திரு. ராமானுஜம் போனில் சொன்னார். அது எங்கேயிருக்கிறது என்றும் வழியை விளக்கியிருந்தார். நான் லிபர்டிவில்லை விட்டுக்காலை 7.45 ரயிலைப் பிடித்து ஒரு மணி நேரப் பயணம் செய்து சிகாகோ யூனியன் ஸ்டேஷனை அடைந்தேன். முந்தையதினம் அங்கு ஒரு கடையில் பழக்கமாயிருந்த ஒரு இந்தியப்பெண் என்னைப் பார்த்துச் சிநேகத்துடன் குசலம் விசாரித்தாள். நான் விவரம் சொன்னதும்,

'எஸ்கலேட்டரில் ஏறி மெயின் ரோடுக்குப்போனீர்களானால் நிறைய பஸ்கள் மிச்சிகன் அவென்யூவுக்குப் போகும். விசாரித்து ஏறிப் போங்கள். டாக்ஸிக்குப் பணம் செலவழிக்காதீர்கள்' என்றாள்.

அவள் சொன்னபடி மெயின் ரோடுக்குச் சென்றேன். சற்றுத் தொலைவில் ஒரு பஸ் நின்றிருந்தது. ப்ளாட்ஃபாரத்தில் நின்ற யாரையாவது விசாரிக்கலாம் என்று நான் யோசித்தபடி நிற்கையில் ஒரு கருப்பர் என்னைப் பார்த்து.

''Hi honey, what do you want baby?'' என்றார்!

''மிச்சிகன் அவென்யூவில் இருக்கும் பப்ளிக் லைப்ரரிக்கு எந்த பஸ்ஸில் போக வேண்டும்?'' என்றேன்.

''ஓ யெஸ்! அதோ நிற்கிறதே அதுதான், கமான், கமான்!'' என்றபடி என் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு பஸ்ஸுக்கு விரைந்தார்.

பஸ்ஸை அடைந்தவுடன் அவருக்கு நன்றி சொல்லிவிட்டுக் கிடுகிடுவென்று பஸ்ஸில் ஏறினேன்.

அந்தக் கருப்பர் பலத்த குரலில் சொன்னார்.

''ஹேய்! எங்கே போகிறீர்கள்? பணத்தைக் கொடுங்கள், Give me money!''

எதற்குப் பணத்தைக் கேட்கிறார் என்று புரியாமல் நான் விழித்தேன்.

''கெட் டௌன்!''

நான் இறங்கினேன். அப்பொழுதுதான் சடாரென்று கவனித்தேன். அவர் ஒரு கண்டக்டர் என்பதை. இடையில் டிக்கெட்டைப் 'பஞ்ச்' செய்து கொடுக்கும் கருவியை மாட்டிக் கொண்டிருந்தார். 'டிக்கெட்டுக்குப் பணம் கொடு' என்கிற அர்த்தத்தில் தான் அத்தனை அழகாக அவர் என்னிடம் பேசியிருக்கிறார் என்று புரிந்தபோது எனக்குச் சிரிப்பு வந்தது. டிக்கெட்டுக்கான 60 சென்டுகளைக் கொடுத்து விட்டு ஏறினேன். பஸ் புறப்பட்ட பிறகு நாலைந்து பேர்களிடம், 'பப்ளிக் லைப்ரரி பஸ்ஸ்டாப் வந்ததும் எனக்குச் சொல்வீர்களா?'' என்று கேட்டேன்.

எல்லோரும் தோளைக் குலுக்கி ஒரே மாதிரியாக, ''I do'n no!' என்ற போது இவர்களுக்கு உண்மையிலேயே அறிவு சூன்

## அருள் வாக்கு



நமக்குத் தேக உபாதையிருக்கிற போது ஈசுவர தியானம் எப்படி ஒருமுகப்பட்டுப் பண்ணுவது? ஜ்வரம், பல்வலி என்று வந்தால் எப்படிப் பூஜை பண்ணுவது? சரீரத்தில் சக்தி இல்லாவிட்டால் 'சார்தாம்' என்று ஒவ்வொரு திக்கின் கோடியிலும் ஒரு க்ஷேத்ரமாக ஏகப்பட்ட புண்ய ஸ்தலங்களையும் புண்ய நதிகளையும் கொண்ட இந்தத் தேசத்தில் எப்படி க்ஷேத்ராடன தீர்த்தாடனங்கள் செய்வது? உடம்பிலே வலி அசக்தமென்றால் ஜபம் செய்ய முடியுமா? யோகம் முடியுமா? நிஷ்டை எங்கே? ஞானம் எங்கே?

இப்படியாக, பரமாத்ம ஸ்மரணைக்காகவே சரீரத்துக்கு வியாதி வராமல் Preventive — ஆகவும் வியாதி வந்தால் ஸ்வஸ்தப்படுத்திக் கொள்வதற்காகவும் மருந்துகளையும் பத்யங்களையும் ஆஹார விஹார முறைகளையும் மற்ற ஸதாசார விதிகளையும் சொல்லிக் கொடுப்பதற்கு ஒரு சாஸ்திரம் தேவைப்படத்தான் செய்கிறது. அதுதான் ஆயுர்வேதம். (தர்ம சாஸ்திர விதிகளின்படி ஒருத்தன் சுத்தமான வாழ்க்கை நடத்தி விட்டாலே அது Preventive: எந்த வியாதியும் வராது. ஆனாலும் வைத்ய சாஸ்திரமும் இதில் கொஞ்சம் சொல்ல வேண்டியதாயிருக்கிறது.)

வியாதியின் கஷ்டம் தீர்கிறது மட்டும் போதாது. வியாதியில்லாமல் தீர்க்க ஆயுளுடனும் இருக்க வேண்டும். அதற்கு இந்த வைத்திய முறை வழி காட்டுகிறது என்பதால் இதற்கு 'ஆயுர் வேதம்' என்று பெயர். 'எப்படியும் முடியப் போகிற ஆயுசை எதற்கு விருத்திப் பண்ணிக்கொள்ள யத்தனம் பண்ண வேண்டும்?' என்றால் இதற்கும் காரணம் சொன்னேன். உடம்பை வைத்துக் கொண்டுதான் புண்ணியம் பண்ணிப் பாபத்தைப்போக்கிக்கணும். தர்ம அனுஷ்டானம் பண்ணிக் கர்ம சேஷத்தைக் கழிச்சக்கணும் என்று சொன்னேன். இப்போது நமக்கு வாய்த்திருக்கிற இந்த உடம்பு நசிக்கிறதற்கு முந்தியே அப்படி 'இரு வினையொப்பு மலபரிபாகம்' என்று சைவசித்தாந்திகள் சொல்கிறபடி கர்மாவை சுடுகட்டி மும்மலங்களை அகற்றிக் கொள்ள வேண்டும்.

-ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

யமா அல்லது உதவ இஷ்டமில்லையா என்று ஆச்சரியமேற்பட்டது. நான் முன்னால் நகர்ந்து டிரைவரிடம் (கருப்பர்) சென்று அதே கேள்வியைக் கேட்டேன்.

அவர் சுருக்கமாக, ''Oh yeah!'' என்றார். டிரைவரின் பார்வையிலும் நினைவிலும் இருக்கும்படியாக நான் அவர் அருகில் இருந்த மூலை ஸீட்டில் உட்கார்ந்தேன். பஸ் மிக்சிகன் அவென்யூ என்ற பிரதான சாலையில் நீளச் சென்றது. இரண்டு மூன்று ஸ்டாப்புகள் கடந்தன. நான்காவது ஸ்டாப்பில் பஸ் நின்றது. சில பயணிகள் இறங்கினார்கள். மெல்லிய சந்தேகத்துடன் நான் டிரைவரை யதேச்சையாகக் கேட்டேன்.

''லைப்ரரிக்கு இன்னும் தொலைவு போக வேண்டுமா?''

''இல்லை!'' என்றார் அவர் சாவதானமாய். ''அதோ அதுதான் லைப்ரரி. இந்த மூக்கு!'' (''It is just round the corner there!'')

அதாவது அதே பஸ்நிலையத்தில் தான் நான் இறங்க வேண்டும்! நான் விசாரித்திருக்காவிட்டால் பஸ்ஸைக் கிளப்பியிருப்பார் டிரைவர்!

எனக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. ஆத்திரம் தீர ''நீ நாசமாய்ப் போவாய்!'' என்று தமிழில் திட்டிவிட்டு இறங்கி ரோடைக் கடந்து லைப்ரரியின் படிக்கட்டில் எனக்காகக் காத்து நின்றிருந்த ராமானுஜத்தை அடைந்தேன். அவரிடம் நடந்த விஷயத்தைச் சொன்னதும் அவர் சிரித்தார்.

''உதவக் கூடாது என்கிற எண்ணமில்லை இவர்களுக்கு. உங்களுக்குச் சில விஷயங்கள் தெரிந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்'' என்றார்.

''இது ஒரு ஆச்சரியங்கள் நிறைந்த அதிசயமான நாடு. இங்கு ஒளிவு மறைவே கிடையாது. எந்த ஊழலையும் அக்கிரமத்தையும் பொத்தி மறைப்பதில்லை. எல்லாம் வெளியில் வந்து விடும். டி.வி.யில் அலசப்படும். சிகாகோவின் மேயர்கள் சிலர் ஊழலுக்காக ஜெயிலில் தள்ளப்பட்டிருக்கிறார்கள். நம் தேசத்தில் அப்படி நடக்குமா? உடனடியாக ஊழல் கேஸ்கள் மறைக்கப்பட்டு விடும் நம் நாட்டில்!''

நான் சமீபத்தில் அவருக்குக் கிடைத்த விருதுக்காகப் பாராட்டினேன். சங்க இலக்கியத்தைப் பற்றின ஆராய்ச்சியை அவர் சிகாகோவில் செய்வது வேடிக்கையாக இருக்கிறது என்றேன். ''இங்கு தான் என்னால் செய்ய முடியும்'' என்றார் ராமானுஜம் தீவிரமாக. 'எங்கள் லைப்ரரிக்கு வந்து பாருங்கள். இந்தியாவில் கிடைக்காத அபூர்வமான சங்க கால இலக்கியப் புத்தகங்கள் எல்லாம் இருக்கின்றன. டில்லிக்குச் சென்ற போது சாஹித்திய அகாடமி லைப்ரரியில் எனக்கு வேண்டியிருந்த சில புத்தகங்கள் கிடைக்குமா என்று பார்த்தேன். ஒன்று கூடக் கிடைக்கவில்லை. Is it not a sham:?'' என்றார்.

(தொடரும்)

# பயன் தந்த

● உ. பி. லாட்டரியில் பத்தாயிரம் ரூபாய் பரிசு விழுந்ததும் பல தொழில்களில் முதலீடு செய்தேன். ஆனால் எதிலும் லாபமில்லை. என் நண்பர் மதிப்பிற்குரிய புலவர் மேகநாதன் அவர்கள் **'அகல உழுவதை விட ஆழ உழுவது மேல்'** என்ற பழமொழியின் தத்துவத்தை விளக்கி, ஏதேனும் ஒரு தொழிலில் முழு மூச்சுடன் ஈடுபடச் சொன்னார். அவ்வாறே செய்தேன். இப்போது லாபமாகக் கொழிக்கிறது!
வேலூர். கி.கே.பாஸ்கரன்.

● என் பையன் முதல் ராங்கில் தேறவில்லையே என்று எனக்கு ரொம்ப ஏமாற்றம், ஆதங்கம். இதை அறிந்த என் கணவர் **'எல்லோரும் பல்லக்கில் போனால் பல்லக்கைத் தூக்குவது யார்?'** என்றார். இப்பழமொழி என் பையன் விஷயத்தில் ஆறுதல் அளிக்கவில்லை என்றாலும் மற்ற விஷயங்களில் மனம் பறப்பாய்ப் பறக்கும்போது நினைவுக்கு வந்து பொங்கும் பாலில் தண்ணீர் தெளித்தாற் போல் மனம் சமாதானம் அடையும்.
பெங்களூர். ஜி. வசந்தா.

● கல்கத்தாவில் நாங்கள் இருந்த போது பயங்கர வெள்ளம் வந்து விட்டது. தனியே இரண்டு குழந்தைகளுடன் திண்டாடிக் கொண்டிருந்த நான் சென்னையிலிருந்த என் சகோதரி வீட்டுக்குப் போய் விடத் தீர்மானித்து ரயில் ஏறினேன். கடினமான பிரயாணத்துக்குப் பிறகு ஐந்தாம் நாள் தான் ரயில் சென்னையை அடைந்தது. டாக்ஸியில் சகோதரி வீட்டுக்குப் போய் இறங்கியபோது, அவள் இடுப்பில் ஒருகுடம், தலையில் ஒரு குடம், கையில் ஒன்று என்று நீர்க் குடத்துடன் வருவதைப்பார்த்ததும் எனக்கு ஞாபகம் வந்த பழமொழி: **'சேலை இல்லேன்னு சித்தப்பன் வீட்டுக்கு வந்தா சித்தி ஈச்சம் பாயைக் கட்டிக்கொண்டு எதிரே வந்தாளாம்'**
சென்னை—59. சுகந்தா ராமகிருஷ்ணன்.

● நான் எஸ். எஸ். எல். சி. யில் மற்ற பாடங்களில் நிறைய மதிப்பெண்கள் வாங்கியிருந்தாலும் கவனக் குறைவால் கணிதத்தில் குறைந்த மதிப்பெண் வாங்கித் தோற்று விட்டேன். இதனால் கணிதத்தின் மீதே வெறுப்பு வந்து விட்டது. அப்போது என் தந்தை **'தோல்வியே வெற்றியின் முதல் படி'**



என்று சொல்லித் தேற்றினார். அப்போது பிறந்த உறுதியால் எம். எஸ்ஸி. கணிதத்தில் மாகாணத்திலேயே முதலாவதாகத்தேறி தற்போது கணிதவிஞ்ஞானியாகப் பணியாற்றி வருகிறேன்.
திருவனந்தபுரம்.
எஸ். ராஜகோபாலன்.

● நண்பனுடனும், தாயாருடனும் பெண் பார்க்கச் சென்ற போது, பெண் எங்களை நமஸ்கரித்து விட்டு 'வாதாபி கணபதிம் பஜேகம்' என்ற பாடலைப் பாடினாள். என் இரட்டை நாடி சரீரத்தைப் பார்த்துக் கேலி செய்வதாக எண்ணி நான் அவளை மணக்க மறுத்துவிட்டேன். பெண் வீட்டார் மீண்டும் மீண்டும் சம்மதம் தருமாறு வற்புறுத்தினர். நண்பன் நாசுக்காக விசாரித்ததில் தெரிந்தது அப்பெண்ணை மூன்று பேர் பார்த்து நிராகரித்து விட்டனர் என்று. அதனால் மூன்று முறையும் பாடிய ரங்கபுர விஹாரவைப் பாடாமல் விக்னம்



நீங்க விநாயகர் மேல் பாடினாள் என்றும் தெரிய வந்தது. **'ஆறுவது சினம்'** என்ற ஔவையின் பழமொழி என் தாம்பத்திய வாழ்வை ஒளிமயமாக்கியது.
திருச்சி. ஆர்.கோபாலன்

● எனக்குக் கணவராக வாய்க்கப் போகிறவரைப் பற்றி ''கன்னங்கரேலென்று கரிக்கட்டைப் போல் இருக்கிறாரே'' என்று பக்கத்து வீட்டு அம்மாள் சொன்னதும் என் முகம் வாட்டம் அடைந்தது. இதைக் கவனித்த என் பாட்டி ''அதனாலென்ன **'யானை கருத்தாலும் ஆயிரம் பொன், சிறுத்தாலும் ஆயிரம் பொன்'**னுடீ'' என்று கூறி அவளை அடக்கிவிட்டாள். அந்த அம்மாள் சென்றபின் பாட்டியிடம் கேட்டேன்.



# பழமொழி

''யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன்' என்பதுதானே பழமொழி?''

''ஆமாம் அடி. ஆனால் கல்யாணப் பேச்சு பேசும் போது அது போன்ற பழமொழி சொல்லக் கூடாது என்பதால் புது மொழி ஒன்றை உருவாக்கினேன்'' என்றாள் பாட்டி. என் மகிழ்ச்சி அதிகரித்தது.

பங்களூர். எஸ்.தனலட்சுமி.

● நான் படித்த கல்லூரிக்கும் மற்றொரு கல்லூரிக்



கும் இடையே மோதல். மாணவர்கள் ஒருவரை ஒருவர் தாக்கிக் கொண்டிருந்தனர். நான் பஸ்ஸ்டாண்டிலிருந்து கல்லூரி போகும் வழியில் எதிர்த்தரப்பு மாணவர்களிடம் மாட்டிக் கொண்டேன். அவர்களிடமிருந்து தப்புவது எப்படி என்று யோசித்தேன். என்னிடமிருந்த ஒரே ஆயுதம் வாய்தான். வாயுள்ள பிள்ளை பிழைக்கும் என்ற பழமொழி நினைவுக்கு வர, பக்கத்தில் இருந்த டாக்ஸி மீது ஏறி நின்று முழங்கினேன். ''எவனாவது பக்கத்தில் வந்தால் தொலைத்து விடுவேன். உங்கள் கல்லூரி இருக்கும் திருப்பரங்குன்றம் தான் என் பிறப்பிடம். என்னைத் தொட்டால் உங்கள் விதி என்ன ஆகும் என்று சொல்லத் தேவையில்லை'' என்றேன். கூட்டம் ஸ்தம்பித்து நின்றது. அந்தச் சமயம் அங்கு வந்த எங்கள் யூனியன் தலைவருடன் மோட்டார் சைக்கிளில் விரைந்தேன்.

குன்னூர். ஆழ்வாரப்பன்.

● என் நண்பன் கல்யாணத்திற்குப் பெண்பார்க்கப் போன போது நானும் அவனுடன் சென்றேன். பெண் சற்று கருப்பாக இருந்ததால் என் நண்பனின் பாட்டி (அவர் ஆந்திராவில் இருந்தவர்) ஒரு தெலுங்குப் பழமொழியைக் கூறினார். **''கோடலு நலுப்பு குலமந்த நலுப்பு''** அதாவது ''மருமகள் கருப்பானால் வரும்சந்ததியினரும்கருப்பாகவே பிறப்பார்கள்.'' எனது நண்பனுக்குப் பெண்ணைப் பிடித்துவிட்டதால் இனிதே கல்யாணம் நடந்தது. ஒரு வருடத்திற்குப் பிறகு அவன் மனைவி ஒரு குழந்தையும் ஈன்றாள். மாமனார்வீட்டுக்குச் சென்று குழந்தையைப் பார்த்துவிட்டு வந்த என் நண்பன்பாட்டியிடம்சென்று



''பாட்டி குழந்தை சிவப்பாக இருக்கிறது'' என்றான். உடனே பாட்டி, ''காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு'' என்றாரே பார்க்கலாம்!

சென்னை—17. வசந்தன்.

● கடந்த கோடைவிடுமுறையின் போது, மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியல் துறையின் சார்பாக, டாக்டர் பட்டத்துக்கு (Ph.D.) ஆராய்ச்சி செய்பவர்களுக்காகப்பயிற்சி வகுப்புக்கள் நடத்தப்பட்டன.

ஒருநாள், பேராசிரியர், டாக்டர் ஜெயராமன், ஆய்வுக்கட்டுரையில் மேற்கோள்கள் அமைக்கும் போது பின்பற்ற வேண்டிய விதிகளை வகுப்பில் விளக்கிக் கொண்டிருந்தார். பெண் ஆய்வாளர் ஒருவர் ''பழமொழிகளை ஆய்வுக்கட்டுரையில் எடுத்தாளும் போது பின்பற்ற வேண்டிய முறை யாது?'' எனக் கேட்டார். உதாரணத்துக்கு ஒரு பழமொழி கூறுமாறு டாக்டர் ஜெயராமன் அந்தப் பெண்ணிடம் திருப்பிக் கேட்டார். அந்தப் பெண் பதில் சொல்லத் தெரியாமல் சிரித்துக் கொண்டே நின்றார். ''வேறு யாராவது கூறுங்களேன்'' என்று பேராசிரியர் கேட்டதும், நண்பர் ஒருவர் கூறினார்: **'' நுணலும் தன் வாயால் கெடும்.''**

சாயர்புரம். ஞா.இராசமாணிக்கம்.

● இந்திரா காங்கிரஸைத் தாக்கிப் பேசினார் நண்பர்.

''இந்திரா காங்கிரஸ் கட்சியைத் தானே எல்லாக் கட்சிகளும் தாக்குகின்றன? இதுபோல் வேறு எந்தக் கட்சியும் தாக்குதலுக்கு ஆளாகவில்லையே?'' என்றார் சூடாக. உடனே நான் **''காய்த்த மரம்தானே கல்லடி படும்?** காய்க்காத மொட்டை மரத்திடம் மற்றவர்களுக்கு என்ன வேலை?'' என்று மடக்கியதும் நண்பர் திணறிவிட்டார்.

சென்னை—61. நேசன்.



கோவி · மணிசேகரன்

# யூ



ஏறத்தாழ மூவாயிரம் 1* கற்கள் நீள முள்ள மஞ்சள் நதி, சீன சாம்ராஜ்யத்தின் மகத்துவங்களை, அலைக்கரம் கொண்டெழுதி ஆர்ப்பரிக்கிறது. உலகிலேயே பெரிய நதி என்கிற ஒரு மகத்தான பெருமை போதாதா?

தெற்குத் தலைநகரமான*2 நான்—கிங், அது வரையில் ஆண்ட மன்னர்களால் பட்ட அவதியிலிருந்து விடுபட்டு, செங்கோலுக்கு ஒரு புதிய சங்கீதத்தை மீட்டிய ஷூன் மன்னன் காலத்தில் கபிட்சத்துக்குச் சுந்தர காவியம் பாடிய காலம் — கி. மு. 2255—2205.

தனக்கு — முந்நூறு ஆண்டுகட்கு முன் ஆண்ட சீன நாகரீகத்தின் பிதாமகன் என்றழைக்கப்பட்ட மஞ்சள் நதிச் சக்கர வர்த்தி *3 ஷூவாங்—தி என்பவனைப்போன்று அரசாண்டு சீனாவைச் சொர்க்கபுரியாக்கக் கனவுகண்டு நனவாக்க முயன்றான் மன்னன் ஷூன்.

தள்ளாமை அவனைத் தடியெடுத்து ஊன்ற வைக்கவில்லையாயினும், தனது வாழ்நாளில் யானைக் கொடிக்கு ஒரு நாகரீகத்தையே செய்யச் சிந்தித்தான்; சிந்தித்துக் கொண்டும் வந்தான்.

ஓர் அரசியல் மேம்படுகிறது என்றால் அங்கே ஓர் உத்தமமான அதிகாரி இருந்தால் போதும் என்பது போல, ஷூன் மன்ன னுக்குக் கிடைத்தவன் யூ.

அறிவு அவனது வாசலில் காவல் நின்றது. அதுகூடப் பெரிதல்ல; கடமையுணர்வு அவனது இதயத்தில் காவல் புரிந்தது.

விஞ்ஞான மதிநுட்பமல்லாது, மிகப் பெரிய பொறியியல் நிபுணன்.

பன்னிரண்டு ஆண்டுகட்குமுன்...

மழைக்காலம் வந்தால் வெள்ளம் நிச்சயம்...

'ஓ... மழையே நீ வாராது இருப்பா யாக' — என்று சீன மக்கள் கண்ணீர்விட்டு வேண்டுவர்.

ஹோயாங்கோ, யாங்ட்ஸிகியாங் போன்ற பேராறுகளும், வேறு சில சிற்றாறு களும் உடைபட்டால்...

ஒன்பது மாகாணங்கள் அடங்கிய அந்த ராஜ்யமே பிரளயத்தில் நீந்துவது போலத் தான். இந்த ஆறுகளின் கர்வத்தையடக்க ஏவப்பட்டவன்தான் கடமை — கண்ணியம்— கட்டுப்பாடு என்கிற மூன்று வேத சொத் களின் வித்தகன் யூ.

வேகமாகப் புரவியில் வந்தவன் அரண் மனை வாசலுக்கு வந்து நின்றதும், ஒரு நிஜ மான கண்ணியப் புருஷனாக நின்று, தனது மன்னன் வதியும் அரண்மனைக்கு வணக்கம் போக்குகிறான்...

ஒரு கட்டுப்பாடு கூடிய நடையுடன் அரண்மனையில் பிரவேசிக்கிறான்.

அழகில் ஒரு புதுக்கவிதை பேசும் தோற்றமுடன் பணிப்பெண்கள் இங்குமங்கு மாக வாத்தியைய நடை பயின்று உலவு கிறார்கள். யூவைக் கண்டதும் வணங்கவும் செய்கிறார்கள். சத்தியமான வணக்கங்கள்.

அரண்மனையின் பிரதான கூடத்தில் தங்கத்தாலான பறவை நாக ஆசனத்தில் அமர்ந்து காணப்படுகிறான் மன்னன் ஷூன். ஆடைகளே பொன்னால் வேய்ந்திருக்க அணி கலன்களைப் பற்றி என்ன சொல்ல?

குல்லாயைத் தடவிக் கொண்டே அன் புடன் யூவை வரவேற்கிறான் மன்னன் ஷூன்.

எதிரே வந்து நின்ற யூ, மண்டியிட்டு, மூக்குத் தரையில்பட மும்முறை வணங்கு கிறான்.

''அணைக்கட்டுகள் எவ்வளவு தூரமிருக் கின்றன யூ?''

''சக்கரவர்த்திப் பெருமானே! அடுத்த மாதம் முடிந்துவிடும்.''

''இனிமேல் மக்கள் நீரில் மீன்களைப் போல மிதக்க மாட்டார்களே!''

''ஒன்பது மாகாணங்களிலும் பாசன வசதிகள் ஓகோவென்றிருக்கும்.''

''ஓகோ! நல்லது யூ! உன் மனைவியை நீ போய்ப் பார்க்கக் கூடாதா. நிறை மாத கர்ப்பிணி. இந்தப் பன்னிரண்டு ஆண்டுக் காலமாக அணைகளைக் கட்ட ராப்பகலென்று உழைக்கிறாய். நினைத்தபோது வீட்டுக்குச் செல்கிறாய். நானறிவேன். இப்போது அவள் கர்ப்பிணி. தினமும் செல்வதற்கென்ன? அந்த அணைக்கும் நீதானே பொறி யாளன்?''

''எனக்கு முதலில் நாடு; பிறகுதான் வீடு! முதலில் மன்னர்; பிறகுதான் மனைவி! முதலில் மக்கள்; பிறகுதான் குழந்தை, பிரபோ!''

அயர்ந்து போனான் சீன மன்னன் ஷூன்! ஆ! எத்தனைக்குக் கடமையுணர்ச்சி!

1 * 4845 கிலோ மீட்டர்

2 * பீகிங் வடக்குத் தலைநகரம்

3 * இவன் காலத்தில்தான் சீனாவில் பட்டுப்புழுவில் நூலெடுக்கும் முறை கண்டுபிடிக்கப்பட்டது



சற்றைக்கெல்லாம் வணங்கி விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டான் யூ.

தொலைவில் நின்றிருந்த தனது நினைவான புதல்வர்களையும் நினைவு தவறிய பிள்ளைகளையும் நிதானமாகக் கூர்ந்து பரிசீலிக்கிறான் மன்னன் ஷுன். பிறந்திருக்கவே வேண்டாம்!

இரவின் போர்வைக்குள் நான்கிங் தலைநகரம் வெளிச்சக் கதைகளைப் பேசிக் கொண்டிருக்கிறது.

ஆ! எப்படித்தான் இன்றிரவு வந்து விட்டாரோ?

யூவின். தொட்டில் தெய்வத்தை வயிற்றில் சுமந்து கொண்டிருந்த கட்டில் தெய்வம் பூரித்துப் போகிறது.

''உடம்பு எப்படி இருக்கிறது ஸி-கியாங்!''

ஸி–கியாங் என்ற பெயரில் மேற்கில் ஓடும் நதி போலச் சிரிக்கிறாள். அந்த நதிக்கரையில் பிறந்ததால்தானே அந்தப் பெயர் அவளுக்கு வந்தது?

''நாளை அல்லது மறுநாள் பிரசவமாகலாம் என்று மருத்துவச்சி சொன்னாள்!''

''ஓ... என் இனிய மகனே!'' என்று கூறிய யூ. மனையாளின் மணிவயிற்றை முத்தமிடுகிறான்.

''அது எப்படி அவ்வளவு உறுதியாக மகன் என்கிறீர்கள்! ஓ... நீங்கள் பொறியியல் ஞானியல்லவா?''

இருவருமே கலகலவென்று சீன சங்கீதமாய்ச் சிரிக்கிறார்கள்:

உண்டு முடித்தனர்.

உறங்கச் செல்வதற்கு முன்...

''கியாங்! என் மகன் பிறந்து வெளியே கொண்டு வருகிறபோது, அவன், முதன் முதலாக எனது முகத்தில் தான் விழிக்க

வேண்டும். ஏனென்றால், எதிர்கால சீனச் சாம்ராஜ்யத்துக்கு அவனும் என்னைப்போலக் கடமை வீரனாக விளங்க வேண்டும்.''

''அது எப்படிச் சாத்தியமாகும்? முதலில் மருத்துவச்சி முகத்தில்தானே எந்தக் குழந்தையும் விழித்தாக வேண்டும்?''

பூ விசித்திரமாகச் சிரிக்கிறான்.

''இயாங்! குழந்தை பிறக்கிற போது கண்களை மூடிக் கொண்டுதான் பிறக்கும்! இந்தப் பாழும் உலகில் பிறக்கப் போகிறோமே என்கிற பயம். மருத்துவச்சி குழந்தையைத் துடைத்து, பிருஷ்ட பாகத்தில் தட்டி, 'அடசீ! கண்ணைத் திறந்து குரல் கொடு' என்கிறாளே... அப்போதுதான் திறக்கும்! திறக்கும்போதே இந்த உலகில் ஏன் பிறக்கிறோம், அயோக்கியத்தனம் செய்யவா என்று அழும். சில குழந்தைகள் பிறக்கிறபோதே அழும். அதுகளை உலகம் வயிற்றிலிருக்கிற போதே பயமுறுத்திவிடும். கண்களை மட்டும் பின்னால் தான் திறக்கும். நமது மருத்துவச்சி கண்களைத் துணியால் கட்டிக் கொண்டே நம் குழந்தையைத் துடைக்க வேண்டும். குழந்தை அழுததும் அவள் உன் மடியில் போட்டு விட்டு வெளியே வந்து விட வேண்டும். நான் வந்து என் செல்வன் முகத்தில் விழிப்பேன்.''

ஓ... என்ன கடமையுணர்வான ஆசை! அவன் மட்டுமா மகிழ்ந்து கொண்டான்? சீனராஜ்யமே அந்த இரவில் மகிழ்ந்து வாழ்த்தியது.

அப்போது...

வெளியே புரவிகளின் குளம்படி ஓசை: ஏதோ அவசரம் என்று எச்சரிக்கிறது.

விரைந்து உள்ளே நுழைந்த 4 *விவசாய அமைச்சர், வீ, ''பூ! புறப்படு, வடக்கு அணைக்கட்டில் ஏதோ விரிசல் கண்டிருக்கிறது'' என்று பதைத்தார்.

மறுகணம்...

மனைவியின் ஞாபகம் இருக்க வேண்டுமே..

புரவிகள் வடக்கு நோக்கி வெள்ளமெனெ விரைகின்றன.

மகாமலையான ஊ–டை–ஷானின் ஐந்து சிகரங்களையும் முத்தமிட்டு உதிக்கிறான் ஆதவன். அவன்தானே உலகின் ஒரு குடை மன்னன்!

வடக்கே இருந்த அணைக்கட்டில் வேலைகள் துரிதகதியில் நடக்கின்றன..

ஏதோ சின்ன கவனக் குறைவால் ஏற்பட்ட விரிசல்; பின்னால் தனது தொழில்நுட்பத்துக்குப் பங்கம் வரக் கூடாது என்பதற்காக அந்தப் பகுதியையே இடித்துப் புதிய கலவைக் கண்ணைத்தால் நிர்மாணிக்கிறான் பூ...

இதற்குள் அரண்மனையிலிருந்து அழைப்பு.. விரைந்து புறப்படுகிறான் பூ...

வழியில்...

மனைவிக்கு இடுப்பு வலி என்கிற செய்தி எதிர்கொண்டு வருகிறது.

என்ன செய்வது?

மகனின் முகத்தில் விழித்தாக வேண்டும்.

இங்கே அணைக்கட்டு விரிசல்...

அங்கே மன்னன் அழைப்பு...

இடையில் மனைவியின் பிரசவம்...

வந்தவனிடம் சொன்னான் பூ: ''வீட்டின் கூடத்தில் என்னுருவம் வரைந்த சித்திரப் படமிருக்கிறது. என் மகனை அந்தப் படத்தில் விழிக்கச் சொல்!''

அடுத்துக் கொஞ்சமும் தாமதியாமல் அரண்மனை நோக்கி விரைகிறான் பூ.

நடுப்பகல் சூரியன் 5 *பான்–கூ என் பவனைப் பிரகாச நினைவுபடுத்திக் கொண்டிருந்தான்.

அரண்மனையை விட்டு வெளியேறிய பூக்கு மன்னன் உத்தரவு...

''நீ வீட்டுப்பக்கம் சென்று பிறகு அணைக்கட்டைப் பார்வையிடப் போகிறாய்!''

செய்தியறிந்து தான் மன்னன் அவ்வாறு உத்தரவிட்டிருக்கிறான்; வரவழைத்ததும் அதற்காகத்தான் என்பது புரிந்தது.

ஆனால் அணைக்கட்டு...?

மீண்டும் ஏதேனும் கவனக் குறைவு ஏற்படுமானால்...

பூ தனது புரவியை வீட்டுப் பக்கமாகவே செலுத்திச் செல்கிறான்...

---

அண்மையில் மத்திய அரசில் உயர் மட்ட அளவில் ஒரு முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

மத்திய, மாநில, யூனியன் பிரதேச அமைச்சர்கள் வெளிநாடுகளிலிருந்து சாமான்களை வாங்கி வந்தால் இனிமேல் சுங்கம், துணைச் சுங்கம், உதவிச் சுங்கம் என்று எந்தவிதமான சுங்கவரியும் செலுத்த வேண்டியதில்லை. வெளிநாடுகளில் அவர்களுக்கு 'அன்பளிப்பாகக்' கிடைக்கும் எல்லாப் பொருள்களும் இனிமேல் அவர்களுடைய 'மூட்டை முடிச்சாகக்' கருதப்படும். வெளிநாடுகளிலிருந்து இங்கே வருபவர்கள் கொண்டு வந்து அவர்களுக்குக் கொடுக்கும் பொருள்களுக்கும் இந்த விதி பொருந்தும்.

'வீக்'கிலிருந்து.
தகவல்:–செலத்து மோகினி.




---

4 * சங்கேத்துக்கென்றும் கூட அமைச்சர் கண்ட நாடு சீன

5 * இவன்தான், பூமியை சூரியனைச் சந்திரனைச் செதுக்கிய படைப்புக்கடவுள் என்பது சீன புராணம்.



திருநெல்வேலி கல்கி ஏஜெண்ட் ஸ்ரீ S. கோபாலகிருஷ்ணன் அவர்களின் குமாரத்தி சௌபாக்யவதி அகிலாவிற்கும் சங்கரன் கோவில் ஸ்ரீ வெங்கடாசலம் அய்யர் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ராமச்சந்திரன், M.Com. அவர்களுக்கும் திருநெல்வேலியில் விவாஹம் வெகு விமரிசையாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்







ஓ... புருஷன் வருகிறான்...
மகிழ்ந்து போகிறாள் ஸி-இயாங்.
புரவி வீட்டு வாசலைக் கடக்கிறபோது...
குழந்தை அழும் குரல்...
காதுகளில் சீன யாழாய் ஒலிக்கிறது....
'ஓ... என் மகனே...'
இவ்வளவே எண்ணினான்...
ஆனால் புரவி மட்டும் அணைக்கட்டை நோக்கிக் கடமையுணர்வுடன் விரைந்தது.

மாலைக் கதிரவன் மஞ்சள் நதியை முத்தமிட்டு மேலும் மஞ்சளாக்குகிறான். மஞ்சள் நிற வண்டல்கள் இருப்பதால்தானே அதற்கு அப்பெயர்...

வீட்டினுள் நுழைகிறான் யூ...

பணிப்பெண்கள் முதல் அனைவருமே கண்களில் கட்டுப் போட்டது மாதிரிக் கண்களைக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்...
புரிகிறது: நன்றாகவே புரிகிறது...
அறையினுள் நுழைகிறான்...
மனைவியும் அவ்வாறே கண்களைக் கட்டிக் கொண்டிருக்கிறாள்! என்ன இது?
''ஸி-இயாங்! என்ன நீயுமா?''
''வாருங்கள்.''
அதரங்களில் மகிழ்ச்சியின் நெளிவு...
''மருத்துவச்சிக்கு ஆணையிடச் சொன்ன நீங்கள் என்னை மறந்து விட்டீர்கள். ஆனாலும் உங்கள் சத்தியமான கடமையுணர்வைக் கண்டு நான் மட்டும் ஏன் விழிக்க வேண்டும் என்று கண்களைக் கட்டிக் கொண்டேன். உங்கள் மகனை நன்றாகப் பாருங்கள்; கண் குளிரப் பாருங்கள். சித்திரத்தைப் பார்க்கச் சொன்னீர்களாம். எனது நிஜசித்திரமே இருக்கிற போது அது எதற்காக என்றுதான் இதுவரை நாங்கள் கண்களைக் கட்டிக் கொண்டிருக்கிறோம். சித்திரம் இன்னொருவனின் உணர்வில் வரையப்பட்டது''.

மனைவியின் மகாயக்ஞம் போன்ற மகத்தான இதயத்தை நேசித்தவாறு குழந்தையை அள்ளியெடுத்து முத்தமிடுகிறான் யூ...

சிலர்க்கிற அப்போது அங்கு பிரசன்னமான மன்னன் ஷுன், கண்களில் மஞ்சள் நதிப் பிரவாகமுடன், ''யூ நான் வீட்டுப் பக்கம் போகச் சொல்லியும், என் கட்டளையை மீறி அணைக்கட்டுக்குச் சென்றிருக்கிறாய். என்ன கட்டுப்பாடு இது?'' என்றான்.

மன்னனைக் கண்டதும் யூ, மண்டியிட்டு வணங்கிச் சொன்னான்: ''பிரபோ வீட்டுப் பக்கமாகப் போகச் சொன்னீர்களேயொழிய வீட்டுக்குப் போ என்று சொல்லவில்லையே? நான் வீட்டுப் பக்கமாகத்தான் போனேன்.''

ஓ... யூ... எதிர்காலச் சீனம் உன் போன்றவர்களால் உயர்வாகப்போகிறது ... ஒரு தேசத்துக்கு உன்போன்று ஒருவன் கிடைத்தால் போதும்...
இவ்வாறு எண்ணிய மன்னன் ஷுன், ''யூ எனக்குப் பிறகு, எனது அரியணை உனக்கு! இந்த நல்ல நாளில் இதனைப் பிரகடனப்படுத்துகிறேன்'' என்றான்.
மகன் பிறந்த நேரம்...
மகிழ்ந்தது சீனம்.

---

# டி.வி.ஸ்பெஷல்

ஏப்ரல் 1 **கல்கி** இலவச இணைப்பு

டி. வி: ஸெட் பற்றியோ, டி. வி. நிகழ்ச்சிகள் குறித்தோ, அவற்றைப் படம் பிடிப்பது, ஒளிபரப்புவது சம்பந்தமாகவோ உங்களுக்கு என்ன சந்தேகம் இருந்தாலும் கேள்வி தொடுக்கலாம். முக்கியமான கேள்விகளைத் தேர்ந்தெடுத்துப் பதில்களைக் கோரிப் பெற்றுப் பிரசுரிக்கிறோம். பிரசுரமாகும் கேள்விகளுக்குப் பரிசு உண்டு. முடிவு தேதி மார்ச் 12உ. உறையின் மேல் 'டி. வி. கேள்வி' என்று குறிப்பிடவும்.



கேள்வி:

என் பெயர்: ..........................

விலாசம்: ..........................

# பூர்விகத் தொடர்பும் புலமைத் தொடர்பும்

மீ.ப.சோமு



ராம்சிங்கும் நானும்

இரண்டு நேயர்கள் தங்கள் கேள்விகளுக்கு இது வரையிலும் விளக்கம் தரவில்லையே என்று நினைவூட்டி எழுதியிருக்கிறார்கள். சொந்த விஷயம் என்ற காரணத்தால் கொஞ்சம் தள்ளிப் போட்டேன். இந்த வாரமே அந்த இரண்டு கேள்விகளுக்கும் மறுமொழி கூறிவிடுகிறேன்!

பாண்டிச்சேரி கோவிந்தராஜ் அவர்கள் எழுதியுள்ள கடிதத்தின் கேள்வியை முதலில் பார்க்கலாம்.

''அன்னிய மொழியாளர் ஒருவருடன் மிகவும் நெருங்கிப் பழகி அவரே எனது நம்பிக்கைக்குப் பாத்திரமாக எடுத்துக் கொண்டிருக்கிறேன். இந்த அன்னிய சகவாசத்தை என் உறவினர்கள் பலர் எப்படியோ நினைக்கிறார்கள். நீங்கள் பல இறப்பட்ட அறிஞர்களோடும் கலைஞர்களோடும் பழகியுள்ளவர் என்று தெரிகிறேன். எங்கள் நட்பு நீடிக்குமா? வேடிக்கையான கேள்வி என்று இதைப் புறக்கணிக்காதீர்கள். என்னைப் போன்று பலர் இருக்கலாம். சிலபலவில் சொல்லுங்கள்.''

பாண்டிச்சேரி நண்பரின் கேள்விக்கு விடையாக எனது வாழ்க்கை அனுபவத்தையே இங்கே கூறுகிறேன்.

எனது வாழ்வில் எனக்கு உயிருக்குயிரான நண்பராக இருந்தவர் தமிழர் இல்லை!

திருநெல்வேலி லாலா குடும்பம் என்று பலர் கேட்டிருக்கலாம். அவர்களுடைய ஹல்வா மிகமிகப் புகழ் பெற்றது! அந்தப் பழமையான லாலா மிட்டாய்க் கடையின் முதலாளியான ஜகன்சிங் அவர்களின் மகன் ராம்சிங்! அவரும் நானும் சிறு பிராயத்திலிருந்து மிகவும் நெருங்கிய நண்பர்கள்.

நேருஜி தமது குடும்பத்தோடு திருநெல்வேலிக்கு வந்தபோது லாலாஜியின் வீட்டிலே தான் தங்கினார்! ஜகன்சிங் விடுதலைப் போராட்டத்திலே ஈடுபட்டுச் சிறை சென்ற தேசபக்தர். பல காங்கிரஸ் தொண்டர்களை ஆதரித்தவர்; பெரிய வள்ளல். எப்போதுமே பொது நல சேவைக்காகப் பெருந்தொகைகள் செலவழித்தவர். அவருடைய புதல்வர் ராம்சிங்கும் தமது தந்தையைப் போலவே சிறந்த தேசியவாதி. அவரும் நானும் சேர்ந்துதான் எனது கல்லூரி நாட்களில் நெல்லையில் 'தேசிய வாலிபர் சங்கம்' என்ற ஒரு பெரிய அமைப்பை நடத்தி வந்தோம்.

ராம்சிங்கின் தாய்மொழி ஹிந்தி. தமிழிலே அவருக்கு ஓரளவு தொடர்பு ஏற்பட்டது எனது நட்பின் மூலமே.

இப்படிப்பட்ட வடஇந்தியர்தான் எனது உயிர்த் தோழராக இருந்தார். சுகத்திலும் துக்கத்திலும் எனக்குத் துணை அவரே! இங்கிலாந்துக்கு நான் புறப்பட்டபோது வழியனுப்புவதற்காகச் சென்னைக்கு வந்தார். நான் திரும்ப இந்தியாவுக்கு வந்த போது படுக்கையில் இருந்தார். சென்னைக்கு வர முடியவில்லை. திருநெல்வேலிக்குச் சென்று நான் அவரைப் பார்ப்பதற்கு முன்பு காலமாகி விட்டார். இன்று நினைத்தாலும் என் கண்கள் கலங்குகின்றன. அப்படியானால் என் இதயத்தில் அவருக்குரிய இடம் எத்தகையது என்பதை ஊகித்துக் கொள்ளுங்கள். இன்னும் சொல்லப் போனால், எனது 'அக்கரை சீமையில்' என்ற பயண நூலை ராம்சிங் அவர்களுக்கே நான் சமர்ப்பணம் செய்திருக்கிறேன்!

''அன்னியர்'' என்ற சொல்லுக்கே நட்பு என்னும் அகராதியில் இடமில்லை! எந்த ஊரிலே பிறந்து, எந்த மொழியைப் பேசி,

அடியேனும் புலவன் தான்!



என்ன பின்னணியிலே வளர்ந்திருந்தாலும் சரி, நட்பு என்பது இதையெல்லாம் தாண்டியது! இதயத்தோடு இதயம் சேர்கிற பிணைப்பானது ஒரு நுட்பமான பாசத் துடிப்பினால் ஏற்படுவதாகும்! அது எப்படி ஏற்படுகிறது, ஏன் ஏற்படுகிறது என்பதை எல்லாம் வெறும் அறிவை மட்டும் வைத்து ஆராய்ந்து பார்க்க முடிகிறதில்லை! 'ஜன்ம ஜன்மாந்தர வாசனை' என்றும், ''விட்ட குறை'' என்றும், வேறுவிதமாகவும், ஞானிகள் சொல்வது இத்தகைய தொடர்புகளையே! ஏனென்றால், மெய்யான நட்பு என்பது காரண காரியங்களுக்கும் வியாபாரப் பரிமாற்றங்களுக்கும் அடைபடாத ஒரு நெஞ்சின் இணைப்பாகும்!

அன்னிய மொழியாளராக இருப்பதால் மட்டும் ஒருவர் நட்பிலே குறைந்தவராக ஆகி விடுவதில்லை! அதேசமயம் நமது தாய் மொழியாளராக இருப்பதால் மட்டுமே ஒருவர் நமக்கு நெருங்கிய நண்பராக ஆகிவிடுவதில்லை! ஒரே மொழி பேசுபவர்களும் நண்பர்கள் ஆகலாம்; வெவ்வேறு மொழியாளரும் நண்பர்கள் ஆகலாம்! மொழி, ஜாதி, இனம் முதலிய வேறுபாடுகளுக்கும் உண்மையான நட்புக்கும் எவ்விதமான சம்பந்தமும் இல்லை. என்னுடைய நெருங்கிய நண்பர்களிலே பலர் வேறு ஜாதி, வேறு இனத்தைச் சேர்ந்தவர்கள்! எனது இந்த அனுபவத்தையே பாண்டிச்சேரி நேயருக்குக் கூறுகிறேன்!

• • •

''நீதிபதி மகராஜனும் ரசிகமணி டி. கே. சி. யும் தமிழ்ப் புலவர்களைக் காய்பவர்கள் ஆயிற்றே! நீங்கள் எப்படி? டி. கே. சியை மதிப்பது போல நீங்கள் மதிக்கிற ஒரு புலவர் பெயரைச் சொல்ல முடியுமா?''

இவ்வாறு கேட்கிறார், 'புலவர்க்கடியான்' என்ற புனைபெயரிலே ஒரு தஞ்சை நேயர்!

வழக்கமாக நான் சொல்லிக் கொள்வதில்லை, ஆனாலும் புலவர்க்கு அடியானின் கேள்வி எழுந்திருப்பதால் இங்கே சொல்கிறேன். அடியேனும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'புலவர்' தேர்வு எழுதிப் பட்டம் பெற்ற ஒரு புலவன் தான்!

டி. கே. சி. யும் மகராஜனும் புலவர்களைக் ''காய்வது'' பற்றிய பின்னணியைச் சற்றுத் திரும்பிப் பார்க்க வேண்டும். டி.கே.சியின் கல்லூரி நாட்களிலும், பிறகும், தமிழ்நாட்டிலே அப்போது இருந்த புலவர்களிலே பலர் முன்னேற்றக் கருத்துக்களுக்குச் சற்றும் இடம் தராத ஒரு பழமைக் குழுவாக இருந்தனர். புரட்சி மனப்பான்மை இல்லாத இத்தகைய பண்டிதர்களையே டி. கே. சி. குறை கூறினார். சீர்திருத்த நோக்கும், முற்போக்கு எண்ணங்களும் கொண்ட புதுமைப் புலவர்களை அவர் பாராட்டவே செய்தார். உண்மையில் அத்தகைய பண்டிதர்கள் சிலர் அவருக்கு நண்பர்களாகவே இருந்தார்கள்!

என் சம்பந்தப்பட்ட வரை, நான் மிகவும் மதித்து வணங்கிய பண்டித சிரோமணி வி. சிதம்பர ராமலிங்க (''ம்'' கிடையாது) பிள்ளை அவர்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறேன். ஆரம்ப நாட்களில் நெல்லை இந்து கல்லூரியில் எனக்கு ஆசிரியராக இருந்தவர் இவர். பின்னர் ஓய்வு பெற்றதும் திருவாவடுதுறையிலே ஆதீன வித்துவானாக இருந்தார். பிற்காலத்தில் இவரிடமே நான் 'தொல்காப்பியம்' பாடம் கேட்கக் கூடிய அரிய வாய்ப்பு எனக்குக் கிட்டியது! வடமொழி, தமிழ் இரண்டிலுமே அவருக்கு மேலான புலமையுள்ள ஒரு பண்டிதரை நான் பார்த்ததில்லை! இலக்கணத்திலே அவருக்கு ஒப்பானவர் மிக மிக அருமை! 'இலக்கணப் புலி' என்றே அவரை அச்சத்தோடு அழைப்பார்கள்!

இந்தப் பேராசிரியருடைய இன்னொரு பெரிய சிறப்பு என்னவென்றால், எப்போதுமே இவர் மிக எளிய தமிழிலே பேசுவார், எழுதுவார்! அத்தனை இலக்கியஇலக்கணப்புலமைவாய்ந்தவராக இருந்தபோதிலும், அவருடைய நடை எல்லாருக்கும் புரிகிற சொற்களில் நேருக்கு நேர் உரைப்பது போல அமைந்திருக்கும்! கரடுமுரடாக இராது!

''நம்முடைய புலமையைத் தம்பட்டம் அடிப்பதற்கு எழுதுகிறோமா, அல்லது, படிப்பவருக்கு, நாம் சொல்லுவது புரிய வேண்டும் என்பதற்காக எழுதுகிறோமா?'' என்று மாணவர்களை அடிக்கடி கேட்பார்!

நான் வணங்கக் கூடிய ஆசிரியர்களில் பேராசிரியர் வி. சிதம்பர ராமலிங்கபிள்ளைக்கு ஒரு தனியான இடம் என் உள்ளத்தில் எப்போதும் இருந்து வருகிறது!

• • •

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



ஆசிரியர்: ''வரவர வீட்டுக்காரர் ரொம்ப தொந்தரவு பண்றார்.''

உதவி ஆசிரியர்: ''என்ன?''

ஆசிரியர்: ''வாடகை பாக்கியை உடனே கொடு இல்லே என்னோட கதை ஒன்றை உன் பத்திரிகையில் போடுங்கிறார்.''

—ஜமை. அ. கதிர்வேல்.




## ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றுதான், அதன் ஒப்பற்ற 3-வழிச் செயலால் வியர்க்குருவை தடுக்கிறது, முறியடிக்கிறது.

OBM-2515 TM

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றில் தான், நிரூபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது—அது, மூன்று தீவிரமான வழிகளில் செயல் படுகிறது.

● **தடுத்தல்**

இதன் பாக்டீரியோஸ்டாடிக் செயல், பாக்டீரியா கிருமிகள் பெருகுவதை தடுக்கிறது.

● **நிவாரணம்**

சுகந்த மணமுள்ள ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், வியர்வையை உறிஞ்சுகிறது. இதமளித்து விரைவான நிவாரணம் தருகிறது.

● **செயல்**

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒப்பற்ற கெராடோலிடிக் செயல் உள்ளது: அது, பாதிக்கப்பட்ட சருமத்தை விரைவாக மாற மருவற்றதாக்குகிறது.






குடும்பம் முழுவதற்குமான பாதுகாப்பு

Johnson & Johnson

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்- வேர்க்குருவிலிருந்து உங்களுக்கு சிறந்த பாதுகாப்பு.

# பத்மினியின் கல்யாணம்

## ரமாமணி சுந்தர்

**கை**கொள்ளாமல் கல்யாணப் பத்திரிகையும், முகமெல்லாம் சிரிப்புமாக, துள்ளிக் குதித்தவாறு குதூகலத்துடன் அலுவலகத்திற்குள் நுழைந்தாள் பத்மினி. வரிசையாக ஒவ்வொரு மேஜைக்கும் சென்று தன் கல்யாண அழைப்பிதழைக் கொடுத்துவிட்டு, கடைசியாக மேனேஜரின் அறைக்குள் நுழைந்தவள் தன் ராஜிநாமாக் கடிதத்தையும், கல்யாணப் பத்திரிகையுடன் சேர்த்துக் கொடுத்தாள். இது பத்மினி எதிர்பாராத ஒன்று. அவளுக்கு வரப் போகும் கணவன் துபாயில் வேலையாக இருந்ததால், அவள் வேலைக்கு முழுக்குப் போடப் போகிறாள். இனி காலை பத்து மணியிலிருந்து மாலை ஐந்து மணி வரை டைப்ரைட்டரைக் கட்டிக் கொண்டு அழ வேண்டியதில்லை என்ற விடுதலை உணர்வுடன், ஆபீசுக்கு அன்று சீக்கிரமாகவே 'டா, டா' காண்பித்து விட்டு வீடு திரும்பினாள்.

வீட்டில் வரவேற்பு அறையில் ஆண்களும், பெண்களுமாக ஏகப்பட்ட பேர்கள் குழுமியிருந்தனர். அவர்களுக்கு நடுவில் பத்மினிக்குச் சீராக வாங்கி வைத்திருந்த எவர்சில்வர் பாத்திரங்கள், வெள்ளிச் சாமான்கள், புடவைகள், நகைகள் எல்லாம் வைக்கப்பட்டிருந்தன. பத்மினியை அவள் தாயார் கோமதியம்மாள் அவசர அவசரமாக எல்லோருக்கும் அறிமுகம் செய்து வைத்தாள். "இவர்கள் தான் உனக்கு வரப் போகும் மாமியார், மாமனார். இதோ மாப்பிள்ளையின் சித்தப்பா, சித்தி, மாமா, மாமி, அக்கா, அத்திம்பேர். எல்லோருக்கும் நமஸ்காரம் பண்ணு" என்று கூடவே ஆணையும் பிறப்பித்தாள்.

செய்தித்தாளில் வெளிவந்த விளம்பரத்தின் மூலமாக நிச்சயமாகியிருந்த வரன் இது. மாப்பிள்ளை சேகர் துபாயிலிருந்து சென்னைக்குப் போகும் வழியிலே, தில்லியில் ஒரு நாள் தங்கிப் பத்மினியைப் பெண் பார்த்து விட்டுச் சென்று விட்டான். அதனால் பிள்ளையைத் தவிர வேறு ஒருவரையும் பத்மினியோ, அவள் பெற்றோர்களோ, இதுவரையில் சந்திக்கவில்லை. கடிதப் போக்குவரத்தின் மூலமாக மற்ற விஷயங்கள் எல்லாம் தீர்மானித்திருந்தார்கள்.

பத்மினி விழுந்து விழுந்து எல்லோரையும் நமஸ்கரித்தாள். குழுமியிருந்த பிள்ளை வீட்டாரோ, பத்மினியின் சீர்செனத்தியைப் பார்ப்பதில் காட்டிய ஆர்வத்தில் ஒரு பத்து சதவீதம் கூட, பத்மினியைப் பார்ப்பதிலோ, அவளுடன் பேசுவதிலோ காண்பிக்கவில்லை. பத்மினி ஒரு வழியாக நமஸ்காரம் என்ற பெயரால் கிடைத்த தேகப்பயிற்சியை முடித்துக் கொண்டு, உடலுக்கு ஓய்வு கொடுப்பதற்காக அடுத்த அறையில் தஞ்சம் புகுந்தாள்.

"கல்யாண ஏற்பாடெல்லாம் எப்படி நடக்கிறது என்று பார்ப்பதற்காக, சம்பந்திகள் நான்கு நாட்கள் முன்பே புறப்பட்டு வந்திருக்கிறார்களாம்" என்று, அண்ணன் குமார் அவள் காதில் கிசுகிசுத்தான்.

"அதாவது அவர்கள் கொடுத்த லிஸ்ட்படி நாம் எல்லாம் வாங்கி இருக்கிறோமோ என்று செக் பண்ண வந்திருக்கிறார்களாக்கும்!" என்றாள் பத்மினி எரிச்சலுடன்.



சம்பந்திகள் நாசூக்குப் பார்த்துக் கொண்டு, ''பெண்ணிற்கு உங்களால் முடிந்ததைச் செய்யுங்கள்'' என்று சுற்றிவளைத்துப் பேசி வழவழா கொழகொழா விவகாரம் எல்லாம் வைத்துக் கொள்ளவில்லை. இரண்டாயிரம் ரூபாய்க்கு எவர்சில்வர் பாத்திரங்கள், ஐயாயிரம் ரூபாய்க்கு வெள்ளிச் சாமான்கள், இருபது பவுன் தங்கநகைகள், வைரத்தோடு, ஐயாயிரம் ரூபாய் ரொக்கம், நாத்தனார்கள் மூவருக்கும் பட்டுப்புடவைகள் பிள்ளைக்கு வைர மோதிரம் என்று பட்டியல் தயாரித்து அனுப்பியிருந்தார்கள். பெண் வீட்டாரும் பத்மினி ஒரே பெண் என்ற காரணத்தினால் பிள்ளை வீட்டாரின் லிஸ்ட்படி ஒன்று விடாமல் வாங்கி வைத்திருந்தார்கள்.

கட்டின வீட்டிற்கு நூறு குற்றம் என்று சொல்வது போல் தலைக்குத் தலை சீர்வரிசைகளைப் பற்றித் தங்கள் விமர்சனத்தை ஆரம்பித்தார்கள்.

''இது என்ன, தண்ணீர் ஜக் கொஞ்சம் கூட நன்றாகவே இல்லையே? ஆஸ்பத்திரி ஜக் மாதிரி இருக்கே? அழகா, மூக்கு வைத்து வாங்கக் கூடாதோ?'' எவர்சில்வர் தண்ணீர்க் குவளையைப் பார்த்துப் பிள்ளையின் மாமி செய்த விமர்சனம் இது.

பிள்ளையின் தாயாரும், தந்தையும்வெள்ளி சாமான்கள் ஒவ்வொருன்றையும் தூக்கிப் பார்த்து உத்தேசமாக எவ்வளவு எடை இருக்கலாம் என்று கணக்கெடுத்துக் கொண்டிருந்தார்கள்.

''புடவை ஒன்று கூடப் பார்வையாக இல்லையே?'' என்று அங்கலாய்த்தார் பிள்ளையின் மாமா. புடவைகளை இவர் கட்டிக் கொள்ளப் போகிறாரா, அல்லது தான் கட்டிக் கொள்ளப் போகிறோமா என்று பத்மினிக்கு உண்மையிலேயே சந்தேகம் வந்து விட்டது.

எல்லாச் சீர்வரிசைகளையும் சீர் தூக்கிப் பார்த்து முடித்த உடன், ஒருவருக்கொருவர் கசமுச என்று பேசிக் கொண்டார்கள்.

கல்யாணப் பிள்ளையின் தந்தை சாம்பசிவம் ஏதோ மேடைப் பிரசங்கம் செய்பவர்போல் தொண்டையைச் செருமிக் கொண்டு பேசத் துவங்கினார். ''நீங்க வாங்கியிருக்கிற சீர், செனத்தியெல்லாம் கொஞ்சம் கூடப் போதாது. டில்லி வரை போய்ப் பெண் எடுத்து, நன்னா இப்படி ஏமாந்து போய் வந்தேள் என்று எல்லாரும் எங்களைப் பார்த்துச் சிரிக்கப் போறா.''

''என்ன இப்படிச் சொல்றேள்? நீங்க அனுப்பின லிஸ்ட்படி ஒன்று விடாமல் வாங்கிவைத்திருக்கிறோமே?'' என்று பத்மினியின் தந்தை கணேசன் கேட்டார்.

''லிஸ்ட் என்னய்யா, லிஸ்ட்? லிஸ்ட் அனுப்பின பொழுது எங்களுக்கு ரேட் என்னன்னு சரியாத் தெரியலை. நீங்களும், நன்னா ஏமாந்த தலையில மிளகாயை அரைக்கலாம் என்று பார்த்தேள். எங்க பிள்ளை துபாயில ஆயிரம் ஆயிரமா சம்பாதிக்கக் கொட்டறான். அவனுக்கு இதுவா ரேட்? உங்க கிட்ட வாக்குக் கொடுத்துட்டோமே என்று பார்த்தேன். மெட்ராஸிலே அவனவன் முப்பது சவரன் நகையும் பத்தாயிரம் பதினைய்யாயிரம் ரொக்கமும்கொடுக்கக் க்யூ நிக்கறான்'' என்று படபடவென்று பொரிந்து தள்ளிவிட்டுத் துண்டை உதறித் தோளில் போட்டவாறு எழுந்தார் சாம்பசிவம்.

''சொல்றதைக் கொஞ்சம் புரியும்படியாகச் சொன்னால் தேவலை. உங்களுக்குக் குறை ஏதாவது இருந்தா எங்களால் முடிந்த வரை நிவர்த்தி பண்ணப் பார்க்கிறோம்'' என்று கோமதியம்மாள் தாழ்மையுடன் கேட்டுக் கொண்டாள்.



''இன்னும் பத்து சவரன் நகை போடணும். அப்பத்தான் எங்களுக்கு நாலு பேரிடம் சொல்லிக்கக் கௌரவமாக இருக்கும். இத்தனை பேரும் டில்லி வரை புறப்பட்டு வந்திருக்கோம். ஆக்ரா, ஜெய்ப்பூர் எல்லாம் சுற்றிப் பார்த்து விட்டுப் போவதற்கு என்ன செலவாகும்? இன்னும் ஐயாயிரம் ரூபாயைக் கீழே வைத்தால் தான் இந்தக் கலியாணம் நடக்கும்!'' என்று அதிகாரம் தூள் பறக்க உத்தரவிட்டாள் பிள்ளையைப் பெற்ற புண்ணியவதி.

கோமதியம்மாளும், கணேசனும் குழம்பிப் போய்க் கையைப் பிசைந்து கொண்டு நின்றார்கள்.

''எங்களுக்கு ஒரே பெண் என்பதால் எங்க சக்திக்கு மேலே செலவு பண்ணியிருக்கோம். இப்ப கலியாணத்துக்கு நாலு நாள் முன்னாலே வந்து திடீர்னு இப்படிக் கேட்டா, என்ன பண்ணறது?''

ஹாலில் நடந்த நாடகத்தை இதுவரை பொறுமையாகக் கவனித்துக் கொண்டிருந்த குமார், உள்ளே வந்த தந்தையின் மேல் பாய்ந்தான்.

''என்ன அநியாயம் இது! கல்யாணம் என்ன கத்தரிக்காய், வாழைக்காய் வியாபாரமா?''

பத்மினியோ, அதற்கு ஒரு படி மேல் போய், ''என்னைக் கேட்டால், எனக்கு இந்த வரனே வேண்டாம் என்பேன். இந்தக் கல்யாணத்தை இப்பவே நிறுத்திடுங்கோ'' என்று ஒரேயடியாகக் கூச்சல் போட்டாள். தந்தை கணேசனோ ''என்னடீ, பத்மினி! இப்படி உளர்றே! ஊரெல்லாம் பத்திரிகை முதற்கொண்டு கொடுத்தாச்சு. இப்ப கல்யாணத்தை நிறுத்தினா, நாலு பேர் நாலு விதமா பேச மாட்டாளா?'' என்று ஊர் வாய்க்கு பயந்தார்.

''நாலு பேர் பேசுவா என்பதற்காக இப்படிப்பட்ட மட்டமான குடும்பத்தில நான் மாட்டிண்டு முழிக்கணுமா? நாளைக்கு என்னை இவர்கள் கொடுமைப்படுத்தினால், அந்த நாலு பேர் என் உதவிக்கு வருவாளா?'' என்று பத்மினி ஒரேயடியாகப் பிடிவாதமாகப் பேசவும், அவள் அண்ணன் குமாரும் அவள் கட்சியில் சேர்ந்து கொண்டான்.

ஹாலில் நுழைந்த குமாரைப் பார்த்தஉடன் பிள்ளையின் தந்தை சாம்பசிவம் ஆவலுடன், ''என்ன முடிவு பண்ணினேள்?'' என்று நீட்டி முழக்கினார்.

குமாரோ, இளைய தலைமுறையினருக்கே உள்ள துணிச்சலுடன், கொஞ்சம் கூடத் தயக்கம் இல்லாமல், ''இந்தக் கல்யாணத்தை நிறுத்திடலாம் என்று தீர்மானம் பண்ணியிருக்கிறோம்'' என்று சொன்னவுடன் எல்லோருக்கும் ஒரே அதிர்ச்சி.

''என்ன விளையாடறேளா? கல்யாணத்துக்கு நாலு நாள் இல்லை. இப்ப கல்யாணத்தை நிறுத்தினா, உங்க பெண்ணைப் பார்த்து ஊரே சிரிக்கப் போறது. அதைக் கொஞ்சமாவது நினைச்சுப் பார்த்தேளா? உங்க பொண்ணுக்கு இனிமேல் இந்த ஜென்மத்திலே கல்யாணம் ஆகாது'' என்று

ஏதோ சாபம் இடுபவர் போல் கையையும், காலையும் ஆட்டிக் கொண்டு ஆர்ப்பாட்ட மாகக் கத்தினார் பிள்ளையின் சித்தப்பா.

''என் தங்கை கல்யாணத்தைப் பற்றி நாங்க கவலைப்பட்டுக்கறோம். நீங்க நடந்து கொண்ட விஷயத்தை நாலு பேரிடம் சொன்னால், பெண்ணைப் பெற்றவர்கள் எல்லாம் உங்க வீட்டு வாசற்படியை மிதிக்கவே பயப்படுவார்கள்'' என்று குமாரும் விடாமல் வாதாடினான்.

அதிர்ச்சியிலிருந்து விடுபட்ட பிள்ளையின் தந்தை தம்மை ஒருவாறு சமாளித்துக் கொண்டு, ''நாங்க இத்தனை பேரும் மெட்ராஸிலேந்து புறப்பட்டு வந்திருக்கோம். கையிலேந்து ஏகப்பட்ட பணம் செலவு பண்ணியிருக்கோம். இதுக்கெல்லாம் நஷ்டஈடு கேட்டு இப்பவே வக்கீல் நோட்டீஸ் அனுப்பப் போறேன்'' என்று தைதையென்று எகிறிக் குதித்தார்.

''வக்கீல் நோட்டீஸா? பேஷ்! அவ்வளவு தூரத்திற்குப் போய் விட்டேளா? நீங்க சீர், வரதட்சிணை என்று ஒரு பெரிய லிஸ்ட் அனுப்பினேளே? அதைக் காட்டினால் அத்தனை பேரும் குடும்பத்தோடு கம்பி எண்ணுவேள்! ஜாக்கிரதை!''

வாசல் வராந்தாவில் நின்று கூடிக்கூடி பத்து, பதினைந்து நிமிடங்கள் அவர்களுக்குள் பேசிக் கொண்டார்கள். பிள்ளையின் அக்காவும், அத்திம்பேரும் மறுபடியும் உள்ளே நுழைந்து, தயங்கித் தயங்கிப் பேச்சைத் துவங்கினார்கள்.

''இப்ப நடந்ததையெல்லாம் , மறந்துடுவோம். நீங்க மேற்கொண்டு சீர் ஒண்ணும் கொடுக்க வேண்டாம். முதலில் பேசினபடியே எல்லாம் செய்து விடுங்கள்'' என்று இறங்கி வந்தார்கள்.

நடந்த கலாட்டாவினால் அலுத்துச் சலித்துப் போயிருந்த பத்மினி, இனியும் இந்த நாடகத்தைச் சகித்துக் கொள்ள முடியாத நிலையில்,

''இந்தப் பேரம் பேசற குணம் உங்களை விட்டுப் போகாதா? தயவு செய்து எல்லோரும் போய்ச் சேருங்கள்'' என்று கையெடுத்துக் கும்பிட்டாள்.

குமாரோ ஆத்திரம் தாங்காது ''மரியாதையா இப்பவே இந்த இடத்தை விட்டுப் போறேளா? இல்லே, போலீசுக்கு ஃபோன் பண்ணவா?'' என்று கூப்பாடு போடவும், எல்லோரும் ஊரைப் பார்த்து ஓட்டம் பிடித்தார்கள்.

தன் கல்யாணம் நின்று போய்விட்டதே என்ற வருத்தமோ, அவமானமோ துளிக்கூட இல்லாமல், ஒரு பெரும் ஆபத்திலிருந்து தப்பிய உணர்வுடன் பத்மினி தொலைபேசியில் மேனேஜரைக் கூப்பிட்டுத் தன் ராஜிநாமாவை ஏற்றுக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொண்டாள். அப்படியே, நண்பர்கள், உறவினர்கள் எங்களைச்சுற்றி ஒரு விதப் பாதிப்பும் இல்லாமல், தன் கல்யாணம் நின்று விட்ட செய்தியைத் தெரிவிக்க ஆரம்பித்தாள். குமார் இடிந்து போய் உட்கார்ந்திருக்க தன் பெற்றோர்களைத் தைரியம் சொல்லித் தேற்ற ஆரம்பித்தான்.

# நடிகர்திலகம் என்ன

○ ஆர். அரிகோபி, ருடியாத்தம்.

? பாலு மகேந்திராவின் நீங்கள் கேட்டவை வெற்றி பெறுமா?

! மூன்றும் பிறை முழுமதியாக வளர வேண்டும் என்பதே நம் விருப்பம். இந்தக் கவலை அவருக்கும் இல்லாதுபோகாது. பார்ப்போம்.

○ ஆர். அப்துல் சலாம், திருச்சி 20.

? தூக்கிலிடப்பட்ட மக்பூல் பட்டை தியாகி என ஜியா வர்ணித்துள்ளாரே?

! காஷ்மீர் விடுதலை முன்னணியை அமைத்து, கொலை, கொள்ளைகள் நடத்தி பயங்கர வன்முறைவாதியாகத் திகழ்ந்த பட், ஜியா பார்வையில் தியாகியானதில் வியப்பில்லை. ஈழத் தமிழரில் புலிப்படை அமைத்தவர் நமது பாராட்டுக்குள்ளாகவில்லையா! ஏன் நேதாஜியே கூட பிரிட்டிஷார் பார்வையில் துரோகி, நம் நோக்கில் தியாகி அல்லவா!

○ எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? ஜனதா தலைவர் தேர்தலில் சந்திரசேகரை எதிர்த்துப் போட்டியிடப் போவதாக சுப்பிரமணிய சுவாமி அறிவித்துள்ளாரே?

! ''ஏகமனதான'' தேர்வு என்று பாவலா பண்ணுவதை விட நேரடி மோதல் நல்லது. கட்சிக்குள் ஜனநாயகம் வளர்ந்து பலப்படும். ஆனால் தோற்றவர் மனம் குமையாமல் வென்றவருக்குப் பூரண ஒத்துழைப்பை உறுதிப்படுத்த வேண்டும். இந்தப் பண்பைக் காட்டவில்லையென்றால் கட்சி பலவீனப்பட்டுப் போகும்.

○ சி. ஆர். நாகராஜன், வளவனூர். ★

? ஒரு பத்திரிகை ஆசிரியர் துணிச்சல் மிக்கவர் என்பதை எதன் மூலம் அறிய முடியும்?

! அடிக்கடி அவர் பேனாவால் தாக்குதலுக்கு உள்ளாகிற ஒரு தலைவரை சமய சந்தர்ப்பம் வரும்போது வாழ்த்தவும் துணியும் போது.

○ வெ. கோபால், மாதேமங்கலம்.

? முழுநேர அரசியலில் ஈடுபடப் போகும் நடிகர் திலகம் திரையுலகை என்ன செய்யப்போகிறார்?

! திரையுலகு அவரை விட்டு விடத் துணிவதற்கு முன்னால் இவர் திரையுலகை விட்டு விட முடிவு செய்தது புத்திசாலித்தனம். முழு நேர அரசியலில் இறங்கி இ. காங்கிரஸைத் தமிழகத்தில் பலப்படுத்த முன்வருவதையும் வரவேற்கலாம். ஆனால் அதை எம். ஜி. ஆருக்குப் பக்க வாத்தியம் வாசிப்பதன் மூலம் சாதிக்க முடியாது. என்னதான் மிருதங்கச் சக்கரவர்த்தியாக இருந்தாலும்கூட.

○ ஆ. சந்திரசேகரன், லால்குடி.

? என். டி. ராமராவ் லஞ்சத்தை ஒழிப்பதில் அதிக கவனம் செலுத்துகிறார் போலிருக்கிறதே?

! சந்தோஷம். ஆனால் பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காய் முடியாமலிருந்தால் சரி. ராமச்சந்திர ராவைப் பதவி நீக்கம் செய்த முறையில் சாமர்த்தியம், சாணக்கியம் எல்லாமே வேதண்டி.

○ வலங்கை ஜி. ராஜசேகரன்.

? இந்தியா வெளிநாடுகள் உதவியின்றிப் பொருளாதாரத் துறையில் தன்னால் இயங்க முடியுமா?

! அப்படி இயங்க அவசியம் இல்லை. வெளிநாடுகளின் உதவியைப் புத்திசாலித் தனமாகப் பயன்படுத்திக் கொள்ளும்போது தான் துரிதமாக முன்னேற இயலும். அந்தப் புத்திசாலித்தனத்துக்குத்தான் பஞ்சம்.

○ சிவஞானமுருகன், ஸ்ரீவைகுண்டம்.

? அரசாங்க விழா அழைப்பிதழ்களில் எம்.ஜி.ஆர். பெயர் அனாவசியமாக நுழைக்கப்படுவது ஏன்?

! புரட்சித் தலைவர் புரட்சித் தலைவர் என்று சொற்பொழிவிலோடே எட்டுத்தரம் சொல்கிறவர்கள் அழைப்பிதழிலும் தான்



○ செனட் உறுப்பினர்



○ வளர்பிறை



○ முழுநேர அரசியல்



○ லஞ்ச ஒழிப்பு



# செய்யப்போகிறர்?

போட்டு விட்டுப்போகட்டுமே. அவரை விட்டால் நாங்கள் இல்லை என்பதை ஒப்புக்கொள்கிறார்கள்.

○ எஸ்.அருளானந்தம், காரைக்கால்.
? பூர்ணிமா ஜயராச்சே, மடிசாரைக் காணுேமே?
! மடிசார் கட்டின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காக அதை ஒதுக்கி இருக்கலாம்.

○ எம். ஸ்ரீதரன், விருத்தாசலம்.
? சத்துணவால் இளம் பிள்ளை வாதம் நீங்காது என்று முதல்வரே ஒப்புக்கொண்டிருக்கிறரே?
! ரொம்ப சரி, மெச்சுகிறோம். தமிழகச் செய்திப் படத் துறை இனியேனும் நிதானம் காட்டட்டும். இதன் மறுபுறமாகச் சத்துணவால் புதிய வியாதிகள் வராமல் எச்சரிக்கை வாழ்நாளெக்கும் அங்கஹீனராக்கிவிடும்!

○ டி. ஆர். நாகராஜன், வளவனூர்.
? இந்தியா பங்களாதேஷ் எல்லையில் 500 கோடி செலவில் மத்திய அரசு முள்வேலி அமைக்க இருப்பது குறித்து?
! அதிர்ஷ்டசாலிகளான காண்டிராக்டர்களும் சில அதிகாரிகளும் அரசியல்வாதிகளும் ஆதாயம் பெறுவர். ஆனால் இந்தியா பங்களாதேஷ் நல்லுறவில் வேலி முள்ளாகத்தான் குத்தும். அகதிகளை இதனால் தடுத்து விட முடியாது.

○ கே. டி. சிவராமன், மணமேல்குடி.
? திருநாவுக்கரசையும் பொன்னையனையும் இலாகா மாற்றம் செய்துள்ளது பற்றி?
! கையிலுள்ள சீட்டுக்களை இடம் மாற்றி வைப்பதால் ஜோக்கர் விடுதலையாகி வேறு செட்டில் சேர வாய்ப்புண்டு. ஆனால் வந்து சேர்ந்த சீட்டுக்கள் எல்லாமே மோசமாயிருந்தால் இடம் மாற்றி என்ன பயன்? மடித்துப் போட்டு விடுவதே மேல்!

? பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் ஜெயலலிதா பற்றி பரீட்சைக்குக் கேள்வி கேட்டதில் என்ன தவறு என்று அமைச்சர் கேட்கிறரே?
! ஒரு தவறும் இல்லை. சிவசங்கரியை செனட் உறுப்பினராகப் போட்டதிலும் தவறில்லை. எம்.ஜி.ஆரை மகிழ்விப்பது எப்படி என்று மணிசுந்தரம் ஒரு புத்தகம் எழுதி அதைத் தம் பல்கலைக் கழகத்தில் பாடப் புத்தமாக வைத்தால் அதிலும் தவறே இல்லை.

○ க. தியாகராசன் நெய்வேலி.
? மீண்டும் மதுவிலக்கு அமல் படுத்தப்படும் என்றஅமைச்சர் எஸ். டி. எஸ். ஸின் கூற்று....?
! குடித்து விட்டு உளறுகிறவர்களே தேவலாம் என்றாகி விட்டது தமிழக அரசின் மதுவிலக்குக் கொள்கையைப் பார்க்கையில்.

○ த.சத்திய நாராயணன், அயன்புரம்.
? லோன்பப்படி சுவைத்ததுண்டா?
! சுவைத்தால் 'வீட்டுக்குப் போய் கணக்குச்சொல்ல வேண்டுமே' என்று கவலைப்படுகிறவர்கள் ஒரு பார்ஸல் கொண்டு சென்றால் சமாளிக்கலாம் என்பது தவிர இன்னொரு வசதி: மனைவி பொட்டலத்தைப் பிரிக்கும் போது ''ஒரு விள்ளல்'' என்று முனை கிள்ளி மறுபடி சுவைக்கலாம்!


○ மீண்டும் மதுவிலக்கு!


○ சும்மா விட மாட்டேன்!


○ வர்ணனை சரியா?


○ மடிசார் எங்கே?

யாக இருக்க வேண்டும். உதாரணமாக வட மாநிலங்களில் கேசரி பருப்பு ஏகப்பட்ட துன்பம் விளைவித்து வருகிறது. அந்தப் பருப்பு இங்கும் கலப்படமாவதாகக் கேள்விப்படுகிறோம். கேசரிப் பருப்பில் குற்றமில்லை. ஆனால் அதில் வெகு சீக்கிரம் ஒரு நச்சுக் காளான் படர வாய்ப்புண்டு. அது உண்போரை

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
டி. ஆர். நாகராஜன்,
25, வடக்கு அக்கிரஹாரம்,
வளவனூர் 605108.



## வட்டமேஜை

● கல்கி 19.2.84 இதழில் அரசு மருத்துவமனைகளைப் பற்றிய செய்திகளைப் படித்ததும் 1980 நவம்பரில் எனது தகப்பனார் ராயப்பேட்டை மருத்துவமனையில் சிறு நீரகக்கோளாறுக்காகச் சேர்க்கப்பட்டபோது நடந்த நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. எல்லாமே இலவசம் என்று பெயருக்குத்தானே தவிர ஒவ்வொன்றுக்கும் ''வெள்ளையப்பன்'' இல்லாமல் ஒன்றுமே நடக்கவில்லை. (வாயிற்காப்போனுக்குச் சில்லறை வெட்டி உள்ளே போவதிலிருந்து டாக்டரைத் தனியாகக் கவனித்து ஆபரேஷன் முடிப்பது வரை!) ஆபரேஷன் முடிந்து திரும்ப 'ஸ்ட்ரெச்'சரில் போட்டுத் தள்ளிக் கொண்டு வருகிற ஆட்கள் மயக்க நிலையில் இருக்கும் என் தந்தையிடமே ''ஐயரே! எங்களுக்குப் பத்து பத்து ரூபாய் கொடுக்கணும் இல்லாட்டி 'பெட்'லே போட மாட்டோம். கீழே போட்டுடுவோம்'' என்று மிரட்டியிருக்கிறார்கள். கூட ஓடி வந்த என் தாயார் அவர்களைக் கெஞ்சி 'பெட்'டில் போடவைத்து ''என் மகன் டாக்டரிடம் பேசி விட்டு வந்ததும் உங்களுக்குப் பணம் தருவேரும்'' என்று நான்வந்ததும் அவர்களுக்குப் பத்து ரூபாய் கொடுத்த பிறகே அவர்கள் போனார்கள்.

மயிலாடுதுறை—1.

கே. ரகுபதி.

● 19.2.84 இதழில் 'நகர் வலம்' பகுதியில் டெல்லி கணேஷ்தான் முதல்முறையாக மேடையில் இரட்டை வேடம் போடுவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. என் மூத்த சகோதரர் திரு.கே. கே. ராமன் எழுதிய 'இப்படியும் நடக்குமா?' என்ற நாடகத்தில் முதன்முதலாக இரட்டை வேடம் ஏற்றுக் கதாநாயகனாக நடித்தவர் திரு. எஸ். ஜி. ஈஸ்வர்.

சென்னை—10

கே. சீனிவாசன்.

● பாலாவுக்கு அஞ்சலியில் மனம் உருகியது. கடைசிப் பத்தியில் அமரர் கல்கி அவர்களின் ஒரு கருத்தை மிக அழகாகக் கையாண்டிருக்கிறீர்கள்.

ஆனால் அந்தக் கருத்து இடம் பெறும் கதை





''சிவகாமியின் சபதம்'' அல்ல. 'வீணை பவானி.'

சென்னை—87

என். சீனிவாசன்.

● நகர்வலம் பம்பாய் ஸ்பெஷலில் ''மற்றவர்களை முந்திக் கொண்டு சுப்பிரமணிய சிவா நூற்றாண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடியது பம்பாய்த் தமிழ்ச் சங்கம்'' என்று தவறுதலாகப் பிரசுரித்திருக்கிறீர்கள். முதன் முதலில் 28.1.84—ல் கொண்டாடிய அமைப்பு பம்பாயிலுள்ள செம்பூர்த் தமிழ்ச்சங்கமே!

பம்பாய்.

எஸ்.பி. சுப்பிரமணியன்

● எங்கள் ஊர் 'ராஜாஜி மருத்துவமனை'க்குள் செல்லும் எவரும் தங்கள் மூக்கைப் பிடித்துக் கொள்ளத் தவறுவதில்லை! அந்த அளவுக்கு அசுத்தங்கள் அங்கே விரவிக் கிடக்கின்றன! அதனைக் கண்டித்து எழுதிய வாசகர்கள் கடிதங்கள் கூட நாளிதழ்களில் பிரசுரமாகியிருக்கின்றன! நடவடிக்கை எடுத்ததாகத் தெரியவில்லை! இதனையும் தாங்கள் ஆய்வுக் கட்டுரையில் சுட்டிக் காட்டியிருக்கலாம்...!

மதுரை-1 பி.எல்.பரமசிவம்

● என் போன்ற நடுத்தர வர்க்கம் அரசு ஆஸ்பத்திரிகளை நம்பித்தான் செல்ல வேண்டியிருக்கிறது. கண்ணால் காணாத எமனை ஏய்த்து விடலாம் போலிருக்கிறது. இந்த ஆஸ்பத்திரி எமன்களிடமிருந்து தப்பிப்பது எப்படி?

பட்டுக்கரம்—3

பி. நெடுஞ்செழியன்.

● நடுப்பக்க ''ருஷ்யச்'' சிரிப்புக்களைப் படித்து முடித்ததும் என்னால் சிரிப்பை அடக்க முடியவில்லை. கவா''ரஷ்ய''மாக இருந்தது!

மே. மாம்பலம்

எஸ்.மோகன்.

● கோயில் யானைகளை யானைப் பாகர்கள் பிச்சை எடுக்கவும் வித்தைகள் செய்யவும் பயன்படுத்துகிறார்கள் என்பதை நினைக்கும் போது மனம் மிகவும் வருத்தப்படுகிறது. சில வாரங்களாகத் தொடர்ந்து (குரங்கைக் குரங்காட்டி ஆட்டிப் படைப்பதுபோல்) யானையை யானைப்பாகன் மாம்பலம் பஸ் நிலையம் எதிரே ஆட்டி வைப்பதை நேரில் கண்டேன். வேதனையடைந்தேன்.

சென்னை—5

எஸ்.வி.ராஜசேகர்

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)

# இதயமே இல்லையா?

## உண்மைக் கதை

# பகிரங்கமாய்த் திரியும் பயங்கரவாதிகள்



✕ எஸ். எம். சண்முகம்

உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு பஞ்சாபிலிருந்து தப்பினால் போதும் என்று திரும்பி வந்தவர் பேசுகிறார்.

"அமைதியாகப் போய்க் கொண்டிருந்தன நாட்கள். திடுமென்று ஒரு திருப்பம் — திகிலுடன் நாட்களை ஓட்ட வேண்டிய நிலை.

"டி. வி. எஸ். ஸில் வேலை பார்த்து ஓய்வு பெற்ற நான் அவர்கள் செய்த சிபாரிசினால் போனவருடம் பஞ்சாபிற்குப் போனேன். 'மாலவுட்'டில் உள்ள டயர் ரீடிரெட்டிங் கம்பெனி எனக்கும், என் இரண்டு பிள்ளைகளுக்கும் நல்ல சம்பளத்தைக் கொடுத்து வாழ்வளித்தது.

"நான் போன நாளிலிருந்தே அங்கே அவ்வப்போது கலவரங்கள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. ஆனால் இப்போது இரண்டு வாரங்களாக மிக அதிகமாகி விட்டது. ரோடில் நடக்கவே பயமாக இருக்கிறது. யாரை எந்த நேரத்தில் சுடுவார்கள் என்றே தெரியாது. அகாலிகள் கத்தி, வேல், பெரிய பட்டாக்கத்தி, ரிவால்வர் என ஆயுதங்களைப் பகிரங்கமாக வைத்துக் கொண்டு திரிகிறார்கள். எந்தச் சட்டமும் அவர்களைத் தடுப்பதில்லை.

"தனி நாடு கோரும் அவர்களின் கோபம் இப்போது இந்துக்களின் மீது திரும்பியிருக்கிறது. போன வாரம் பாட்டாலாவிலிருந்து அமிர்தசரஸ் போகும் பஸ் ஒன்றில் இவர்கள் ஏறியிருக்கிறார்கள். இருந்த சீக்கியர்களைத் தனியாக்கி விட்டு மற்றவர்களை வரிசையாக நிறுத்தி வைத்திருக்கிறார்கள். அவர்களில் இரண்டு பேர் கிறிஸ்தவர்கள். சிலுவையைக் காட்டியவுடன் அவர்களை விட்டு விட்டு மீதியிருந்த ஐந்து இந்துக்களையும் குருவியைச் சுடுவது போலச் சுட்டு விட்டார்கள். இது ஒரு உதாரணம்தான். இது போல வெளியுலகிற்குத் தெரியாமல் எத்தனையோ நடந்து கொண்டிருக்கின்றன.

"ரோடில் நாய், ஆடு போல மனிதரின் பிணம் கிடந்தால் விசாரணையே கிடையாது. மேலேயே பஸ்களும், கார்களும் ஓடிச் சப்பையாகி மண்ணோடு மண்ணாக வேண்டியதுதான்.

"அகாலிகளின் நோக்கமே எந்தவொரு வேலையும் நடக்கக் கூடாது. அவ்வளவுதான். எங்கள் ஃபேக்டரிக்கு இரண்டு மூன்று முறை வந்துமிரட்டினார்கள். அவர்கள் வரும் நாட்களில் எல்லாம் விடுமுறை விட்டு விடுவார்கள். ஆனால் ஒவ்வொரு தொழிற்சாலையும் அவர்களின் தொல்லை தாங்க முடியாமல் மூடியது போல, எங்களின் தொழிற்சாலையையும் கடைசியில் ஒருநாள் மூடி விட்டார்கள்.

"இனி அங்கு என்ன செய்வது? ஆனால் தனியாகக் கிளம்பவும் பயமாக இருந்தது. ரோடில் நடக்கவே பயம். அதனால் சென்னைக்குப் . பணத்திற்காகத் தந்தி அடித்துவிட்டு, தினமும் போஸ்டாபீஸுக்கு, இரண்டு மூன்று பேராகச் சேர்ந்து போவோம். ஒருவர்



செத்துப் போனால்கூட மற்றவருக்குத் தகவல் தெரியுமல்லவா? அதற்காகத்தான்.

''கம்பெனியை மூடி விட்ட பிறகு நாங்கள்அங்கு கழித்த ஐந்து நாட்களும் பயங்கரமானவை. அகாலிகள் முதலாளியாக இருக்கும் தொழிற்சாலைகளை அவர்கள் ஒன்றும் செய்வதில்லை. அப்படிப்பட்டஇடத்தில், ஒரு கம்பெனியின் குவார்ட்டர்ஸில் என் இரண்டு மகன்களைஒளித்து வைத்தேன்.

''நாளுக்கு நாள் நிலைமை தீவிரமாகிக் கொண்டுதான் வருகிறது. பஞ்சாப் டிரான்ஸ்போர்ட் பஸ்களில் கும்பல் கும்பலாக இவர்கள் ஏறி 'டாப்'பில் போய் நின்று கொள்வார்கள். டிக்கெட் என்ற பேச்சே கிடையாது. பஸ்ஸிற்குள் மூச்சு முட்டும் கூட்டம். 'டாப்'பில்ஐம்பதிலிருந்து நூற்றுக்குக்குறையாத ஆயுதம் தாங்கிய கூட்டம். ரயில்களை நினைத்தால் கவிழ்க்கிறார்கள். மோத விடுகிறார்கள். சமீபத்தில் நடந்த ரயில் விபத்தில் நாற்பதுக்கும் மேல் இறந்து கிடந்த பிணங்களை என் கண்ணால் பார்த்தேன். ஆனால் வெளியில் பதினெட்டு பேர் என்ற செய்திதான் வந்தது. இது தவிர கவலைக்கிடமாக இருந்தவர்களில் எத்தனை பேர் இறந்தார்களோ தெரியாது. கைகால் ஊனமுற்றவர்கள் நூற்றுக்கணக்கில்.

''ஆக, சீக்கியர் அல்லாதாருக்கு – அங்கு எந்தப் பாதுகாப்பும் இல்லை. அலுவலகத்திலோ அண்டை அயலாரோ யாரும் பாதுகாப்புத் தரத் தயாராக இல்லை. எனவே இங்கே எப்படியாவது பிழைத்துக் கொள்ளலாம் என்றுதான் வந்தோம்–

''உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஜி. டி. யில் சென்னைக்கு வந்தால் அன்று இங்கு 'பந்த்'–

''இங்கு ஆட்டோக்காரர்களும், டாக்ஸிக்காரர்களும் கட்டணம் என்ற பெயரில் கொள்ளையடித்தனர்!''

என். எம். ஷண்முகம் கூறக்கேட்டு எழுதியவர்:

–மங்களா ரமேஷ்

# மீண்டும் திலீப்குமார்

● பத்திரிகை ஆசிரியர் பதவி என்பது சொகுசானதல்ல – பல எதிர்ப்புக்களையும் இடர்ப்பாடுகளையும் தாங்கக் கூடிய தனிச் சக்தி அதை வகிப்பவருக்குத் தேவை. இந்தச் சக்திகளைப் பெருமளவில் உடையவர் பத்திரிகை ஆசிரியர் விநோத்குமார் மல்ஹோத்ரா. நாட்டில்மலிந்து கிடக்கும் அநீதிகளை ஒழிக்க முற்படும் விநோத்குமார் தம் முயற்சியினிடையில் வர்த்தன் என்ற பசுத் தோல் போர்த்திய புலியைச் சந்திக்க நேர்கிறது. தன் சமுதாய அந்தஸ்தைத் தான் செய்யும் அட்டூழியங்களுக்குக் கவசமாய்ப் பயன்படுத்தும் வர்த்தனைத் திருத்த முயல்கிறார் பத்திரிகை ஆசிரியர். முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டும் என்ற அதீத முடிவிற்கு வந்து தானும் வர்த்தனின் உலகிற்குள் நுழைந்து அவன் நிலைக்குத் தன்னைத் தாழ்த்திக் கொள்கிறார். கயவர்களைச் சிக்க வைத்துத் தான் தப்பித்துக் கொள்ளப் பிரயத்தனப்படுகிறார். அம்முயற்சியில்உயிர் இழக்கிறார்.

நன்மை செய்ய வேண்டுமானால் பாவமூட்டையைச் சுமப்பதில் தவறில்லை என்கிற கேள்விக்குரிய தத்துவத்தை விளக்க [illegible] ''மாஷால்'' திரைப்படத்தின் கதை. விநோத்குமாராக நடிக்கும் பழம் பெரும் நடிகர் திலீப்குமார் தம் அபார நடிப்பால் இப்படம் ஓர் உணர்ச்சிக் காவியமாய் உருவாக உதவியுள்ளார்.

தெ.மு.ரா.



# பாம்பே டையிங்

## சினி ப்ளிட்ஸ்

# ஸ்டார் போட்டி

## ரூ.1கோடிக்கும் மேல் பரிசுகள் வெல்லுங்கள்.

## வெல்வதற்கு 60,000 பரிசுகளுக்கும் மேல்.



25 அம்பாஸடர் கார்கள்



100 நெல்கோ கலர் டிவி செட்கள்



100 ஸ்கூட்டர்கள்



100 கோத்ரெஜ் 165 லிட். ரெஃப்ரிஜிரேட்டர்கள்

**வெல்வது எப்படி**

நுழைவுத்தாளின் மேல் 12 பிரபல சினிமா நட்சத்திரங்களின் புகைப் படங்கள் தரப்பட்டுள்ளன. 12 சினிமா நட்சத்திரங்களிலிருந்தும் 10 பேரை மட்டுமே தேர்ந்தெடுத்து, உங்கள் கருத்துப்படி பிரபலத்தின் அடிப்படையில் அவர்களை வரிசைப் படுத்தி, ஒரு விளம்பர வாக்கியத்தினை நிரப்பவும்.

முழு விவரமும், நுழைவுப் படிவமும் பெற, உங்கள் பாம்பே டையிங் ரீடெயில் ஸ்டாக்கிஸ்டினை அணுகவும்.

**விரைவீர்!**
**போட்டி மிதமான காலத்திற்கு மட்டுமே.**

250 ஸுமீத் மிக்ஸர்கள்.
1000 எச்எம்டி ரஜத் கைக்கடிகாரங்கள்
14,000 பாம்பே டையிங் பாலியெஸ்டர் ஷர்ட் பீஸ்கள்.
20,000 பாம்பே டையிங் டவல் செட்கள்.
20,000 சினி ப்ளிட்ஸ் ஆண்டுச் சந்தாக்கள்.

25 பரிசுகள்!
பம்பாயில், பிரபல நட்சத்திரங்கள்
பங்கேற்கும் படப்பிடிப்
பினைக் கண்டுகளிக்க, 2 பேருக்கான 2 நாள்
செலவுகளுடன், வசதி.

முதல் 5,000 நுழைவுகளுக்கு 5000 சினி
ப்ளிட்ஸ் ஆண்டுச் சந்தாக்கள்

இந்தியாவின் பிரபல நட்சத்திரம்
1-வதாக வாக்களிக்கப்படும் சினிமா நட்சத்திரத்திற்கு,
முழுதும் வெள்ளியாலான மகத்தானதொரு
டிரோஃபியினை வழங்கும் பாம்பே டையிங்.

# பாம்பே டையிங்

HTB-BDM-1036

புதுமையாய் ஏதாவது செய்யப் போய் பாக்ஸ் ஆஃபீஸில் கரியைப் பூசிக்கொள்ள எஸ். ஏ. சந்திரசேகரன் தயாராயில்லை. சட்டம் ஒரு இருட்டறை என்று மறுபடியும் சாட்சியோடு சொல்கிறார்.

# வெற்றி

பந்தயம் கட்டுவதில் மகா சீரியஸ் இளைஞனாய் விஜய்காந்த். நெருப்பைக் கண்டாலே இவருக்கு வெறி வருகிறது. காரணம் சின்ன வயதில் வில்லனால் பெட்ரோலிடப் பட்டுப் பலியாகும் அப்பா. அப்பிய மேக்கப்பும், சிகப்பேறிய கண்களுமாய் க்ளோசப்பில் அடிக்கடி பற்களை நறநறக்கிறார்.

பொருந்தாத விக்குடன் போலீஸ் கமிஷனராய் நம்பியார். அவருடைய செல்லப் பெண்ணாய் விஜி. பந்தயத்திற்காகக் கடத்திப் போன விஜய்காந்த் 'கட்டிப்பிடி, எட்டிப்பிடி' என்று மேலேமேலே விழுந்து டான்ஸ் ஆடுவதை எல்லாம் பெருந்தன்மையாய்(!) மன்னித்து, இதை விட ஒரு யோக்கியமான ஆணைப் பார்க்க முடியாது என்று அப்பாவிடம் சிபாரிசு செய்து, காதலிக்க ஆரம்பிக்கிறார்.

செய்யாத கொலைக்குக் கைது செய்யப்பட்டு சட்டத்தால் குற்றவாளி எனத் தீர்ப்பளிக்கப்பட்டு, அட்டகாசமாய் ஒரு கொலையைச் செய்து, அது நிரூபணம் ஆகாமல் விடுதலை ஆகி சட்டத்தைக் கேலி செய்கிற கதையில் புதுத்திருப்பங்கள் இல்லாவிட்டாலும், சுறுசுறுப்பைப் பாராட்டலாம்.

இந்தப் படத்தைப் பொறுத்தவரையில், மனத்தில் அழுத்தமான இடத்தைப் பிடிப்பவர் ஒய். ஜி. மகேந்திரன். வெகுளி. எல்லோரிடமும் வாங்கிக் கட்டிக் கொள்கிறார். மௌனமான இயலாமையில் வதைத்தவர்கள் பெயரைக் காகிதத்தில் எழுதிக் கசக்கி வெறி தீரப் பழி தீர்த்துக் கொள்கிறார். தங்கையின் மேல் பாசமும் நேசமும் பொழிகிறார். அநியாயமாய்க் கற்பிழந்து அவள் கயிற்றில் தொங்கியவுடன் பொங்கிப் பொருமுகிறார். அத்தனை உணர்ச்சிகளும் அநாயாசமாய் முகத்தில் தெரிகின்றன.

அடுத்தபடி வெண்ணிற ஆடை மூர்த்தி. கோமாளித்தனம். ப்ளஸ் வில்லத்தனம் கலந்த ஒரு பேராசிரியர் பாத்திரம். ருத்ரம், பெண் சபலம், பயம் என்று வித்தியாசமான உணர்ச்சிகளின் சுமை. எளிதாய்ச் சுமக்கிறார். அறிமுகங்கள் பத்மாவும், வரலக்ஷ்மியும் ஓ. கே.

இரண்டு மூன்று வருஷத்திற்கு முன் இளையராஜாவால் பிரபலப்படுத்தப் பட்ட ஒரு ட்யூனை இரவல் வாங்கிப் போட்ட 'காவல் புரிந்தவன் காதல் அறிந்தவன்' பாடலை மட்டும் நன்றாகவே செய்திருக்கிறார்கள். மற்றபடி சங்கர்–கணேஷ் ரீரெகார்டிங்கில் கவனமே காட்டாதது பெருங்குறை.

காதல் கலகல, பழிவாங்கல், வீரப்பாவின் சிரிப்பு, அனுராதாவின் ஆட்டம், ஏராள சண்டைகள்.....

ஹூம். தோல்வியில்லை.



---




ஜெயராமன் என்ற பரதன் ஏற்கெனவே திருட்டு வழக்கில் சம்பந்தப்பட்டு ஜாமீனில் வெளியே வந்துள்ளார். மறுபடி திருடி அகப்பட்டுக்கொண்டார். விசாரணை செய்ததில் தான் ஏற்கெனவே திருட்டு வழக்கில் சம்பந்தப்பட்டு வெளியே ஜாமீனில் வந்திருப்பதாகவும், அந்த வழக்கில் வக்கீலுக்குக் கொடுக்கப் பணம் இல்லாததால் மேலும் திருடியதாகவும் கூறினார்!

ஆதாரம்: ''தினத்தந்தி.''

தகவல்: போடி. எஸ். சையது முகமது.

# ஏதோ மோகம்

அக்காவின் புருஷன் குடிகாரன். ரௌடித்தனம் செய்து அவள் காலுடைவதைக் காரணமாகிறான். எனவே ஆண் பிள்ளைகள் சகவாசமே எனக்கு வேண்டாம் என்று அப்பாவிடம் கல்யாணத் திற்குச் சிகப்புக் கொடிகாட்டும் ஒரு அழகான இளம் பெண். அவளை வழிக்குக் கொண்டு வருகிறேன் என்று சவால் விடும் அப்பாவின் பால்ய நண்பர், ஒரு டிஸ்கோ இளைஞனை (அவர் தான் அவனுக்கு மாமா) கோதாவில் இறக்குகிறார். இடைவேளை வரை இவர்களின் முயற்சிகள் புஸ், புஸ்.

வழக்கமாய்ப் பட்டிக் காட்டான் நாயகர்கள், இடைவேளைக்கப்புறம் குடுமியை எடுத்து விட்டு, டிஸ்கோ ஆடி, முன்னால் மறுத்த பெண்களையே மயக்குவார்கள். இந்தப் படத்தில், ஒரு மாறுதலுக்காக, டிஸ்கோ இளைஞன் இன்டர்வெல்லுக்கு அப்புறம் குடுமி வைக்காதகுறையாய் ஆஞ்சநேய பக்தி வேஷம் போட்டு, சிலஅடாவடித் தனங்கள் பண்ணி அந்தப் பெண்ணை ஒருமாதிரி சபம் சொல்ல வைக்கிறான். முரண்டு பிடிக்கிற பெண்ணாய் பானுப்ரியா. பேசும் பெரிய கண்களுக்கு அவ்வளவாய் வேலை இல்லை. கொஞ்சம் மிடுக்கு காட்டுகிறார். தெரியாத்தனமாய்க் குடித்து விட்டு மெலிதான வெள்ளைப் புடவையில்மழையில் நனைந்து மயக்கப் பாட்டுப் பாடுகையில், மற்றதெல்லாம் காட்டுகிறார்.

டிஸ்கோ — கம் — அநுமான் பக்தனும் சுரேஷ். கற்புக்கரசன் வேஷம் போட்டுவிட்டுச் சிக்கலில் மாட்டிக் கொள்கிற கட்டங்களில் பரவாயில்லை. மற்றபடி நினைவில் இடம்பிடிக்க இவர் நிறைய தூரம் வர வேண்டும்.

அப்பாவும் நண்பனுமாய் வெ. ஆ. மூர்த்தி, தேங்காய். இவர்களின் கொட்டங்கள் சுவையானவை, அதுவும் தேங்காயின் 'ஓவர் எக்ஸ்பிரஷன்' நையாண்டிகள் ஜோரோ ஜோர். அவசியமான அநுராதாவும் உண்டு.

அப்பாவைக் காப்பிஅடிக்கிற வாரிசுகளில் இன்னொரு அட!: ஜூனியர் பாலையா, குரலும், வசனங்களை ராகம் இழுத்துத் துப்புவதும், அச்சாய் பாலையா. க்ளைமாக்ஸ் நெருங்க நெருங்க, டெம்போவை விட்டுவிடக் கூடாது என்பதற்காக முன்னுக்குப் பின் முரணாகநாலு காட்சிகளை வைத்து, பானுப்ரியாவின் பாத்திரத்தைக் குழப்புகிறார்கள். டைரக்ஷன், டி. கே. மணியன். வசனம், பாடல், இசை: கடைசிக் காட்சியில் அநாவசியமாய்த் தலைகாட்டும் கங்கை அமரன். இசையைப் பற்றி மட்டும் பரவாயில்லை என்று சொல்லலாம்.

ஏதோ படம்.

-ஜெயமன்மதன்

---

''டாக்டர் வீட்டு கல்யாணத்துக்கு போனியே எப்படி?''

''அதையேன் கேட்கிறே. பழம் போட்டுப் பை கொடுக்கிறதுக்குப் பதிலா அதை விட மலிவுன்னு வைட்டமின் மாத்திரை போட்டுக் கொடுத்திட்டார்''

—ஊழை. அ. கதிர்வேல்.

# நூறாண்டு காணும் சிவா ஜீ



...மகாகவி பாரதி தூத்துக்குடிக்கு வந்த நேரத்தில், உணர்ச்சி வெள்ளத்தில் மிதந்த சிவாவை முதன் முதலாக சந்திக்கிறார்... ''சிவா ஜீ'' என்று கட்டித் தழுவிக் கொண்டார்.

...வந்தே மாதரம், அல்லா —ஹூ— அக்பர், தேவநாம சங்கீர்த்தனம் என்னும் கோஷங்களை எழுப்பி விட்டுத் தான் பேச்சைத் தொடங்குவார் சிவா.

...'ஞான பானு' என்னும் தேசியத் தமிழ் மாத இதழ் ஒன்றை நடத்தினார் சிவா. மகாகவி பாரதியின் வேதாந்தக் கவிதைகள் பல வெளியானது இந்த ஞானபானுவில்தான்.

...மதுரை மாவட்டம் வத்தலக் குண்டு இலக்கியத் துறையில் சிறப்பிடம் பெற்ற ஊர். அந்த நாளில் பி. ஆர். ராஜம் அய்யர்... அண்மைக் காலத்தில் பி. எஸ். இராமையா. இதே இலக்கிய பூமியில் தான் சுப்பிரமணிய சிவாவும் பிறந்தார். இவரும் ஒரு நாவல் எழுதினார். அந்தக் கால மரபின்படி அதன் தலைப்பு 'நளின சுந்தரி அல்லது நாகரீக தடபுடல்'

...பாரத சமாஜம் என்ற ஒரு அமைப்பை நிறுவியிருந்தார். சமாஜத் தொண்டர்களை ஊர் ஊராய் அழைத்துச் சென்று தேசிய பஜனைகள் நிகழ்த்தினார். திருச்சி, மதுரை, இராமநாதபுரம மாவட்டங்களில் மேற்படி பஜனை கோஷ்டி சென்ற போது பாரதி பாடல்களை உணர்ச்சிப்பொங்கிடப் பாடிச் சென்றவர்களுள் ஒருவர் ஸ்ரீசதாசிவம்.

...தொழு நோயாளி என்று காரணம் காட்டி, சிவா ரயிலேறிப் பயணம் செய்யக் கூடாது என்று பிரிட்டிஷ் அரசு தடை. விதித்திருந்தது. இருந்தும் அவருடைய தேசியப் பணி தடைப்பட்டதில்லை. கட்டை வண்டி, குதிரை வண்டிகளில் பயணம் செய்தார். விளைவு நோய் தீவிரமடைந்தது.

...சுப்பிரமணிய சிவா நாடகங்களும் நடத்தி நடித்தும் இருக்கிறார். புகழ் தந்த பாத்திரம் சிவாஜி நாடகத்தில் குரு ராமதாஸர்.

வெஸ்பால்.

---




மாஸ்கோவில் தானியங்கி சினிமாத் தியேட்டர்கள் செயல்படுகின்றன. அவற்றின் நுழைவாசலிலேயே, தியேட்டரில் எவ்வளவு இடங்கள் காலியாக இருக்கின்றன என்பதை ஓர் எலெக்ட்ரானிக் சாதனம் காட்டும். படம் பார்க்க விரும்புவோர், தங்களுக்கு எந்த இடம் வேண்டும் என்பதைத் தேர்ந்தெடுத்து அதற்குரிய கட்டணத்தைத் தானியங்கி இயந்திரத்தில் போட்டு டிக்கெட்டைப் பெற்றுக் கொள்ளலாம்.

- ஆர். எஸ். சுப்பிரமணியன்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

# புதுமையின் பொலிவுக்கு




## ஹமாம்

ஹமாம் உபயோகித்து ஸ்நானம் செய்தால் இன்பமான உணர்வூட்டுகிறது. குடும்பத்தினர் அனைவருக்கும் புதுமைப் பொலிவூட்டுகிறது.

ஹமாம்...உங்கள் உள்ளத்தில் குதூகலம் பொங்கிடச் செய்கிறது.

**அதிக நாள் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்**

CASTH-16.203 TM

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிட்.

# பருவ வயதினர் பலரைப் பாதிக்கும் பிரச்னை: பரு... அது பற்றிப் பேசுகிறாள் ஒரு புதுமணக் குமரி.

'பருவ வளர்ச்சி என்றாலே பரு வரும். அதற்கு பரிகாரம் கிளியரெஸில்: பருக்களை கரைத்து கட்டுப்படுத்த உதவுகிறது.'



"அப்போது எனக்கு வயது 13. எனக்கு பரு வரத் தொடங்கியது. பரு வரும் போதெல்லாம் பல்லாண்டுகளாய் பாரா முகமாய் இருந்தேன். பின்பு ஒருநாள் என்னைப் பெண் பார்க்க ஒருவர் வந்தார். பருக்களை முகத்திலே பார்த்த உடனேயே என்னை அவர் வேண்டாம் என்றார். என் தோழி ஜெயாவின் ஆலோசனைப்படி நான் கிளியரெஸில் தடவத் துவங்கினேன். தவறாமல் அன்றாடம் இருமுறை தடவி வந்தேன். அப்புறம் ஒரு நாள் என் தோழி ஒருத்தியின் வீட்டில் மறுபடி 'அவரை' சந்தித்தேன். அவர் என்னை வைத்த கண் வாங்காமல் பார்த்தாரே பார்க்கணும். நீங்களும் நாள் தோறும் இருமுறை கிளியரெஸில் உபயோகியுங்கள். பருக்களைக் கட்டுப் படுத்துங்கள்! இப்போது ஜோடி சேர்ந்து வருகிறது கிளியரெஸில்!"

**கிளியரெஸில் வேனிஷிங் மெடிகேஷன் மற்றும் கிளியரெஸில் ஸ்கின் கலர்டு மெடிகேஷன்— ஒப்பற்ற 3-வழிச்செயல் கொண்டவை.**



1. உடைய வைக்கிறது பருக்களை



2. கரைக்கிறது பருக்களை



3. காய வைக்கிறது. பருக்களை




புதிய வேனிஷிங் மெடிகேஷன்

ஸ்கின் கலர்டு மெடிகேஷன்

**கிளியரெஸில்** உலக நம்பர் 1 முகப் பரு மருந்து க்ரீம்

OBM/8625R TAM

கல்கி

4-3-84 KALKI

ஆரோக்கியம் அழைக்கிறது.
-இலவச இணைப்பு

## அழைப்பை ஏற்கும்முன்....

இந்த மருத்துவக் கையேடு ஒரு வழிகாட்டிதான். இதுவே டாக்டர் என்று கொள்ள வேண்டியதில்லை. மருந்தும் மருத்துவமும், உடல் வாகுகளைப் பொறுத்து ஆளுக்கு ஆள் வித்தியாசப் படுகிறவை. இருந்தாலும், நோய், நோய்த் தடுப்பு பற்றிய அடிப்படை அறிவை ஊட்ட இது பயன்படும். PREVENTION IS BETTER THAN CURE. வருமுன் காப்பது சாலச் சிறந்தது என்கிற அளவில் ஆரோக்கியமான வாழ்வுக்கு எளிமையான வழிகளை இந்நூல் மூலம் டாக்டர்கள் கூறுகிறார்கள். ஒவ்வொரு தலைப்பிலும் கூறியுள்ளவாறு, அவசியமான நேரங்களில் உங்கள் டாக்டர்களைக் கலந்துதான் ஆக வேண்டும். இதை மனதில் இருத்திக் கொண்டு இந்தக் கையேட்டைப் படியுங்கள்.

○ டாக்டர் வியாஸ்



டாக்டர் வியாஸ்
(இந்தச் சிறப்பு மடலின் ஆசிரியர்)

உதவி: சாருகேசி, சுப்ரபாலன்

# ஆரோக்கியமான நோயற்ற வாழ்க்கைக்கு "கல்லீரலி"ன் பங்கு

மனித உடம்பில் இருதயத்துக்கு அடுத்தபடியாக மிகவும் முக்கியமான உறுப்பு **கல்லீரல்.** உடம்பில் உள்ள வேறு எந்த உறுப்பைக் காட்டிலும் கல்லீரலுக்கு பலவிதங்களிலும் முக்கியமான வேலை உண்டு. கல்லீரலை ஒரு "மெடபாலிக் லாபரட்டரி" என்றே சொல்லலாம்.

வளர்ந்த மனித உடம்பின் மொத்த எடையில் ஐம்பதில் ஒரு பங்கு அதாவது சுமார் 1200 முதல் 1500 கிராம் எடை வரை கல்லீரல் இருக்கிறது. வயிற்றின் வலப்பக்கத்தில் மேலே மார்புக் கூடுகளினால் பாதுகாக்கப்பட்டு வரும் கல்லீரல், எகிப்து தேச "பிரமிட்" போல் காட்சியளிக்கிறது.

கல்லீரல் இரண்டு பாகங்களாக இருக்கிறது. குழந்தைப் பருவத்தில் வலது பாகமானது இடது பாகத்தைவிட மூன்று மடங்கு பெரியதாகவும் வாலிப வயதில் கிட்டத்தட்ட ஆறு மடங்கு பெரியதாகவும் இருக்கிறது.

கல்லீரலின் சில முக்கியமான குறிப்பிடத்தக்க வேலைகள்.

1. கொழுப்புப் பொருள்களை சரியாக ஜீரணிக்கத் தேவையான பித்த நீரைச் சுரந்து வெளியேற்றுவது.
2. உணவில் உள்ள குளுகோஸ் சர்க்கரையை "கிளைகோஜன்" ஆக மாற்றுவது; அதேபோல் உடம்பின் தேவைகளுக்குத் தக்கபடி கிளைகோஜனை மறுபடியும் குளுகோஸாக மாற்றுவது.
3. உடலின் வளர்ச்சிக்கும், அமைப்புக்கும் உபயோகத்துக்கும் தேவையான வைட்டமின் ஏ, வைட்டமின் பி-12 மற்றும் ஃபோலிக் ஆசிட் இவைகளை சேர்த்து வைப்பது.
4. உடல் வளர்ச்சிக்குத் தேவையான புரதப்பொருளை ஒன்று சேர்த்தல்.
5. உடல் ஆரோக்கியத்துக்கு தீங்கு விளைவிக்கக் கூடிய ரசாயனப் பொருட்கள், மருந்துகள், பாக்டீரியா போன்றவைகளை பயனற்றுப் போகும்படிச் செய்தல்.

அடிவயிறு உப்புசமாக இருத்தல். பசி இல்லாதிருப்பது, ஜுரமடிப்பது போல் இருத்தல், சிடுசிடு என்று இருத்தல், சுற்றுப்புறச் சூழ்நிலைகளில் ஒரு அக்கறை இல்லாதிருப்பது, மலச்சிக்கல் அல்லது பேதி போன்ற கட்டுப்பாடில்லாத தன்மை, துர்நாற்றம் வீசும் மலம், மஞ்சள் காமாலை, இவை எல்லாம் கல்லீரலின் வேலைகள் கெட்டுப் போயிருப்பதன் பொதுவான அறிகுறிகளே. கல்லீரலுக்கு சேதம் அதிகமாக அதிகமாக கால் வீக்கம் போன்ற வேறு பல கோளாறுகளும் ஏற்பட்டு, நினைவு பிரக்ஞை இழந்து முடிவில் மரணம் சம்பவிக்கும் நிலைக்கும் போகலாம்.

மஞ்சள் காமாலையைப் பற்றி ஒரு வார்த்தை. மஞ்சள் காமாலையா, அது ஒரு வியாதியாயிற்றே என்று பலர் தவறாகக் கருதுகிறார்கள். உண்மை அது அல்ல. கடுமையான தொற்று நோயினாலோ அல்லது மருந்துகளினாலோ அல்லது வேறுபல காரணங்களினாலோ கல்லீரலின் வேலைகள் வெகுவாகப் பாதிக்கப்பட்டு விட்டதற்கு நிச்சயமான அறிகுறி தான் மஞ்சள் காமாலை.

மஞ்சள் காமாலை மற்றும் பல கல்லீரல் கோளாறுகளுக்கு உலகப் புகழ் பெற்ற **ஜிம்மியின் லிவர்க்யூர்** தவறில்லாத, நம்பகரமான, நிச்சயமான மருந்து. **ஜிம்மி ஃபார்மசூடிகல்ஸ் நிறுவனம்,** (நெ. 61, ராயப் பேட்டை ஐரோடு, மயிலாப்பூர், சென்னை-4. போன்: 72539). **ஜிம்மி லிவர்க்யூர்** தயாரித்து இந்தியாவெங்கும் விற்பனை செய்கிறார்கள். **பங்களூர், பம்பாய், லக்னோ, நாகபுரி** போன்ற முக்கியமான இடங்களில் மருத்துவத்துறையில் சிறந்த தேர்ச்சியும் அனுபவமும் உள்ள நிபுணர்களின் மேற்பார்வையில் கல்லீரல் சம்பந்தமான கோளாறுகளுக்கு வைத்தியம் பார்ப்பது மேற்கொள்ளப்படுகிறது. வைத்தியம் பார்ப்பதற்காகத் தனியாக "பீஸ்" ஏதும் வசூலிக்கப்படுவதில்லை.

டாக்டர் **C. V. K.** ராவ்

# என்னென்ன சோதனைகள்?

டாக்டர்கள் நோய் கண்டறிவதற்காகப் பல்வேறு விதமான சோதனைகளுக்கு எழுதித் தருவார்கள். என்னென்ன சோதனைகள் மூலம் எந்தெந்த நோய்களை அறிய முடியும்?

## இரத்தப் பரிசோதனை:

ஆர். பி. ஸி. (RBC) என்னும் சிவப்பு அணுக்களின் எண்ணிக்கையைக் கவனிப்பது ஹீமோக்குளோபின் சோதனை. இவற்றின் எண்ணிக்கை குறைவான விகிதத்தில் இருந்தால் ரத்தசோகை என்பது தெரிந்து விடும். அப்புறம் நோயின் காரணம் கண்டறியலாம். (WBC) டபிள்யூ. பி. ஸி. என்னும் வெள்ளை அணுக்களின் எண்ணிக்கையைக் கவனிப்பது. இவை குறைவான எண்ணிக்கையில் இருந்தால், வெள்ளை அணுக்களை உற்பத்தி செய்கிற போன்மாரோ செயலிழந்துள்ளது என்பதை அறியலாம். இதற்குக் காரணம் மருந்துகளா, தொற்று நோய் ஏதும் வந்துள்ளதா என்பதைக் கண்டறிய வேண்டும்.

எண்ணிக்கை அதிகமாக இருந்தாலும் உடலில் எங்கோ நோய்த் தொற்று இருக்கிறது என்பது தெரியும். ஒரு கன மில்லி மீட்டருக்கு பத்து முதல் பனிரெண்டாயிரம் வரை இருப்பது இயல்பு. எண்ணிக்கையும் அதிகமாக இருந்து வளர்ச்சியடையாத நிலையில் வெள்ளை அணுக்கள் காணப்பட்டால் 'லூக்கிமியா' போன்ற நோய்களாக இருக்கலாம்.

## டி. ஸி. (D. C.)

வெள்ளை அணுக்களின் விகிதாசாரம் பாலிமார் என்பது அறுபது சதவீதம் வரை இருக்கலாம். மேலே இருந்தால் நோய் தொற்றியிருக்கிறது என்பது தெரியும். அண்மைக் காலத்தில் ஏற்பட்ட நோய்த் தொற்றுக்குக் காரணம் கண்டறிய இது உதவுகிறது. மலேரியா, யானைக்கால் போன்ற நோய்களைக் கண்டறியலாம்.

## லிம்போஸைட் (LYMPH OSITE)

இது 35 முதல் 40 சதவீதம் வரை இருக்கலாம். காச நோய் போன்ற தொற்று நோய்களிருந்தால் இந்த அளவு கூடுதலாக இருக்கும். ஈஸனோஃபில் (EOSINOPHIL) பொதுவாக ஒவ்வாமை (அலர்ஜி) ஏற்பட்டால் இது அதிகரிக்கும். ஒன்று முதல் நான்கு வரை இருப்பது இயல்பு. கூடுதலானால் என்ன நோய் என்று கண்டறிய வேண்டும். குடல் பூச்சிகள், யானைக்கால் நோய் காரணமான காய்ச்சல், ஆஸ்த்துமா இவற்றுக்கு இது அறிகுறி.



✕ எலக்ட்ரோ கார்டியோ கிராம்

## மானோசைட்ஸ் (MONOCYTES)

ஒரு சதவீதம், அல்லது இல்லாமலே கூட இருந்தால் நார்மல். கூடுதலானால் நாள்பட்ட தொற்றுநோய் இருக்கலாம்.

## இ. எஸ். ஆர். சோதனை:

சாதாரணமாக ஒரு மணி நேரத்தில் ஆறு மி. மீ. அளவு இருக்கலாம். எங்கேனும் நோய் தொற்றியிருந்தால் படியும் அளவு கூடுதலாகும்.

## இரத்தத்தில்சர்க்கரை (BLOOD SUGAR)

உணவு உட்கொண்ட ஒன்றரை மணிக்கு அப்புறம், இரண்டு மணிக்குள்தான் எடுக்க வேண்டும். சாப்பிட்ட உணவின் தன்மை, மருந்துகள் பற்றிச் சோதனை செய்கிறவரிடம் சொல்லிவிட வேண்டும். சர்க்கரைச் சத்து 80 முதல் 120 மி. கி. விகிதம் இருக்கலாம். அதிகமாக இருந்தால் நீரிழிவு நோய்தான்.



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




**காம்ப்ளான்®**
**ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றும் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தைகளுக்கென்றே சிறப்பான சில தேவைகள் உள்ளன—வளரும் வயதிலே உடம்புக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த புரதம், 22 மூலாதார ஊட்டச் சத்துக்கள்—அளிக்கிறது காம்ப்ளான். மறவாதீர்கள், டாக்டர்களின் சிபாரிசு பெற்ற, திட்டமிட்ட உணவு காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

"குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி"
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக: தபால் பை நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

-GLC-6-3012 TH

**திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®**

## BLOOD UREA

சாதாரணமாக 30 முதல் 40 மி. கி. அளவு இருக்கலாம். கல்லீரல், சிறுநீரகங்களில் நோய் இருந்தால் இந்த அளவு கூடுதலாகிவிடும்.

### ஸீரம் கொலஸ்ட்ரால்

சாதாரணமாக 250 மில்லிகிராம் இருக்கலாம். அதிகமாக இருக்குமானால், தைராய்டு சுரப்பி சரிவர இயங்காமை, உடல் பருமனுதல், இரத்த அழுத்த நோய், நீரிழிவு போன்ற நோய்க் கூறுகளைக் கவனிக்கவேண்டும்.

### ஸீரம் கிரியாடினின்

சாதாரணமாக ஒரு மில்லிகிராம் அளவு இருக்கலாம். கூடுதலானால் சிறு நீரகக் கோளாறு ஏற்பட்டிருக்கலாம்.

## SGOT, SGPT சோதனைகள்:

மாரடைப்பு, மஞ்சள் காமாலை, சிறுநீரக கோளாறுகள் இருந்தால், ஆல்கலைன் பாஸ்படேஸ் விகிதம் கூடுதலாகும். புராஸ்ட்ரேட் நோய் இருந்தால் ஆஸிட் பாஸ்படேஸ் கூடுதலாக இருக்கும்.



✖ ஆஞ்ஜியோ கிராஃப் கருவி

### மாண்டோக்ஸ் சோதனை (MONTEAUX)

சிறு குழந்தைகளுக்கு பிரைமரி காம்ப்ளக்ஸ் (காச நோய்) இருக்கிறதா என்று பார்க்க இந்தச் சோதனை. காச நோய்க்காகச் சரியான வைத்தியம் செய்து கொள்ளப்படுகிறதா என்பதையும் அறிய இது உதவுகிறது.

### சிறுநீரில் உப்புச் சத்து (அல்புமின்)

அதிகமாக இருந்தால் சிறுநீரகக் கோளாறுகளும், சிறுநீரகத்தில் நோய்த் தொற்றும் இருக்கலாம்

### சிறுநீரில் சர்க்கரை:

சிறு நீரில் சர்க்கரைச் சத்து இருந்தால் நீரிழிவு நோய். சீழ் காணப்பட்டால், சிறுநீர்ப் பாதையில் நோய்த் தொற்று இருக்கிறது. சிறுநீரில் கற்கள் காணப்படலாம். ஆக்ஸலேட், பாஸ்பேட் கற்கள்.

### மலப்பரிசோதனை:

கொக்கிப்புழு, நாடாப்புழு, அமீபா இவற்றைக் கண்டறியலாம்.

### சளி சோதனை:

காச நோய், நிமோனியாவுக்கான நுண் கிருமிகள் இருந்தால் தெரியும்.

### எக்ஸ்ரே:

இருதயம், நுரையீரல் பற்றி அறிய உதவுகிறது. அடிக்கடி எக்ஸ்ரே எடுக்கக்கூடாது. ஆண்டுக்கு ஒருமுறை போதும். குறிப்பாகக் கர்ப்பிணிகளை அடிக்கடி எக்ஸ்ரே எடுக்கக் கூடாது.

### வைடால் சோதனை:

இரத்தத்தில் வைடால் சோதனை மூலம், டைபாய்டு நோய் ஏற்பட்டுள்ளதா என்று கண்டறியலாம்.

## Electro Cardio gram (இ. ஸி. ஜி.)

இதயத்தின் மீது ஒலி அலைகளைச் செலுத்தி எதிரொலிக்கச் செய்து, இதயத்தை வரைபடமாகப் பார்ப்பது. இதுமாரடைப்பு நோயைக் காட்ட உதவுவது. குறிப்பிட்ட சில இதய நோய்களை உறுதி செய்து கொள்ள மட்டுமே இது பயன்படும். இ. ஸி. ஜி. (மின் அலை வரைபடம்) முக்கியமாக இரத்த ஓட்டம் குறைவாக இருக்கிறதா, மாரடைப்பு நோய் இருக்கிறதா என்று கண்டறிய உதவுகிறது.

### டி. இ. ஜி:

நரம்பியல் நோய்களுக்கான ஒரு சோதனை இது. மூளையிலிருக்கும் மின் அலைகளை வரைபடமாக எடுத்து காக்காய் வலிப்பு போன்ற நோய்களுக்கான காரணத்தை அறிவது.

## CAT SCAN

மூளையில் இரத்தக் குழாயில் கசிவு ஏற்பட்டிருந்தாலும், கட்டி ஏற்பட்டிருந்தாலும் ஏற்பட்ட இடம், அளவு, பரிமாணம் போன்ற இவற்றைத் துல்லியமாகப் படமாகக்காட்டுகிற கருவி இது.

## ANGIOGRAPHY

உடலின் எந்தவொரு பகுதியில் இரத்த ஓட்டக் கோளாறு ஏற்பட்டிருந்தாலும் கண்டுபிடிக்க இது உதவுகிறது.

# பற்கள் பாதுகாப்பு



பல் டாக்டர்: என்ன பல் வலியா? (வாயைத் திறக்கிறார்.)

டாக்டர்: போதும்! போதும்!. போதும்!

நோயாளி: என்ன டாக்டர், 'போதும்' என்று ஒருமுறை சொன்னால் போதாதா?

டாக்டர்: நான் சொன்னது ஒரு முறை தான். மற்ற இரண்டு எதிரொலி. இப்படி குகை மாதிரியா வாயைத் திறப்பார்கள்!

## பற்களைப் பாதுகாப்பது எப்படி?

1. பற்களை உறுத்தக் கூடிய உணவுகளை உண்ணாதீர்கள்.
2. வெற்றிலைப் பாக்கு மெல்லுதல், நகங்களைக் கடித்தல், தித்திப்பான மிட்டாய் – சாக்லெட் ஆகியவற்றை மெல்லுதல் பற்களைப் பழுதடையச் செய்யும். தவிர்த்தல் நல்லது.
3. காலை எழுந்தவுடனும் இரவு படுக்கப் போகும் முன்பும் பற்களைச் சுத்தம் செய்ய வேண்டும்.
4. குழந்தைகள் மிட்டாய், சாக்லெட் போன்ற இனிப்புக்களைச் சாப்பிட்டவுடன் வாயைக் கொப்பளித்து, பல் இடுக்குகளில் ஒட்டிக் கொண்டிருக்கும் துணுக்குகளை எடுத்தல் அவசியம்.
5. குச்சி அல்லது கூர்மையான கம்பி போன்ற வஸ்துக்களால் துணுக்குகளை எடுக்க முயலுவது தவறு. நீரில் கொப்பளித்தால் போதும். அப்படியும் வரவில்லை என்றால், டூத்–பிக்ஸ் வாங்கி உபயோகிக்கவும்.

## பல் வியாதிகளினால் ஏற்படும் நோய்கள்:

சொத்தைப்பல் – உடலிலே நுண்கிருமிகள் தங்கி, வளர்ந்து, பரவி அடிக்கடி பல்வேறு நோய்களைத் தோற்றுவிக்கும். முக்கியமாக ஆஸ்த்துமா நோயாளிகளை வெகுவாகப் பாதிக்கும். வால்வுலர் லீஷன் இருக்கிற இதய நோயாளிகளைத் தாக்கி இதன் காரணமாக பாக்டீரியல் என்டோகார்டைடிஸ் உண்டாகும். சில சமயம் சொத்தைப்பல்லிலிருந்து மூளைக்குப் பரவி மெனிஞ்சைடிஸ் ஆகக் கூட மாறிவிட வாய்ப்பு உண்டு.

※ 1. மேல் உதடு. 2.6. ஈறுகள். 3. மேல் பல் வரிசை. 4. கீழ்தாடைப் பகுதி. 5. கீழ்ப்பல் வரிசை. 7. கீழ் உதடு. 8. நாக்கு.



## வாய் நாற்றம்:

வாய் நாற்றத்துக்குக் காரணம் பல்இடுக்குகளில் இருக்கும் உணவுத் துணுக்குகள் அகற்றப்படாமல், ஈறுகளைப் பாதித்து, நுண்கிருமிகளால் தாக்கப்பட்டு, இது வாய்நாற்றத்தில் முடிகிறது.

இதைத் தவிர, ஜீரணக் கோளாறுகளாலும் வாய் நாற்றம் உண்டாகிறது. பொதுவாக வாய் நாற்றத்தைப் போக்க, வாயைச் சரியாகக் கொப்பளித்தாலே போதும். இதற்காக உபயோகிக்கக்கூடிய மருந்துகள், கிருமி நாசினிகள்:

டெட்டால்
லிஸ்ட்டரைன்
அயோடின்.

நீரில் இதில் ஏதேனும் ஒன்றைக் கலந்து வாயைக் கொப்பளிக்கலாம். சுடுநீரில் வெறும் உப்பைக் கலந்தும் கொப்பளிக்கலாம்.

பற்களைச் சுத்தம் செய்யக் கரிப்பொடி, ஆலம் வேர், வேப்பங்குச்சி, மற்றும் தெருக்களில் பிரபலப்படுத்தப்பட்ட மூலிகைகள் இவை எல்லாம் பற்களை உறுத்தி ஈறுகளைப் பழுதடையச் செய்கின்றன. ஆகவே பற்களைச் சுத்தப்படுத்த மிருதுவான பண்டங்களையே உபயோகிக்கவும்.

## பல்வலிக்குச் சில கைமருந்துகள்:

கிராம்புத் தைலம் (க்ளோவ் ஆயில்)

கார்பாலிக் ஆசிட் – சொத்தைப்பல், ஓட்டைப்பல் இவற்றில் மட்டும் விடவும். சுற்றியிருக்கும் சதையில் பட்டால் வெந்து விடும், ஜாக்கிரதை.

ஆஸ்பிரின், பாராஸிடாமால் மாத்திரைகளைத் தற்காலிகமாக உபயோகிக்கலாம். ஆண்டுக்கு ஒருமுறை பற்களைப் பரிசோதித்துக் கொள்வது நல்லது.

**குழந்தைகளை விரல் சப்ப விடுவது தவறு பல் வரிசை மாறுபட்டுக் கோணலாகப் போகும்.**

உங்களது பற்களின் தோற்றம் உங்கள் நல்வாழ்வின் பிரதிபலிப்பாகும். வசீகரமான புன்னகை எவரையும் கவரும். வாழ்க்கையில் வெற்றியடைந்து புகழேணியில் இருப்பவர்களின் புன்னகையைப் பாருங்கள். அவர்கள் வெற்றி ரகசியத்தை அறியும் ஆவலும் உங்களுக்கு உண்டாகும்!



விடுமுறைகளில்,
ஞாயிற்றுக் கிழமைகளில்,
நடுஇரவுகளில் டாக்டர்கள்
வேலை செய்வதில்லை.
ஆனால், இருமல் வேலை செய்கிறதே!





வொ கா ஸி ல்

உங்கள் அருகிலேயே ஒரு டாக்டர்.

Trikaya PPV 3.83 TAM

கண் சரியாகத் தெரியவில்லை என்று கண்களைப் பரிசோதித்துக் கொள்வதற்காகக்கண் டாக்டரிடம் ஒரு நோயாளி வந்தார்.

"வெளியே கார் நிறுத்தியிருக்கிறேன். காரின் நம்பரைப்படியுங்கள் பார்க்கலாம்!" என்றார் டாக்டர்.

வந்தவர் வெளியே பார்த்தார். அவர் கேட்ட கேள்வி:

"கார் எங்கே?"

இந்த நிலைமை அடைந்த பிறகா கண்டாக்டரிடம் வருவது?





# கண் நோய்கள்

## சில பாதுகாப்பு முறைகள்:

1. அதிகம் வெளிச்சம் இருக்குமிடங்களில் செல்லும்போது, கண்களில் நேராகச் சூரிய வெளிச்சம் படாதபடி வைத்துக் கொள்வது அவசியம். வெல்டிங் தொழிலாளிகள் பாதுகாப்புக்கண்ணாடி அணிவதும், சுரங்கத் தொழிலாளிகள் பாதுகாப்புக் கண்ணாடி அணிவதும்மிக அவசியம். குறிப்பாக சுரங்கத் தொழிலாளர்கள் விஷயத்தில் தூசி அல்லது சிறு பூச்சிகள் கண்ணில் விழுந்துவிடக் கூடிய ஆபத்து இருக்கிறது.

2. குழந்தைகள் டி. வி. பார்க்கும்பொழுது துரிதமாக மாறும் உருவங்களை உற்று நோக்கிக் கொண்டிருந்தால், அந்த மாறும் உருவங்களின் வேகத்துக்கு ஏற்பப் பார்வையை மாற்றிக்கொள்ள முடியாமல் சில சமயம் போட்டோ ஃபிலெப்ஸி எனப்படும் வலிப்பு ஏற்படக் காரணமாகிறது. (இதைக்கண்டு பிடித்துச் சொன்னவர் ஒரு வெளி நாட்டு எலெக்ட்ரானிக் என்ஜினியர்.)

3. கண்களில் தூசி விழாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்: முக்கியமாக வாகனங்களை ஓட்டிச் செல்லுகிறவர்களும், லேத்துக்களில் வேலை பார்க்கும் தொழிலாளர்களும்.

4. எல்லா அவயவங்களைப் போலவே, கண்களுக்கும் ஓய்வு கொடுக்கவேண்டும். குறிப்பாக அச்சுக் கோக்கும் தொழிலாளர்கள், கடிகாரம் பழுது பார்ப்போர், லாபரேடரி டெக்னிஷியன்கள்.

## சில சாதாரண கண் நோய்கள்:

இருமிகளாலும், பாக்டீரியா மற்றும் வைரஸ் (விஷ) இருமிகளாலும் கண் நோய்கள் வருகின்றன என்றாலும், தொண்ணூறு சதவிகித கண்வலி வைரஸ் இருமிகளினால் ஏற்படுகிறது. மீதி பத்து சதவிகிதம்? அசுத்தமான கைகளால் கண்களைக் கசக்கி விட்டுக் கொள்வது; தவிர அடிக்கடி கண்களைப் பிசைந்து கொள்ளும் சுபாவம் அல்லது மானசிகமே காரணம்!

பால்வினை நோயால் பாதிக்கப்பட்ட தாய்க்குக் குழந்தை பிறந்தவுடன், குழந்தையின் கண் பாக்டீரியாவினால் பாதிக்கப்படும். இதற்கு, ஸில்வர் நைட்ரேட் சொட்டு மருந்தை, பிறந்த குழந்தையின் கண்களில் விடுவார்கள்.

கண்வலி அசாதாரணமாக இருந்து கொண்டேயிருந்தால், கண்ணுக்கு வெகு அருகிலேயே உடலில் எங்கோ நோய்த் தொற்று — இன்ஃபெக்ஷன் இருக்கிறது என்று கருத வாய்ப்பு உண்டு.

## எச்சரிக்கை!

1. ஒருவர் உபயோகித்த கண்மருந்தை, இன்னொருவர் உபயோகித்தால் கூடக் கண் நோய் வந்து விடும் சாத்தியக் கூறு உண்டு. கண்வலி காலத்தில் உபயோகித்தது போக, மீதி இருந்தால் தூர எறிந்து விடுங்கள்.
2. டாக்டரை ஆலோசியாமல், எந்தக் கண்வலி மருந்தையும் உபயோகிப்பது

○ கண் அறுவை சிகிச்சை



தவறு. ஏனென்றால் சில மருந்து களால் மற்ற உபாதைகள் தோன்ற லாம். பாருங்களேன்: ஒரு தாத்தா வுக்குப் பாவம் கண் எரிச்சல். யாரோ சொன்னதைக் கேட்டு அட்ரோபின் மருந்து போட்டுக் கொண்டார். சில மணிக்குப் பிறகு சிறுநீர் அடைப்பு ஏற்பட்டு விட்டது! மிகவும் அவதிப்பட்டார். டாக்டரிடம் போன போதுதான், அவராக உபயோகித்த மருந்து நீர்ச்சுருக்கு ஏற்படுத்தி, ப்ராஸ்ட்டேட் பெரிதாகி விட்டது தெரியவந்தது. டாக்டரை மட்டும் கேட்டிருந்தால், வேறு சரியான மருந்து கொடுத்திருப்பார் பெரியவருக்கு; இல்லையா?

### சில கவனிக்க வேண்டிய அறிகுறிகள்:

1. அடிக்கடி ஒருவருக்குக் காரணமில்லாமல் கண்ணில் இரிக்கட்டி வந்தால், கண்களின் பார்வை வீரியத்தை (பவர்) உடனே பரிசோதித்துக் கொள்ள வேண்டும்.
2. இதைத் தவிர, சர்க்கரை வியாதி இருந்தால் கூட அடிக்கடி கட்டி வரும்.
3. சாதாரணமாகக் கண்ணில் நீர் வருவதை -லேக்ரிமல் ஃப்ளூயிட் அல்லது கண்ணீர் என்கிறோம். இது கண்ணைப் பாதுகாக்கவே செயல்படுகிறது. இதுவே அதிகமாக வெளிப்பட்டால், கண்ணீர் சுரப்பியில் அடைப்பு ஏற்பட்டிருக்கிறது என்று கண்டுகொள்ளலாம்.
4. கண் எரிச்சல் என்பது நோய்க்கான அறிகுறி அல்ல. பொதுவாகத் தூக்கமின்மையால் தான் இது ஏற்படுகிறது. இதைப் பலரும் உடலின் உபாதைக்கான அறிகுறி என்று நினைக்கிறார்கள். இது தவறான கருத்து.
5. அடிக்கடி எண்ணெய் தேய்த்துக் கொண்டால் கண் மற்றும் உடம்பைக் குளுமையாக வைத்துக் கொள்ளலாம் என்பது தவறு. கண்களுக்குப் போதிய ஓய்வு கொடுத்தாலே கண்களைக் குளுமையாக வைத்துக் கொள்ளலாம்.

### நிபுணரை எப்போது பார்க்கவேண்டும்?

கண்ணின் விழிப்படலம் – ரெட்டினா– கோளாறுகள், மாறுகண், க்ளகோமா இவை போன்றவை சாதாரணமாக வீட்டு வைத்தியம் செய்து கொண்டு குணமாக்க முடியாது.

திடீரென்று பார்வை இரட்டையாகத் தெரிந்தாலும், அல்லது மாறுகண் ஏற்பட்டாலும், பார்வை குன்றிப் போய் மங்கினாலும் உடனே கண் டாக்டரை அணுகுவது நல்லது. ஏனென்றால் மூளைப் பகுதியில் கட்டி காரணமாக இவை தோன்றலாம்.

காடராக்ட் என்பது கண்ணில் உள்ள லென்ஸ் கட்டியாக அல்லது திடமாக மாறுவது. சாதாரணமாக காடராக்ட்



கண் பரிசோதனை

அறுபது வயதுக்கு மேல்தான் ஏற்படும். சிறு வயதில் காடராக்ட் வந்தால், கால்ஷியம் சத்துக் கோளாறு காரணமாக இருக்கலாம். பாரா – தைராய்ட் நாளமில்லா சுரப்பி சரியாய் இயங்காதிருக்கலாம். பொதுவாக, காரணமின்றி, கால்ஷியம் மாத்திரை களை உட்கொள்ளக் கூடாது.

> கூர்மையான முனையுடன் கூடிய பென்சிலை, பாக்கெட்டில் செருகிக் கொண்டு பள்ளிக்கு ஓடும் சிறுவர்களே! சற்று நில்லுங்கள். ஒருவேளை நீங்கள் தடுக்கி விழுந்தால் பென்சில் முனை உங்கள் கண்களைத்தான் முதலில் தாக்கும்! பெட்டிக்குள் வைத்திருங்களேன்!

### சில நவீன வசதிகள்:

1. போட்டோ கோயாகுலேஷன் தெரபி: சர்க்கரை வியாதியினால் விழித்திரை பழுது பட்டால், இந்த முறையை உபயோகித்து ஒரு சிலரைக் குணப்படுத்த முடியும்.
2. கார்னியல் டிரான்ஸ்பிளான்ட்: கண்ணின் விழிப்படலத்தில் காயம் ஏற்பட்டு அதனால் வெள்ளை வடிவத்தில் பழுது வந்தால், அந்தப் பாகத்தை, கண் தானம் செய்யும் மற்றொருவரின் விழிப்படலம் மூலம் சரி செய்து விடலாம்.
3. அழகுக்கு மட்டுமல்ல, சௌகரியத்திற்காகவும் போட்டுக் கொள்ளுகிறார்கள்– காண்டாக்ட் லென்சுகளை.

### கண் தானம்:

இப்போது பிரபலமாகி வரும் 'கண் தானம்' பற்றி அறிய விரும்பும் நேயர்கள் சங்கர நேத்ராலயா, கல்லூரிச் சாலை, சென்னை–600 086 அல்லது ஐ பாங்க் ஆஃப் இந்தியா, கதீட்ரல் சாலை சென்னை– 600 086 நிறுவனங்களை அணுகலாம். விண்ணப்ப பாரங்களும் விவரங்களும் இங்கே கிடைக்கும்.

# Restoring and preserving health is our business




**Pharm Products** PRIVATE LIMITED

'Vijai', Medical College Road,. THANJAVUR-613 007 Tamilnadu-India

இலவசம்

# தகுதிபெற்ற ஆடியாலஜிஸ்ட் மூலம் நீங்கள் இப்பொழுது செலவில்லாமல் காதுகேட்புச் சோதனை செய்துகொள்ள முடியும்.






**பிலிப்ஸ்**

இலவசமாக ஆடியோகிராம் சோதனை செய்துகொள்ளுங்கள்.

**இடம்: பிலிப்ஸ் ஆடியோலாஜிகல் சென்ட்டர்**

3, ஹேடோஸ் ரோடு சென்னை-600 006

நிலையத்தின் அலுவல் நேரம்:
மாலை 3.30 முதல் மாலை 5.30 வரை.
வார நாட்கள் அனைத்திலும்...
திங்கள் முதல் வெள்ளி.
நியமனத்திற்கு
ஃபோன் செய்யவும்: 812341



புத்தொலியின் புதிய உலகம்!
வழங்குகிறது பிலிப்ஸ் காது கேட்புக்கருவி—எச்பி 8142/27

OBM/8557 R-3

# காது, மூக்கு தொண்டைப் பிரச்னைகள்

**தொண்டை**

குழந்தைகளின் மூச்சுக் குழாய்ப் பகுதியில் ஏதாவது வெளிப் பொருள்கள் போய் மாட்டிக் கொள்ளும். அல்லது, குரல்வளைப் பகுதியில், பெரியவர்களுக்குப் புற்று நோய் ஏற்பட்டிருக்கும்.... இவை சாதாரணமான மார்புச்சளி ஆஸ்த்துமா என்று தவறாக நினைத்துக் கொள்ளப்படும்.

குழந்தைகளுக்குத் தொண்டையில் கழலை ஏற்படுவது பொதுவாக, டான்ஸில்ஸ் காரணமாக இருக்கலாம். பெரியவர்களானால் தொண்டையில் ஏற்படுகிற கழலைதான் புற்றுநோய்க்கான பொதுவான காரணம்.

குரல் கெடாமல் பார்த்துக் கொள்வது அவசியம். பொறுமையுடன், அமைதியாக இருக்கப் பழகிக் கொள்ள வேண்டும். கூச்சல் போட்டு இரைந்து பேசுவது, கத்தி ரகளை பண்ணுவது குரல் என்னும் அற்புதமான சாதனத்தைத் தவறாகப் பயன்படுத்துவதாகி விடும். சிகரெட் பழக்கம் கண்டிப்பாகத் தவிர்க்கப்பட வேண்டும்.

டான்ஸில்லை அகற்றுவதா வேண்டாமா என்பது ஒரு கேள்வி. நோய்த் தொற்றுகிற மாதிரி சீழ் ஏற்பட்டு நுண்கிருமிகள், சீழ் இவை இருந்தால் உடனடியாக டான்ஸில்லை அகற்றி விடத்தான் வேண்டும். மற்றபடி அவசியமில்லை.

**மூக்கு:**

பெரும்பாலான நேரங்களில் சில்லுமூக்கு என்னும் மூக்குத் துவாரங்களின் இடையிலுள்ள சுவர்ப்பகுதி ஒதுங்கி அமைந்திருப்பது இடைஞ்சல்பண்ணுது. ஆனால் சில சமயங்களில் ஸைனஸ் பகுதியிலிருந்து வரவேண்டிய கழிவுகளைத் தடுத்து விடும். இதனால் சாதாரணமான ஜலதோஷமோ ஸைனஸ் கோளாறோ ஏற்படலாம்.

குழந்தைகள் விரலால் மூக்கை நெருடிக்கொண்



டிருப்பதாலும், பலப்பம், பொத்தான்கள் போன்ற வெளிப் பொருட்களை மூக்கினுள் போட்டுக் கொள்வதாலும், சாதாரணமாக இரத்தக் கசிவு ஏற்படுகிறது. பெரியவர்களானால் அதிக இரத்த அழுத்தம் காரணமாகவும் மூக்கில் இரத்தம் வரலாம். ஒரு பக்கமாக ஒதுங்கிய சில்லுமூக்கு, புற்று நோய் உருவாதல் போன்ற காரணங்களாலும் இரத்தக் கசிவு ஏற்படலாம்.

மூக்கின் வெளித்துவாரங்களை அழுத்திப் பிடித்துக் கொண்டு — பத்து எண்ணுகிற வரை வாயால் மட்டுமே மூச்சு விடுவதன்மூலம் இரத்தக் கசிவை நிறுத்தி விடலாம். மூக்குத் தண்டின் மேல்புறம் ஐஸ்கட்டியை வைத்தும் இரத்தக் கசிவை நிறுத்த முயலலாம். இரண்டும் பயன் தராவிட்டால் உடனே ENT டாக்டரைப் பார்க்க வேண்டியதுதான்.

**காது:**

திடீரென்று சில நேரங்களில் காது கேட்பது தடைப்படுவதுண்டு. காதுத் துவாரங்களில் குரும்பை எனப்படுகிற மெழுகுப் பொருள் சேர்ந்து விடும். காதுகளின் உட்புறச் சுரப்பிகளிலிருந்து கசியும் திரவமும் அழுக்கு, தூசி இவையும் சேர்ந்து இந்த மெழுகு உண்டாகிறது. பஞ்சு சுற்றிய மென்மையான குச்சிகளால் சாதாரணமாக இதை அகற்றி விடலாம். சிலருக்கு இந்த மெழுகுக் குரும்பை கெட்டியானதாக வளரும். சுலபமாக அகற்ற முடியாது. ஸோடியம் பைகார்பனேட், அல்லது சுத்திகரிக்கப்பட்ட தேங்காய் எண்ணெய் இவற்றை உள்ளே செலுத்திக் குரும்



பையை இளக்க வேண்டும். அதன்பிறகு, இதற்காக என்று உள்ள கருவிகளின் துணையோடு குரும்பையை அகற்ற வேண்டும். இதை ஒரு இ.என்.டி. டாக்டர்தான் அகற்ற வேண்டும்.

குளிக்கும் போது சில நேரங்களில் தண்ணீர் காதுகளில் புகுந்து கொண்டு குரும்பையை ஊறிப் பருக்கப் பண்ணிவிடக் கூடும். இதனால் தான் திடீரென்று காது கேட்காமல் போய் விடுகிறது.

சாதாரண ஜலதோஷம் பிடித்த நேரங்களில் அழுந்தி மூக்கைச் சிந்துவதால், மூக்கு — காது இடைப்பட்ட குழாய்ப் பகுதியில் காற்று அழுத்தம் அதிகமாகி,

அடைப்பேற்பட்டுக் காது கேட்காமல் போய்விடும். சில வைரஸ் காய்ச்சல்களும் சாதாரணமாகக் காது கேட்காமல் செய்துவிடும்.

காதுகளில் இரைச்சல் ஏற்படுவது ஒரு வகை. கிராமப்புற அரைகுறை 'வைத்தியர்'கள் காதுகளில் பூச்சிகள் புகுந்துவிட்டது என்று சொல்லி ஏமாற்றுவதுண்டு. தந்திரங்கள் மூலம் சில பூச்சிகளையும் காதிலிருந்து எடுத்ததாகக் கூறிஏமாற்றிக் காசு பறிப்பார்கள்.

வழக்கமாக, காதுகளில் உள்ள நரம்பு செல்கள் சேதமடைவதால் காதுகளில் ஓசை கேட்கும். காதுக்குள் அளவுக்கு அதிகமான இரத்த ஓட்டம் ஏற்படுவது காரணமாக ஓசை கேட்டால், தனிப்பட்ட கவனிப்பு அவசியம்.

தூக்க நேரங்களில் காதுக்குள் ஈ, எறும்பு, சின்னக் கரப்பான்பூச்சி போன்றவை காதுக்குள் நுழைந்துவிடும். உடனே அவற்றைக் குடைந்து வெளியேடுக்க முயல வேண்டாம். உப்பு நீர் அல்லது சுத்தமான



கட்டுரை உதவி:

டாக்டர் பவிஃபிகா ஸைமன்

எண்ணெயைக் கொஞ்சம் காதுக்குள் ஊற்றிப் பூச்சியை மூழ்கப் பண்ணிக் கொன்று விட வேண்டும். அதன் பிறகு டாக்டரிடம் போய்க் காதைச் சுத்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். நீங்களே சுத்தம் பண்ண முயன்று செவிப்பறையைக் கிழித்துக் கொள்ளக் கூடாது. 3 செ. மீ. நீளமுள்ள சிறு பூரான்களைக் கூட டாக்டர்கள் அகற்றியிருக்கிறார்கள். சிறு விதைகள், காய்கறித் துண்டு போன்றவை உள்ளே போய் விட்டால் தண்ணீரை ஊற்றக் கூடாது. அப்படிச் செய்தால், அவை ஊறிப் பெரிதாகி, வெளியேற்றுவது சிரமமாகி விடும்.

காதில் சீழ் போன்ற திரவம் வடிவது உடனடியாக டாக்டர்களிடம் போக வேண்டிய நோய். எந்தவிதமான காதுச் சொட்டு மருந்துகளையும் நீங்களே பயன்படுத்தவேண்டாம். பல நேரங்களில் இந்தச் சொட்டு மருந்துகளும், எண்ணெய்யும், நோயைக் குணப்படுத்தாமல் சிக்கலாக்கி விடுவதே அதிகம்.

காதில் சீழ் வடிவதில் இரண்டு வகை உண்டு. அடினாய்டு, டான்ஸில்ஸ் ஸைனஸ் காரணமாக, மூக்குப் பகுதியில் ஏற்படும் தொற்றுநோய் காரணமாக இணைப்புக் குழாய் வழியே திரவம் கசியலாம். இது ஆபத்தானதில்லை. அடினாய்டு, டான்ஸில்ஸ் இவற்றை அகற்றி விடுவதன் மூலம் குணப்படுத்தி விடலாம். காதுகளில் தண்ணீர் பீச்சிச் சுத்தப்படுத்திச்சில ஆண்டிபயாடிக்ஸ்மருந்துகள் தந்தால் போதுமானது.

மற்றொரு வகை அபூர்வமான ஒன்றுதான். ஆனால் மிகவும் ஆபத்தான ஒன்று. இதனால் தொற்று நோய் பரவி மூளையைத் தாக்கி மரணம் கூட நேரலாம். ஒரு டாக்டரே இதைக் குணப்படுத்த முடியும். அறுவை சிகிச்சை மூலம் குணப்படுத்தியாக வேண்டும்.

எனவே, காதுகளில் சீழ் வடிதல் இருப்பின் அலட்சியப்படுத்த வேண்டாம்.

## காது கேட்பதற்கான கருவிகள்

காது கேட்கும் கருவிகள் தேவையில்லாமலே சில சமயம் சிறிய ஆபரேஷன், மருந்துகள் மூலம் கேட்கும் சக்தி கிடைத்து விடக் கூடும். வேறு வழியே இல்லை என்றால், எந்தமாதிரியான காது கேட்கும் கருவி தகுந்தது என்பதைப் பலசோதனைகளுக்குப்பின் உங்கள் டாக்டர் குறிப்பிட்டுத் தருவார். கண்ணைச் சோதனை பண்ணிக் கண்ணாடி பொரிக செய்கிற மாதிரிதான். சென்னை நகரில் பல இடங்களில் (EAR AID CENTRES) இந்தக்கருவிகள் தேவைக் கேற்றபடி கிடைக்கின்றன. ஐநூறு ரூபாய் முதல் இரண்டாயிரம் ரூபாய் வரையுள்ள விலையில் இவற்றைப்பெற்றுக் கொள்ளலாம்.

விலை அதிகம், அடிக்கடி பாட்டரி செல்கள் மாற்ற வேண்டும் என்னும் காரணங்களால் சாதாரண நிலையில் உள்ளவர்களுக்கு இவை கிடைப்பதில்லை. எனினும் அவசியம் என்று வந்துவிட்டால் வேறு என்ன செய்ய முடியும்? கண்ணாடியை அணிவதில் யாரும் கூச்சப்படுவதில்லை. ஆனால் காது கேட்கும் கருவியை அணிந்து கொள்ள வெட்கப்படுகிறார்கள். இது பொருத்தமற்றது.



நீரிழிவு நோய் வந்த ஒரு நோயாளிக்கு, கட்டுப்பாடான உணவு (டயட்) முறையை எடுத்துச் சொன்னோம். உணவு முறை, அளவு, எல்லாம் வெளியிட்டு இதைக் கண்டிப்பாகப் பின்பற்ற வேண்டும் என்றோம். ஒருவாரம் கழித்து நோயாளி வந்தார்.

''என்னால் முடியாது டாக்டர், டயட்டை என்னால் சாப்பிடவே முடியாது!'' என்றார்.

''ஏன் என்ன சிரமம்?''

அவர் பதிலைக்கேட்டுத் திடுக்கிட்டோம். காரணம்—வழக்கமான சாப்பாட்டைத்தவிர சிகிச்சையின் ஒரு பகுதியான டயட்டையும் சாப்பிட வேண்டும் என்று அந்த நோயாளி அர்த்தம் பண்ணிக் கொண்டிருக்கிறார்!

''ஐயா டயட்டை மட்டுமே சாப்பிடுங்கள். உங்கள் வழக்க மான சாப்பாட்டை நிறுத்துங்கள்!'' என்று மேலும் விளக்கினோம்.

நீரிழிவு நோய்க் காரர்களுக்குக் கட்டுப்பாடான உணவு மிக முக்கியமானது.



### நோய்க்கான அறிகுறிகள்:

1. எத்தனை சாப்பிட்டாலும், காரணம் எதுவுமின்றி எடை குறையும்.
2. காயங்கள் ஆறாமல் இருத்தல்.
3. அதிகப் பசி.
4. மிகுதியான தாகம்.
5. அடிக்கடி சிறுநீர் கழித்தல். (இரவில் குழந்தைகள் சிறுநீர் கழிக்கும் — தூக்கத்தில். இது சர்க்கரை வியாதிக்கான அறிகுறி அல்ல. இதுபோலவே வயதானவர்கள் இரண்டு மூன்று முறை போனாலும் அது நீரிழிவுக்கு அறிகுறியல்ல.)
6. அடிக்கடி வரும் நோய்த் தொற்று (இன்ஃபெக்ஷன்), காரணமேயில்லாத அலர்ஜி, மலச்சிக்கல்.

### கண்டுபிடிப்பது எப்படி?

வீட்டிலேயே பெற்றோருக்குச் சர்க்கரை வியாதி இருந்தால்; அல்லது 45 வயதுக்கு மேற்பட்ட நபராக இருந்து, திடீரென்று காயங்கள் ஆறாமல் இருந்தால்; மிகுதியான தாகம் எடுத்தால், அடிக்கடி சிறுநீர்கழித்தால் — நீரிழிவு இருக்கிறதா என்று பரிசோதித்துக் கொள்வது நல்லது மட்டுமல்ல, அவசியம் கூட. இதற்குச் சுலபமான முறை:




1. வழக்கம் போல் உணவு உட்கொண்ட பிறகு ஒன்றரை மணியிலிருந்து 2 மணி நேரத்துக்குப்பிறகு, சிறுநீர்ப் பரிசோதனை செய்து கொள்ளுதல்.
2. முதலில் சிறுநீர் கழித்த பிறகு, மறுபடியும் இரண்டாவது முறையாகக் கழிக்கும்போது, ஒரு சுத்தமான பாட்டிலில் (ஓர் அங்குல அளவுக்குக் கிட்டத்தட்ட) எடுத்து வைத்துக் கொள்ளுங்கள்.
3. மருந்துக் கடைகளில் டயஸ்டிக்ஸ் என்ற பெயரிலோ, அல்லது டெஸ்ட் டேப் ஃபர் ஷுகர் இன் யூரின் என்று கிடைக்கும். இவை உபயோகித்து சிறுநீரில் சர்க்கரை இருக்கிறதா இல்லையா என்று கண்டுபிடிக்கலாம்.
4. இப்படி முடியவில்லை என்றால், மருந்துக் கடைகளில் கிடைக்கும் பெனடிக்ட் சொல்யூஷன் கேட்டு வாங்கவும். அதில் 5 ml எடுத்து ஒரு சோதனைக் குழாயில் போட்டு, ஸ்பிரிட் விளக்கு வைத்து, கொதிக்க வைக்கவும். பெனடிக்ட் சொல்யூஷன் நீல நிறம் மாறாமல் இருக்க வேண்டும். இப்போது எட்டுச் சொட்டு (இரண்டாம் முறையாக எடுத்த) சிறுநீரிலிருந்து விடவும். மறுபடியும் கொதிக்கவைக்கவும். இப்போது நிறத்தைப்பாருங்கள்: நீல நிறமாகவே இருந்தால் — இனிப்பான செய்தி — உங்களுக்குச் சர்க்கரை வியாதி இல்லை!

   மஞ்சள் நிறம்: 2% வரை இருக்கிறது.
   ஆரஞ்சு நிறம்: நிச்சயமாகச் சர்க்கரை அதிகம் இருக்கிறது.

குறிப்பு: வைட்டமின் 'சி' மாத்திரைகள், மற்றும் கலர் உபயோகிக்கப்பட்ட மாத்திரைகள் சாப்பிட்டால் தவறான நிறங்களைக் காண்பிக்கலாம். இதைக் கொண்டு தவறான முடிவுக்கு வந்து பீதியடையாதீர்கள்.

**பெற்றோர்களுக்குச் சர்க்கரை வியாதி இருந்தால், அவர்களது குழந்தைகள்**

**கண்காணிப்பாக இருக்கவேண்டிய வழி முறைகள்:**

1. அவ்வப்போது சிறுநீர்ப் பரிசோதனை- குறிப்பாக நோய்த் தொற்று இருக்கிற போது.
2. 40 வயதுக்கு மேல், ஆறு மாதங்களுக்கு ஒரு முறை ப்ளட் ஷுகர் பரிசோதனை.
3. கட்டுப்பாடான உணவு முறை (டயட்டிங்); உணவில் குறைவான மாவுச் சத்துப் பொருளை '(கார்போஹைடிரேட்) சேர்த்துக் கொள்ளுதல்.
4. உயரத்திற்குத் தகுந்த எடை இருக்கிறதா என்று பார்க்கவும்.
5. அசாதாரணமான அறிகுறிகள் -குறிப்பாகப் பார்வைக் கோளாறுகள், பெண்களைப் பொறுத்தவரை பருவம் அடையாதிருத்தல்.

**உணவுக் கட்டுப்பாடு:**

அ. மாவுச் சத்தைக் குறைத்து, குறிப்பிட்ட நேரங்களில் தவறாமல் உணவு உட்கொண்டாலே போதும்.

ஆ. எந்த அளவுக்குச் சாதம் உட்கொள்வீர்களோ, அதைத் தவிர்த்து, அந்த அளவுக்கு, மாவுச் சத்தில்லாத காய்கறி வகைகளை உண்ணுங்கள்.

இ. கிழங்கு வகைகளைக் கண்டிப்பாகத் தவிர்த்து விடுங்கள்.

**நீரிழிவு நோயாளிகள் கவனத்துடன் இருக்கவேண்டிய அம்சங்கள்:**

1. கை - கால்களில் எந்தவிதமான காயங்கள், புண் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவும்.
2. அளவுக்கு மீறிய களைப்பு ஏற்பட்டால் இதயப் பரிசோதனை தேவை.
3. இருமணத்துக்கு முன், பெண்-பிள்ளை இருவருமே நீரிழிவு நோயுள்ள குடும்பத்தவராக இருக்கின்றனரா என்று பார்த்து விடுதல் அவசியம்.
4. மகப்பேறு காலத்தில் நீரிழிவு நோயுள்ள தாய்மார்கள் அதிகக் கவனத்துடன் அடிக்கடி (மாதம் ஒரு முறையாவது) மகப்பேறு மருத்துவரைக் கண்டு பரிசோதனை செய்து கொள்ளவும்.
5. வருடத்துக்கு ஒரு முறை இதயம், கண் மற்றும் பொதுவாக உடல் பரிசோதனை செய்து கொள்ளவேண்டும்.
6. அறுவைச் சிகிச்சை செய்து கொள்ள வேண்டிய நிலை வந்தால், ஆபரேஷனுக்கு முன்பும் பின்பும் இன்சுலின் முக்கியம்.

**சில நவீன வசதிகள்:**

1. ஒரு நிமிடத்தில், ரத்தத்தில் இருக்கிற சர்க்கரை அளவைக் கண்டுபிடிக்கக் கருவிகள் கிடைக்கின்றன. இவற்றை




✖ சிறுநீரில் சர்க்கரை உள்ளதா என்று கண்டுபிடிக்க உதவும் சாதனம்

நோயாளியே எளிதில் உபயோகிக்கலாம். Gluco Check; eyetone meter - இவை பாக்கெட் டிரான்ஸிஸ்டர் அளவில், விலை ஆயிரம் ரூபாய்க்குள், கிடைக்கும்.

2. இன்சுலின் பம்ப்: உடலில் இன்சுலினே இல்லாதவர்கள், அந்தந்தச் சமயத்தில் தேவைக்கேற்ப ஒரே சீரான அளவில், 24 மணி நேரத்துக்கு இன்சுலினை உடலில் செலுத்தும் (ஊசி) கருவி. இது குழந்தைகளுக்கும் இளவயதினருக்கும் உபயோகமாயிருக்கும். மருத்துவரின் கண்காணிப்பில் மட்டுமே உபயோகிக்கவும்.
3. Glycosolated Haemoglobin Kit -இது, எந்த முறையில் நீரிழிவுநோய் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்ள உதவும்.
4. Pancreatic Transplant என்னும் உறுப்பு மாற்றிப்பொருத்தும் முறை - ஜாக்கிரதை! ஆராய்ச்சிகளுக்கு மட்டுமே இது பயனுள்ளது. இதைச் செய்து கொண்டால் நீரிழிவு சுலபத்தில் குணமாகும் என்று நினைத்து ஏமாற வேண்டாம்!
5. Insulin Assay : உடலிலுள்ள இன்சுலின் அளவைக் கண்டுபிடித்தல். இதுவும் ஆராய்ச்சிக்குத்தான் பயன்படுகிறதே தவிர, அன்றாட வைத்திய முறைக்குத் தேவையே இல்லை!

நீரிழிவு நோய் பற்றி எங்கே முழு விவரம் பெறலாம்?

Diabetic Association of India,
Manekji Wadia Bldg. Ist Floor
127, M. G. Road
Bombay-400023

# VITAMIN 'M' FOR DOCTORS!

## SHRIRAM CHITS

proudly prescribe for all Registered Medical Practitioners — whether employed or in private practice or both —

## DOCTOR'S SPECIAL CHIT GROUP

### Rs. 50,000 (Rs. 1,000 x 50 months)

**INDICATIONS:**

Doctor's need of money for urgent purchases, including equipment — OR Doctor's wish to invest for healthier growth of money.

**COMPOSITION:**

- Gift of a special 10-gm Silver Medallion.
- Attractive Dividends & High returns.
- Borrowings at much lower cost than market rates.
- 5% extra Dividends to all non-bidders.
- 1% Special Bonus for prompt payments.
- Easy disbursal on Personal Guarantees of Doctors/other reputed persons.
- Free Consultancy for Tax benefits.
- Service at your doorsteps — documentation, collection & disbursal.

ADWAVE/SCI/2585

**AVAILABILITY:**

Full details & application forms available at all our Offices in Madras and Bangalore.






**DOSAGE:**

Subscription Rs. 1,000 p.m., though actual average around Rs. 750 p.m. for 50 months.

**CONTRA INDICATION:**

Any bid above 30% ceiling.

**PRESENTATION:**

Packed with renown & integrity of Shriram Chits, serving over 25,000 Clients and disbursing Rs. 9 crores p.a. — now in the 10th year of operations.

**Shriram**

**CHITS & INVESTMENTS PVT. LTD.**

Regd. Office: 123, Angappa Naicken Street, Madras 600 001. Ph: 21401/21402.

Branches:

- **T. Nagar:** 54, North Usman Road, Madras 600 017.
- **Anna Nagar:** A7, Anna Nagar (Near Canara Bank), Madras 600 102.
- **Mylapore:** 21, East Mada Street, Madras 600 004.
- **Mount Road:** 137, Mount Road, (opp. Electricity Board), Madras 600 002.
- **BANGALORE:** 142, K.H. Road (Double Road), Bangalore 560 027.



# காலம்தான் எப்படிப் பறக்கிறது

பிள்ளைப் பருவம் சின்னஞ்சிறு பொன்னான நினைவுகளை விட்டு விட்டுப் பறந்தே போய்விட்டது. அப்பயணத்தில்தான் எத்தனை எத்தனை சாதனைகள்.... பிஞ்சுக் காலெடுத்து முதலடி வைக்கையில் பெருமிதத்துடன் நோக்கும் பெற்றோர், கொஞ்சு மழலையின் முதல் வார்த்தை, குஞ்சுக் கால்களுக்கு முதல் ஷூஸ், பள்ளியில் அந்த முதல் நாள்.... கண்ணிமைக்கும் நேரத்தில் காட்சி மாறுகிறது. பொறுப்புகள், கவலைகள், எடுக்க வேண்டிய தீர்மானங்கள், முடிக்க வேண்டிய வேலைகள். சுதந்திரமே சுமையாகிறது! எதிர் நோக்கியிருக்கும் பொறுப்புகளுக்கு ஆயத்தம் செய்வதற்குள் பிள்ளைப் பருவம் கொள்ளை போய்விட்டது போல் தோன்றும்.

உங்கள் குழந்தைக்கு உங்களால் இயன்ற அளவு பாதுகாப்பும் தன்னம்பிக்கையும் கொடுங்கள்... ஆயுள் இன்சூரன்ஸும் அந்தப் பொறுப்பில் பங்கேற்கச் செய்யுங்கள். கச்சிதமான எல் ஐ ஸி பாலிஸி ஒன்று எதிர் காலத்தில் அவனுக்கோர் உறுதியான பொருளாதார அஸ்திவாரத்தை அமைத்துத் தரும்... அவன் நடக்கும் பாதையை உறுதியாக்கும்.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்போரேஷன் ஆப் இந்தியா**

daCunha/LIC/146/83/TM

# மூட்டுவலிகள், முடக்குவாதம்



**கட்டுரைக்குள் நுழையுமுன் ஒரு குட்டித் துணுக்கு:**

**பெண்மணி ஒருவர் டாக்டரிடம் போய், "இந்த வலதுகால் மூட்டில் ஒரே வலி டாக்டர். நீட்டி மடக்க முடியவில்லை. என்ன காரணமாயிருக்கும்?" என்று கவலையுடன் கேட்டார்.**

**"வயது ஆகவில்லையாம்மா? அதுதான் காரணம்!" என்றார் டாக்டர்.**

**"அப்படியானால் இந்த இடது காலுக்கும் அதே வயதுதானே டாக்டர். அது சரியாக இருக்கிறதே?" என்றாராம் பெண்மணி.**

**டாக்டர் சுருக்கமாக அப்போதைக்கு ஒரு பதிலைச் சொன்னால் இப்போதெல்லாம யாரும் எளிதாகத் திருப்தி அடைந்து விடுவதில்லை என்பதற்கு இது ஓர் உதாரணம்!**

கை—கால் மூட்டு வலி, முடக்குவாதம் என்கிற ஆர்த்ரைடிஸ் — இவை மூட்டுக்கள், தசைகள், இவற்றைச் சார்ந்த தசைநார்கள், ஜவ்வுகளால் ஏற்படக் கூடிய நோய்கள். சாதாரணமாக, ருமட்டாய்ட் ஆர்த்ரைடிஸ் பெண்களுக்கும், ஆஸ்டியோ ஆர்த்ரைடிஸ் வயதானவர்களுக்கும் வரக் கூடியவை. இதைத் தவிர, ஃபைலேரியாஸிஸ் எனும் யானைக்கால் ஜுரம், ஸ்ட்ரப்டோகாக்கஸ் நுண்கிருமிகள் மற்றும் சில விஷக் கிருமிகளாலும் கூட மூட்டுக்களும், தசைகளும் தாக்கப்படுகின்றன.

ருமட்டாய்ட் ஆர்த்ரைடிஸ் ஒரு நாள்பட்ட நோய் — க்ரானிக் டிஸீஸ். அதாவது, ஆரம்ப கட்டங்களிலேயே மும்முரமாக வைத்தியம் செய்து கொள்ளாவிடில், விரல்கள் அல்லது கால், கை சேர்ந்த மூட்டுக்கள் இறுகிச் செயல் படாமல் போய் விடும். இப்போதெல்லாம் இதை ஆட்டோ இம்யூன் வகையைச் சேர்ந்த நோய் என்கிறார்கள். அதாவது நோயாளியின் உடலிலேயே உள்ள மூட்டுக்கள் மற்றும் தசைகளிலிருந்து விடுபடும் புரதம் (ஆன்ட்டிஜென்) மூட்டுக்குள்ளிருக்கும் உள்ளுறையைத் தாக்குகிறது. ஆகவே இவை எப்போது வேண்டுமானாலும் மும்முரம் அடைந்து, தானாகவே குறையவும் செய்யலாம். நாளடைவில் இந்த மூட்டுக்கள் செயல்படாமல் இருப்பதால் இதை முடக்குவாதம் என்கிறார்கள்.

முதுகுத் தண்டு எலும்பு வில்லைப்போல் வளைந்து கூனல் விழுந்து சிலர் அவதிப்படுவதைப் பார்க்கிறோம். இவர்கள் ஆங்கிலோஸிங் ஸ்பாண்டிலைடிஸ் என்ற நோயினால் தாக்கப் பட்டவர்கள். பொதுவாக, இந்த வியாதிகளுக்கு, குறிப்பிட்ட சில மருந்துகள் மட்டுமே நோயினால் ஏற்படும் வலியைக் குறைப்பதற்கு உபயோகிக்கப்படுகின்றன. உதாரணமாக: ஸாலிஸிலேட்ஸ், ஆஸ்பிரின், ஃபீனைல் ப்யூடோஸோன் என்ற வகை மருந்துகள். இவை உடலின் வெள்ளணுக்கள் உற்பத்தியாகும் இடத்தைத் தாக்கக் கூடியவை. எனவே எச்சரிக்கை தேவை.

எலும்புகள் மடங்கிக் குறைபாடுகள் ஏற்பட்டுவிட்டால், அவைகளைச் செவ்வனே திருத்துவதற்குச் சில ரண சிகிச்சை முறைகள் செய்யப்படுகின்றன. மூட்டுக்களுக்கு வலு கொடுப்பதற்காக ஸ்பிளின்ட்ஸ் எனப்படும் அலுமினியத் தகடுகளை (பெல்ட் போல்) உபயோகிக்கலாம்.

**இந்த நோய்களைக் கண்டுபிடிக்க உபயோகப்படும் சில சோதனைகள்:**

1. எக்ஸ்—ரே: மூட்டுக்கள் பழுதடைந்து விட்டனவா, எலும்புகள்சாதாரணமாக இருக்கின்றனவா என்று தெரியும்.
2. ரத்தப் பரிசோதனை — முக்கியமாக Aso Titer எனப்படும் ஆன்ட்டி ஸ்ட்ரெப்டோலைஸின் ஓ — மூலம் புரதங்கள் (anti body) அளவு.

“வேலையில் சுறுசுறுப்பு, வாழ்வில் பர்பரப்பு—தெம்பும்யமாக வாழ்கிறேன் தெம்புக்குப் பருகுகிறேன் விவா.”



3. இ.எஸ்.ஆர்: சிவப்பு அணு ரத்தத்தில் படியும் விகிதம் — இது சாதாரணமாக 8—லிருந்து 10 மி.மீட்டர் இருக்கும். இம்மாதிரியான நோய்கள் பிடிக்கப் பட்டிருந்தால் 30, 40 மடங்கு அதிகமாக இருக்கும்.

இந்த நோய்களின் தனித்தன்மை உடல் வலி, மூட்டுக்களின் பிடிப்பு. ஆகவேதான் ஒத்தடம், தைலங்கள் மற்றும் வலி குறைக்கும் மாத்திரைகள் வெகு நாட்களுக்குச்சாப்பிட வேண்டி வருகிறது. இந்த மாத்திரைகளினுலேயே சிலருக்கு வயிற்றுப் புண், வயிற்றுவலி போன்றவை ஏற்படலாம். ஆகவே மருத்துவர் ஆலோசனைப்படிக் குறைத்தோ, அல்லது கூட்டியோ மருந்துகளை உட்கொள்ள வேண்டும். ஃபிஸியோதெரபி மூலமாக, மூட்டுக்களின் பிடிப்புகளையும் அதனுல் ஏற்படும் வலிகளையும் குறைக்கலாம்.

## நவீன வசதிகள்:

முடநீக்கு இயல்துறை – ருமாட்டிக் கேர் சென்டர் – என்று இந்த வியாதிகளுக்கு மட்டுமே சிகிச்சை அளிக்க அரசுப் பொது மருத்துவமனையில் ஒரு பிரிவு இருக்கிறது. பொது மக்களுக்கு இந்நோய்கள் பற்றிய விவரங்களும், நவீன முன்னேற்றங்களையும் தெரிவிப்பதற்காக ஆர்த்ரைடிஸ் அசோசியேஷன் மற்றும் ஹிப் ஜாயின்ட் சொசைடி என்ற பெயர்களில் எல்லாம் அமைப்புக்கள் உள்ளன.

இந்நோயினுல் குறைபாடு ஏற்பட்டவர்களுக்கென்றே சில விசேஷ சக்கர நாற்காலிகள், ஸ்பூன்கள் கிடைக்கின்றன. அமெரிக்காவிலுள்ள ஆர்த்ரைடிஸ் அசோசியேஷன் அவ்வப்போது இந்நோயாளிகளுக்குப் புத்தகங்கள் மற்றும் புதிய தகவல்களைத் தபால் மூலம் அனுப்புகிறது.

## தடுப்பு முறைகள்:

உடல் வலி, மூட்டு வலி, இவற்றைச் சரியான முறையில் அமர்தல், அல்லது படுத்தல் - இவைகளாலேயே தடுக்கலாம். ஸ்கூட்டர், ஆட்டோரிக்ஷா அல்லது சைக்கிள் ஓட்டுபவர்கள், வலி தோன்றும்போது, பத்து நாட்கள் வாகனங்களை ஓட்டாமல் இருந்து உடலுக்கு ஓய்வு கொடுத்தாலே போதும்.

ருமட்டாய்ட் ஆர்த்ரைடிஸ் மற்றும் ஃபைலேரியா போன்ற நோய்கள், உடலிலே எங்காவது ஓர் இடத்தில் கிருமிகள் இருந்து அவை அதிகம் பெருகிவிடுவதனுல் கூட உண்டாகின்றன. உதாரணமாக— சைனஸ் இன்ஃபெக்ஷன், சொத்தைப்பல், கட்டி இவை இருந்தால் தகுந்த ஆன்டிபயாடிக் மருந்துகள் உட்கொண்டு உடனே தவிர்க்கலாம்.



# Research is People

Because two out of three illnesses cannot be cured, there is a worldwide need for new and better drugs. But even a single drug takes tremendous investment. In research, in advanced technology, in funds. Not many companies can risk it. But Hoechst does.

In 1972, Hoechst set up a Basic Research Centre in Bombay to fight disease, to promote health in India. Here work Indian researchers who have won the scientific world's respect for their work on cardiovascular, infectious and tropical diseases.

Hoechst research is based on natural products from micro-organisms and medicinal plants. In the last 10 years a number of active compounds have been discovered. Out of these, Forskolin and Trequinsin are unique drugs in clinical development with tremendous therapeutic potential.

Pharmaceutical research is costly and risky. Yet, Hoechst has already spent Rs 16 crores and will have spent Rs 2.1 crores this year. Why has Hoechst done it? Because, traditionally, Hoechst in India and the Hoechst group worldwide, have enormous faith in research for a healthier future for all of us.

**Agrochemicals, Animal Health Products, Biologicals, Pharmaceuticals... that's Hoechst in India!**

**28** 1956-1984 years of service in India

**Hoechst**

ADPLAN-HT-2



# நல்வாழ்வுக்கான பத்துக் கட்டளைகள்

| உயரம் (மீட்டரில்) | இருக்கவேண்டிய எடை (கிலோவில்) | |
|---|---|---|
| | ஆண் | பெண் |
| 1.523 | – | 50.8–54.4 |
| 1.548 | – | 51.7–55.3 |
| 1.574 | 56.3–60.3 | 53.1–56.7 |
| 1.599 | 57.6–61.7 | 54.4–58.1 |
| 1.625 | 58.9–63.5 | 56.3–59.9 |
| 1.650 | 60.8–65.3 | 57.6–61.2 |
| 1.675 | 62.2–66.7 | 58.9–63.5 |
| 1.701 | 64.0–68.5 | 60.8–65.3 |
| 1.726 | 65.8–70.8 | 62.2–66.7 |
| 1.752 | 67.6–72.6 | 64.0–68.5 |
| 1.777 | 69.4–74.4 | 65.8–70.3 |
| 1.802 | 71.2–76.2 | 67.1–71.7 |
| 1.828 | 73.0–78.5 | 68·5–73.9 |

(இந்த அட்டவணையில் 5 அடி முதல் 6 அடி உயரம் வரை மட்டுமே எடை விவரம் தரப்பட்டுள்ளது.)

1. மனமே நோய்க்குக் காரணம். அதை எப்போதும் சந்தோஷமாக வைத்திருங்கள்.

2. உடல் ஆரோக்கியத்துக்கு உங்களால் முடிந்த வரை தேகப் பயிற்சி அவசியம். குறைந்த பட்சம் 'ஸ்கிப்பிங்' ஆவது செய்யலாம். தினசரி ஒழுங்காகச் செய்துவர வேண்டும்.

3. ஊட்டச் சத்து நிறைந்த உணவு. ஆடம்பரமாக வேண்டியதில்லை.

4. அடிப்படை மருத்துவப் பரிசோதனை. (Health check up)



குழந்தைகளைப் பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதற்கு முன்னால் நோய்த் தடுப்பு ஊசிகள், மருந்துகள் கொடுக்கப்பட்டாக வேண்டும். இளம்பிள்ளை வாதம், தொண்டை அடைப்பான், பிரைமரி காம்ப்ளக்ஸ் போன்றவற்றிலிருந்து தப்புவதற்காக முத்தடுப்பு மருந்து அவசியம் தரப்பட்டு விட வேண்டும். பள்ளிக்கூடங்கள் போன்ற பொது இடங்களில் சுத்தமான தண்ணீர் கிடைக்கும் என்று சொல்ல முடியாது. முன் ஜாக்கிரதைதான் தேவை. குழந்தைகளின் உயரம் எடையை அவ்வப் போது கவனித்துக் கொள்ள வேண்டும். (இன்ன வயதில் இவ்வளவு எடை இருந்தாக வேண்டும் என்று கணக்கு இருக்கிறது. பட்டியலைப் பார்க்கவும்.) வயிற்றில் குடல்புழு போன்றவை வராமல் இருக்கப் பூச்சி மருந்து கொடுக்க வேண்டும். குழந்தைகளுக்கு ஆரம்பத்திலேயே சுத்தம், சுகாதாரம் இவற்றைக் கற்றுத் தந்து விடுங்கள். நகங்களை வெட்டி அழுக்குச் சேராமல் வைத்திருப்பது, ஒழுங்காகப் பல் தேய்ப்பது, காதுகளில் அழுக்குச் சேராமல் பார்த்துக் கொள்வது, தலைமயிரில் பேன் பொடுகு இல்லாமல் சுத்தமாக இருப்பது — எல்லாவற்றையும் கற்றுக் கொடுங்கள்.



பெண்களானால், வயதுக்குத் தகுந்த உயரம் எடை பார்க்க வேண்டும். மாத விலக்கு, ஒவ்வொரு மாதமும் தவறாமல் நிகழ்கிறதா என்று கவனிக்கவேண்டும். தாமதப் படுவதோ, கூடுதல் குறைவாக நிகழ்வதோ நல்லதல்ல.

தினசரி வழக்கமான குடும்ப வேலைகளைச் செய்கிறபோது, களைப்போ, சோர்வோ ஏற்படாமலிருக்கிறதா என்பதைக் கவனியுங்கள்.

நடுத்தர வயதில் (40–45) ஆண்களானாலும் பெண்களானாலும், குடும்ப டாக்டரிடம் கலந்து, மருத்துவசோதனை செய்து கொள்ள வேண்டும். இதை ஒரு புத்தாண்டுப்பரிசாகவே கொள்ளலாம்.

1. உயரம், எடை சரிபார்த்தல்.
2. இரத்த அழுத்தம்.
3. இரத்தத்தில் சர்க்கரை.
4. கொலஸ்ட்ரால்.
5. தேவையானால் சிறுநீரில் சர்க்கரை இருக்கிறதா என்று சோதித்துக் கொள்ளலாம்.

இந்த வயதில் சாதாரணமாக வரக் கூடிய நோய்கள் இரத்த அழுத்தம், நீரிழிவு இவை மட்டும்தான். புற்று நோய் போன்றவை சாதாரணமாக எல்லோருக்கும்வராது. இன்னும் வயதான பெரியவர்களானால், இ. ஸி. ஜி. எக்ஸ்ரே சோதனைகள் செய்து கொண்டால் போதும். ஹெல்த் சென்டர், போன்ற சேவை மனப்பான்மை கொண்ட மருத்துவமனைகளில் சோதனைகளைச் சிக்கனமாகச் செய்து கொள்ளலாம். அதிகபட்சம் ஒருவருக்கு நாற்பது ரூபாய் ஆகலாம்.

| | |
|---|---|
| எக்ஸ்ரே | — ரூ. 15/- |
| இ. ஸி. ஜி. | — ரூ. 10/- |
| சர்க்கரை, கொலஸ்ட்ரால் | — ரூ. 15/- |

கோளாறில்லை, சரியாய்த்தான் இருக்கிறது என்று சோதனைகளில் தெரிந்தால் நிச்சயமாக அடுத்த ஆறு மாதங்களில் எதுவும் மோசமாக ஆகிவிடாது. குடி, சிகரெட் என்று அளவு கடந்து போனால் தவிர.

மருத்துவச் சோதனைகளுக்கு என்று ஒரு கணக்கு: பட்ஜெட் என்றே சொல்லுவோம். கணவன், மனைவி இரண்டு பேரும் சம்பாதிக்கிற குடும்பங்களில், ஒரு அளவான குடும்பத்துக்கு மாதம் ஆளுக்கு ரூ. 10.00 என்று ஒதுக்கி வைத்தால் போதும். கணவன், மனைவி— ஆளுக்குப் பத்து ரூபாய் என்றால் ஆண்டுக்கு 240 ரூபாய். கணவன், மனைவி, இரண்டு குழந்தைகள், தாத்தா, பாட்டி – இதுதான் நம்முடைய கணக்குப்படி அளவான குடும்பம்.



டிசம்பர் கடைசியில் மருத்துவச் சோதனையைச் செய்து கொண்டால், அடுத்த ஆண்டுக்கு நம்மை ஆரோக்கியமான வாழ்வுக்குத் தயார் செய்து கொண்டுவிடலாம். தொடர்ந்து இரண்டு மூன்று வருடங்களில் மருத்துவச் சோதனைகளில் கோளாறு ஏதும் இல்லை என்றால், அடுத்த வருஷம், இந்தப் பணத்தில் குடும்பத்தில் அனைவரையும் அழைத்துக் கொண்டு எங்காவது 'பிக்னிக்' சென்று வரலாம்!

5. ஆண்டுக்கு ஒரு முறையாவது குடும்பம் முழுவதையும் அழைத்துக் கொண்டு எங்காவது போய் விடுமுறையைச் செலவிடுவது. நீண்ட பயணம் என்பதில்லை. வெகு அருகில் உள்ள ஏதாவது ஒரு கோவிலோ, குளமோ போனால் கூடப் போதும்.



6. ஏதாவது ஒரு பொழுது போக்கில் மனதை ஈடுபடுத்துங்கள். வழக்கமான வேலைகளிலிருந்து மாறுதல் பெறுவது உற்சாகமளிக்கும். சங்கீதம் கேட்பது, ஸ்டாம்ப் சேர்ப்பது, சில பேருக்கு ஆசிரியருக்குக் கடிதங்கள் எழு



‘‘வியர்வை நாற்றத்தை போக்கும் வலிமையுள்ளது நீகோ சோப். ஏனெனில் அது மருந்துப்பொருள் கலந்தது. சாதாரண சரும நோய்களிலிருந்துகூட நீகோ எனக்கு பாதுகாப்பளிக்கிறது.

நான் நீகோவை விரும்பி உபயோகிக்கிறேன். அது எதார்த்தமான தூய்மை தந்து புத்துணர்ச்சி ஊட்டுகிறது.’’

# NEKO®




**சரும பராமரிப்பிற்கான மருந்துப் பொருள் கலந்த சோப்**

**PARKE-DAVIS**

® Regd. Trademark – Regd. Users-Parke-Davis (India) Ltd., Bombay 400 072

JAISONS P 38-I



பத்திரிகைகளுக்கு எழுதியனுப்புவதிலேயே பொழுது போகிறது. கேள்வி–பதில் பகுதியில் சில பெயர்களை அடிக்கடி பார்க்கிறோமே! இதுவும் நல்ல பொழுது போக்குத்தான்.

7. பரபரப்பு அடையாமல் நிதானமாக இருக்கப் பழகிக் கொள்ளுங்கள். பள்ளிக்கூடம் விட்டு ஐந்து மணிக்கு வர வேண்டிய குழந்தையைக் காணுமே என்று ஐந்தே காலுக்கே பரபரப்பு அடையாதீர்கள். எப்போதும் விபத்தையும், ஆபத்தையும் எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிற மனநிலை, ஆரோக்கியமான வாழ்க்கையைக் கெடுத்துவிடும்.

8. மற்றவர்களின் நோய் அறிகுறிகளை வைத்து உங்களுக்கும் அந்த நோயோ என்று ஒப்பிட்டுப் பார்க்காதீர்கள். உடற்கூறு ஆளுக்கு ஆள் மாறுபட்டது.



9. தினசரி ஒரு குறிப்பிட்ட நேரத்தில் பத்து நிமிஷமாவது மனசைத் தெளிவாக வைத்து அமைதிப்படுத்திக் கொள்ளப் பழகிக் கொள்ளுங்கள். ஓசைகள் இல்லாத நிலையில் கண்களை மூடிக்கொண்டு தியானம், அல்லது வெறுமனே ரிலாக்ஸ் பண்ணிக் கொள்ளலாமே!

10. எதன் மீதும் நம்பிக்கையிழக்காதீர்கள். மற்றவர்களையும், உங்களையும் கூடுமானவரை நம்பப் பழகிக் கொள்ளுங்கள்.

இந்தப் பத்துக் கட்டளைகளையும் ஒழுங்காகப் பின்பற்றி வருவீர்களானால், உங்களுடைய ஆரோக்கிய வாழ்வுக்கு யாரும் குறுக்கே வர முடியாது.

---

# முன்னெச்சரிக்கை முக்கியம்

● இந்தச் சிறப்பு மடலின் மேலட்டையில் திருமதி விஜயா, குழந்தை மனீஷாவுடன் டாக்டர் சுசீலா சாம்பமூர்த்தியும் காணப்படுகிறார்.

குழந்தைக்கு என்ன உடம்பு?

''ஒன்றுமில்லை ரொடீன் செக் அப் தான்'' என்று கூறும் டாக்டர் சுசீலா சாம்பமூர்த்தியை ''உங்களை நிஜமாகவே கலங்க அடித்த கேஸ் எது?'' என்று கேட்ட போது சொன்னார்:

''ஒருநாள் இரவு மூன்று மணிக்கு நான் குழந்தைகளுக்கு மருத்துவம் பார்க்கும் சுபேதா கிளினிக்கிலிருந்து ஃபோன்! அங்கே அனுமதிக்கப்பட்டிருந்த ஓர் அயல் நாட்டுக் குழந்தை இரத்தமாக வாந்தி எடுக்கிறது. நினைவு தப்பிவிட்டது! மூச்சு விடவும் கஷ்டப்படுகிறது!

''குழந்தை கேத்தியின் பெற்றோரை ஏசுவுக்குப் பிரார்த்தனை செய்யச் சொல்லிவிட்டு ஐந்து நாள் இரவு பகல் போராடினேன்: தீவிர கவனிப்புப் பகுதியில் வைத்து சலைன் ரத்தநாளத்தில் ஏற்றினேன். நானும் சாயிபாபாவை எண்ணிப் பிரார்த்தித்தேன். இறையருளும் மருந்துகளும் கவனிப்பும் சேர்ந்து குழந்தையைக் காப்பாற்றி விட்டன. பிழைத்தது புனர்ஜன்மம்தான். கேத்திக்கு வந்தது மிகக்கொடிய நோய். பல்பார்போலியோ எனப்படும். உயிர் பிழைத்தாலும் வாழ்நாளெல்லாம் அங்க ஹீனத்துடன் வாழ நேரும். அவள் பெற்றோர் எவ்வளவோ படித்தவர்களாயிருந்தும் போலியோ சொட்டுக்களைக் குழந்தைக்குக் கொடுக்கவில்லை. இந்தத் தடுப்பு மருந்து கொடுத்திருந்தால் நோயே தாக்கியிராது சேத்தியை. தீவிர கவனிப்பு இருந்ததால் கேத்திக்கு வாய் மட்டும் ஒரு பக்கம் திரும்பியுள்ளது. மற்றபடி ஆரோக்கியமாய் இருக்கிறாள். காலப்போக்கில் வாயும் சரியாகிவிடும்.''



இவ்வாறு போலியோ தடுப்பு ஊசி தர வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்திக் கூறும் டாக்டர் சுசீலா சாம்பமூர்த்தி திருமணமாகுமுன் ஜாதகம் பார்த்துக் கொள்வது போல் ரத்தப் பரிசோதனையும் செய்து கொள்வது நல்லது என்று கருதுகிறார். சிலசமயம் பிறக்கப் போகும் குழந்தையைப் பாதிக்கும் விதமாக கணவன் – மனைவியிடையே ரத்த குரூப் அமைவதுண்டு என்பதால் இந்த முன்னெச்சரிக்கை அவசியம் எனக் கருதுகிறார்.

தகவல்: ரிக்கி

வண்ணப்படம்: உத்ரா

# விஷங்களும் விளைவுகளும்



1. விஷம் உட்கொள்ளுதல் (பாய்ஸனிங்) நான்கு வகைப்படும். தானாகவே விஷ மருந்துதல்; தற்கொலை முயற்சி; கொலை செய்யும் நோக்கத்துடன் வேண்டுமென்றே விஷம் கொடுப்பது; அறியாது விஷமருந்தி விடுதல். தானாக விஷம் அருந்துபவர், தான் இறக்க வேண்டும் என்று தீர்மானித்து அப்படிச் செய்வதில்லை. தங்கள் சுற்றத்தாரிடமிருந்தும் நண்பர்களிடமிருந்தும் அநுதாபம் பெறும் நோக்கத்துடன் மட்டுமே இப்படிச் செய்வதோடு, இதில் வெற்றியும் அடைகின்றனர்!

> 2. ஒருவர் விஷம் உட்கொண்டதாகக் கருதினால், நீங்கள் செய்ய வேண்டியவை:
>
> விஷம் உட்கொண்டவர் நினைவோடு இருந்தால், உப்பு நீரைக் குடிக்கச் செய்து வாந்தி எடுக்குமாறு அவரைத் தூண்டலாம்; அரை மயக்க நிலையில் இருந்தால் இப்படிச் செய்யவே கூடாது. ஏனென்றால் மூச்சுக் குழலின் மாற்றுப் பாதையில் சென்று, அதனாலேயே அவர் இறக்க நேரிடும். மாத்திரைபுட்டி அல்லது தற்கொலை முயற்சிக்கான தடயங்கள் ஏதும் இருக்கிறதா என்று பார்க்கவும்.

3. கடுமையான விஷத்தன்மைகொண்ட மருந்துகளை வீட்டில் வைத்துக் கொள்ளாமலிருப்பது நல்லது. அப்படியே இருக்க நேர்ந்தாலும், குழந்தைகளின் கைக்கு எட்டாதவாறு வைக்க வேண்டும். பொதுவாக, மருந்துகள் எதுவும் முதலுதவியின் போது கொடுக்கத் தேவையில்லை.

**கவனமாக இருங்கள்:**

4. தற்கொலை முயற்சி செய்பவர்கள் விஷம் சாப்பிட, கீழ்க்கண்ட மருந்துகளைத் தான் உபயோகிப்பார்கள்: பினோபார்பிடோன், டயாஸிபான், க்ளோர்–புரோமாஸோல் முதலிய தூக்க மாத்திரைகள் தவிர, மனச்சோர்வுக்கு உட்கொள்ளும் மாத்திரைகள்; எப்டாயின், மஸாடால் முதலிய வலிப்புக்குக் கொடுக்கும் மருந்துகள்; டாப்ஸோன் முதலிய தொழு நோய்க்கான மருந்துகள்; ஐ. என். எச். முதலிய காச நோய்க்கான மருந்துகள்; ஆன்ட்டிஹிஸ்டாமின் வகையைச் சேர்ந்த அவில் முதலான மாத்திரைகள். ஆகவே இந்த மருந்துகளை, டாக்டரின் சீட்டு இல்லாமல் மருந்துக் கடைக்காரர்கள் விற்கவே கூடாது. இது சட்டப்படி குற்றமாகும்.

5. உடலுக்கு ஒவ்வாத காரணத்தினால், சிலருக்கு, சில குறிப்பிட்ட மருந்துகள் அலர்ஜியை உண்டாக்கும். ஒரு வகை பூச்சிக் கடி கூடச் சிலருக்கு அலர்ஜியை உண்டாக்கும். சில சமயம் பூச்சிக்கடிகளால் ஏற்படும் நோய்க் குறிகள், விஷம் உட்கொண்டதைப் போலவே இருக்கும்.

> 6. தற்செயலான, அல்லது அறியாமல் விஷம் உட்கொண்டுவிட்ட கேசுகள் தவிர, மற்றவை எல்லாமே போலீஸ் கேசுகள்தாம்.

7. ஓர் அனுபவத்தைச் சொல்லுகிறேன்: ஒரு கல்லூரி மாணவரை மயக்க நிலையில் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்தார்கள். உறங்கப் போகுமுன் சரியாக இருந்தவர் இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு மூச்சு விடத் திணறியதோடு மயக்கம் அடைந்தார். அன்று தீபாவளி ஆதலால் ரத்தப் பரிசோதனை நிலையங்களை மூடிவிட்டதால், ரத்தப் பரிசோதனையும் செய்ய முடியவில்லை. பிறகுதான் அவர் பினோபார்பிடோன் சாப்பிட்டதாகக் கண்டுபிடித்தார்கள். அந்த மாணவரும் ஒப்புக் கொண்டார். *

8. விஷ மருந்துகளை அவசியம் இருந்தால் ஒழிய வீட்டில் வைத்துக் கொள்ளாதீர்கள். பூச்சி மருந்துகளை மீதி வைத்துக் கொள்ளாமல் ஒரேயடியாகத் தீர்த்து விடுங்கள். சமைத்த உணவுப் பண்டங்களை மூடியே வைத்திருங்கள். ஆறிப் பழசாகிப் போன உணவை உண்ணாதீர்கள்.

**-டாக்டர் தாயுமானவர் எம்.டி.**

**தொகுப்பாசிரியர் குறிப்பு:**

குழந்தைகளைக் கவரும் வர்ணம் கொண்ட மாத்திரைகளை அவர்கள் எதிரே உட்கொள்ளாதீர்கள். குழந்தை உணவு டப்பாக்களிலோ, கவர்ச்சியான டானிக் பாட்டில்களிலோ பூச்சிமருந்து, மண்ணெண்ணெய் போன்றவற்றை ஊற்றி வைக்க வேண்டாம். தீர்ந்து போன பாட்டரி செல்களைக் குழந்தைகளிடம் விளையாடக் கொடுக்காதீர்கள்.

---

* ஆகவே கூட இருப்பவரோ, உறவினரோ, ஒருவர் எந்த மருந்துகளை உபயோகிக்கிறார்; அவற்றின் தன்மை என்ன என்பதை அறிந்துவைத்திருப்பது முக்கியம்.

## ஷா வாலஸ் வழங்கும்

சூப்பர் பவர்

# ரீகல்

டிடர்ஜெண்ட் கட்டி



## அழுக்கைத் தகர்த்திடும்

## துணிகளைக் காத்திடும்

ரீகலின் அபார சலவை சக்தி, உங்கள் துணிகளில் விடாப்பிடியாகப் படிந்திருக்கும் அழுக்கைத் தகர்த்து விரட்டுகிறது. உங்கள் துணிகளை அதிவெண்மையாகவும் பளிச்சென்றும் சலவை செய்கிறது.

மேலும் ரீகலின் பாதுகாப்பான சலவை உங்கள் துணிகளுக்கு இதமானது. மென்மையானது... புதுமையான நறுமணத்துடன் கூட.






ஷா வாலஸின் தரமான தயாரிப்பு

Shaw Wallace

ACIL/0592/83-Tam-R

# தீப்புண்ணா?



## உடனே தடவுங்கள் பர்னால்—
## சுட்ட புண்களுக்குச் சிறந்த சிகிச்சை.

தீப்புண்கள் வித்தியாசமானவை. தீயினால் சுட்ட புண் தீவிர வேதனை தரும். கொப்புளங்கள் ஆகும். அவற்றுக்குத் தேவை சிறந்ததொரு மருந்து. அதுவே பர்னால். பர்னால், குளுமை தருகிறது. இதமாக ஆற்றுகிறது. கொப்புள மேற்படுவதை உடனே தடுக்கிறது. பர்னால் ஆண்ட்டிஸெப்டிக் க்ரீம்— தீப்புண்கள் விரைவில் ஆறத் தேவையானதைக் கொண்டது.

வீட்டில் எப்போதும் வைத்திருங்கள் பர்னால்.




# பர்னால்

தீப்புண்களுக்குச் சிறந்த சிகிச்சை.

HTB-BCL-5641 R

# தூய குடிநீரைக் குடும்பத்தினருக்கு அளிப்பது தாயன்பின் பிரதிபலிப்பன்றோ!



## அவளது நம்பிக்கைக்குப் பாத்திரமானது வீலன் வாட்டர் ஃபில்டர்.

குடிப்பதற்கு நீரைக் கொதிக்க வைத்தால் மட்டும் போதாது. வீலன் வாட்டர் ஃபில்டர் உங்கள் பாதுகாப்பிற்கென்றே விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்டுள்ளது. உதாரணமாக இதிலுள்ள தனிப்பட்ட லோஹைட் காண்டில் விஞ்ஞான முறையில் அமைக்கப்பட்ட நுண்ணிய துளைகள் கொண்டதாகும். அதன் விளைவாக, மிகச் சிறிய பதார்த்தங்களும் வடிகட்டப்பட்டு உங்களுக்கு சுத்தமான குடிநீர் கிடைக்கிறது.

இந்த வாட்டர் ஃபில்டரின் கலம் உறுதியான பாலிப்ரொபிலீன் கொண்டு உருவாக்கப்பட்டதாகும். அதனால் வீலன் வாட்டர் ஃபில்டர் விரிவதோ நசுங்குவதோ, அரிக்கப்படுவதோ இல்லை.

வீலன் வாட்டர் ஃபில்டர் மூலம் சுத்தமான குடிநீர் பெற வழி செய்து குடும்பத்தினரின் நலனைப் பாதுகாப்பீர்.




**எல்லா முக்கிய ஸ்டோர்களிலும் கிடைக்கிறது.**




விற்பனைக்கு விடுப்போர்:

**வோல்டாஸ் லிமிடெட்**

அப்ளையன்ஸஸ் டிவிஷன், 19, ஜே.என். ஹெரெடியா மார்க், பலார்ட் எஸ்டேட், பம்பாய்-400 038.

CLARION/V/1/162 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# Prompt after-sales service —cuts down-tool time.



# Wolf

## That's value added to reliability.



In the field for decades, Wolf has the age, the experience, and the understanding of power tool users' needs. We know that your industrial development and growing production needs call for more efficient servicing of your power tools. Our nationwide service network is organised to provide preventive, regular and breakdown maintenance services within easy reach—and to render them promptly.




Manufactured by Ralliwolf Limited.
Marketed by Rallis India Limited.
Bombay • Calcutta • Delhi • Madras

